# உள்ளுறை

## சமாசப் பகுதி



## படங்கள்







## விளம்பரங்கள்





## தாய் வணக்கம்

காதொளிருங் குண்டலத்தாள்
கனிமொழியாள் வாழ்க!
கைக்குவளை யாபதிகொள்
கன்னிகையாள் வாழ்க!

மேதகுமென் மார்பிடைச்சிந்
தாமணியாள் வாழ்க!
மின்னுமணி மேகலைசூழ்
மெல்லிடையாள் வாழ்க!

சீதமலர்ப் பாதமொலிச்
சிலப்புடையாள் வாழ்க!
சேரசோழ பாண்டியர்தஞ்
செல்வமகள் வாழ்க!

நீதியுறுஞ் செங்கோலாய்த்
தூயகுறள் தாங்கும்
நிகரறியாச் செந்தமிழ்த்தாய்
நீடூழி வாழ்க!



# சமூகத்தொண்டன்

ஜுன் | பிலவ, ஆனி; திருவள்ளுவர் ஆடு 1992 | 1961

## ★ மலரும் குறிக்கோளும் ★

உலகிலே சென்ற நூற்றாண்டிற் கைத்தொழிற் புரட்சியும் இந்த நூற்றாண்டில் விஞ்ஞானப் புரட்சியும் வேகமாய் முன்னேறியதுபோல ஈழத்திலே சென்ற சில ஆண்டுகளுக்குள் ஓர் இலக்கியப் புரட்சி ஏற்பட்டு வளர்ந்து வருகிறது. எழுததாளர்களும் இலக்கிய இரசிகர்களும் ஒத்துழைத்து நடத்தும் இவ்வறிவுப் புரட்சிக்கு அரசினர் கலாச்சாரத் துறைகூட உதவியளிக்கும் நிலை உண்டாகி விட்டது.

இங்நிலையில், சென்ற பதினோராண்டுகளாகச் சாதாரண ஆண்டு மலராக மலர்ந்த சமூகத்தொண்டன் இவ்வாண்டு இலக்கிய மணம் பரப்பும் ஏடாக மலரவேண்டுமென்ற எண்ணம் உதித்தது. அதன்பேறாக சமாசச் செடியிலிருந்து அரும்பாகிப் போதாகி வாடாத வண்ண மலராகி வெளிவருகின்றது.

நாட்டுக்கும் மொழிக்கும் நடந்தேறிய இன்னல்களும் பிற தடைகளும் வந்து தாக்கியமை இதன் மலர்ச்சிக்குக் காலதாமதத்தை ஆக்கியதெனினும் இன்று ஈழத்தமிழகத்தின் இணையற்ற பேனா மன்னர்கள் பலரின் கருத்தாழம் அமைந்த கட்டுரைகள், சுவைக்கும் கதைகள், இனிக்கும் கவிதைகள் தாங்கிச் செந்தமிழ் விருந்தாகச் செம்மையான படைப்பாக வருவது தமிழ்த் தெய்வத்தின் தண்ணருளேயாகும்.

தாய்த்தமிழகத்தெழுத்தாளப் பெருமக்கள் சிலரின் படைப்புக்களும் ஆசிகளும் இம்மலருக்குப் புதுமை தந்து இராமரணையை இலக்கிய அணியாக மாற்றி அமைத்து விட்டமையும் மலருக்குச் சிறப்பாகும்.

நாட்டிலே மொழியும் கலையும் — அறிவும் பண்பும் வளர்க்கும் சனசமூக நிலையங்களும் தாய்ச் சமாசமுமே இம்மலர் வெளியீட்டின் நிலைக்களனாகும். தமிழரின் உள்ளப்பண்பு வளர — கலையுணர்வு பொலிய — தமிழறிவுபெருக — குறழமுதம் நிறைய யாழ்ப்பாணத்துச் சனசமூக நிலையங்கள் சென்ற பதினோராண்டுகளாகச் செய்த பலன் கருதாப் பணிகள் பாராட்டுதற்குரியன. இவ்விதழின் ஈற்றிதழ்களில் அவை செய்த அறிவுப்பணிகளைச் சுருக்கமாகக் காணலாம். நிலைய ஆண்டு விழாக்களிலே, உப விழாக்களிலே, சமாச விழாக்களிலே, பிரதேச கலைமன்ற விழாக்களிலே இந்நிலையங்கள் கலைத்துறைகளிற் காட்டிய திறமைகண்டு தென்னிலங்கை அமைச்சர்களும், பிறநாட்டுத் தூதுவர்களுமே வியந்து மகிழ்ந்து போற்றிப் புகழ்ந்தெழுதிச் சென்றனர் என்றால் விரித்தெழுத வேண்டுமோ?

ஆனாற் பாலப்பருவம் கடந்து பன்னீராட்டைப் பருவ மெய்தும் இந்நிலையசேவை இன்னொரு புதுத் துறையிலும் புகுந்து மலர வேண்டுமென வற்புறுத்துகின்றோம். இது நிலையங்களின் புத்தாண்டுக் குறிக்கோளாக அமையவேண்டும். இன்றைய ஈழத் தமிழகத்தின் இன்னல்களும் தீர இப்புதுத்துறை பயன்படும்.

நாட்டிலே எவை இருந்தும் கூழும் பொருளுமின்றேல் பாழும் நிலையாகுமென்பது வள்ளுவக் கொள்கை. கலை வளர்க்கும் நிலையங்கள் இனிப் பொருள் வளர்க்கும் பணியிலும் இறங்கித் தமிழக வாழ்வுக்குத் தலைகொடுக்க வேண்டும். கலையும் பொருளும் வளரவேண்டும். பண்புடன் பணமும் பெருக வேண்டும். உள முயற்சியோடு உடல் முயற்சியும் ஓங்கவேண்டும். இன்று எமது வாழ்விற் பற்றிப் படர்ந்துவரும் மிடிநோய்க்கு இப்புதுக்குறிக்கோள் நன்மருந்தாகும்.

எனவே இப்புதுக் குறிக்கோளுடன் பொலிந்து புதுமணம் பரப்பிவரும் இந்நறுந்தமிழ்ப் பொன்மலரைப் பலன் கருதாப் பணி புரியும் சனசமூக நிலையங்களின் சார்பிலே இன்றைய இலக்கிய உலகில் எழுந்துவரும் ஈழத்தமிழகத்தின் இணையடியிற் காணிக்கையாகப் படைத்து தமிழ்த்தாயின் அருளை வேண்டி நிற்கின்றோம்.

**தமிழ் வளர்க! தமிழர் வாழ்க!! தமிழகம் உயர்க!!!**

———



# ஆனந்த நடனம்

'வானாகி, மண்ணாகி, வளியாகி, ஒளியாகி, ஊனாகி, உயிராகி உண்மையுமாய். இன்மையுமாய் இருக்கின்ற இறைவனை நம்முன்னோர் தத்துவ ஞானப்பொருளும் கலைச்சிறப்பும் ஒருங்கே நிறைந்த திருவடிவத்தில் அழகு பொருந்த அமைத்து ஆராதனை செய்து மகிழ்ந்தனர். அத்தகைய வடிவமே இன்று தமிழ்நாட்டுக் கோயில்களையும் உலகின் பல்வேறு கலைக்கூடங்களையும் அலங்கரிக்கும் நடராஜ வடிவமாகும்.

அணுக்கள் இயங்க அண்டங்கள் இயங்குகின்றன. அண்டங்கள் இயங்க நமது ஆண்டவனும் இயங்குகின்றார். அதை இயக்குகின்றார், இதுவேதான் நடனம். நடனம் இலகுவிலே ஆடவிட முடியாது. ஆனந்தம் வேண்டும். அளவுக்கு மேற்பட்ட ஆனந்தத்தினால் ஆடும் நடனமே ஆனந்த நடனம் எனப்படும், தில்லையில் திருநடம் புரிகின்ற அற்புதக் கூத்தனது ஆனந்த நடனத்தைக் கண்டு களித்த அப்பர் சுவாமிகள்,

**"குனித்த புருவமுங் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்**
**பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்**
**இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால்**
**மனித்தப் பிறவியும் வேண்டுவ தேஇந்த மாநிலத்தே".**

என்று பரவசப்பட்டுப் பாடியுள்ளார்.

ஆனந்த நடனம்



# ஆண்டுமலரை

சகோதரப் பத்திரிகைகள் - -

- - வாழ்த்துகின்றன!

அறிஞர்கள் ஆசீர்வதிக்கிறார்கள்!!



அன்புடையீர்,

"சமூகத்தொண்டன்" சிறப்புமலர் நன்கு அமைவதாக. உலகம் உய்யவல்ல நல்ல கருத்துக்கள் பொதிந்து மலர் தொண்டு ஆற்றுவதாக. வெல்க தங்கள் முயற்சி!

செல்லம்மாள் தெரு,
சென்னை 30,

**மு. வரதராசன்**
தமிழ்ப் பேராசிரியர்

## "கலைமகள்" வாழ்த்துகிறது!

இலங்கைத் தீவின் வடபகுதி
யாழ்ப்பா ணத்திற் பலவிடத்தில்
துலங்கும் சனச மூகநிலை
யங்கள் நன்கு தொண்டுசெய்தே
இலங்கல் கேட்டேன்; ஆண்டுதோறும்
இயலும் **சமூகத் தொண்ட**னெனும்
நலங்கொள் பெயரில் ஆண்டுமலர் (1)
நல்கல் கேட்டேன்; மிகமகிழ்ந்தேன்

மக்கள் சமூகம் நலம்பெற்றால்
மாட்சி நாட்டுக் குளதாகும்;
தக்க வகையில் ஒற்றுமையும்
சாரும் கல்வி வளர்ச்சியோடு
தொக்க பிணியில் சுகவாழ்வும்
துலங்கின் இன்ப வாழ்வமையும்;
மிக்க நலங்கொள் இத்துறையில்
விழைந்தே உழைப்பார் திருத்தொண்டர் (2)

சனச மூக நிலையங்கள்
சால்பை உயர்த்தும் வழியோடு
மனமும் உடலும் தூய்மையவா
மன்னும் நெறியும் அமைத்துவிட்டால்
தினமும் நன்மை பெருகிவரும்;
சிறந்த சமூகத் தொண்டன்மலர்
கனமுந் தியநல் தொண்டெல்லாம்
கவினச் செய்யும் வழிகாட்டும், (3)

நல்ல இனிய கட்டுரைகள்,
நயமார் பாடல் அறிவுரைகள்,
வல்ல தொண்டின் வழிவகுக்கும்
மாட்சி சாலும் வியாசங்கள்,
ஒல்லும் வகையில் யாவருமே
உழைக்கச் சொல்லும் நல்லுரைகள்,
பல்ல வாய அழகெல்லாம்
பண்பின் அமைந்து விளங்குகவே, (4)

"கலைமகள்"
சென்னை 4.

அன்பன்
**கி. வா. ஜகந்நாதன்**





## "மனம் நிறைந்த வாழ்த்துக்கள்!"

அன்புடையீர்,

வணக்கம் இயல் இசை நாடகம், உடற்கலை வளர்ச்சி, உளக்கலை வளர்ச்சி ஆகிய பல துறைகளிலும் சமூகத்திற்குத் தொண்டாற்றும் பல நிலையங்களின் சார்பில் தாங்கள் **"சமூகத் தொண்டன்"** சிறப்புமலரை வெளியிடுவதறிந்து மகிழ்கிறேன். மலர் சிறப்புடன் வெளிவர மனம் நிறைந்த வாழ்த்துக்கள்.

அண்மையில் ஈழநாட்டிற்கு வந்திருந்தபோது அங்கு ஏற்பட்டிருக்கும் புதிய விழிப்புணர்ச்சியையும் உற்சாகத்தையுங் கண்டு பெருமிதங் கொண்டேன். ஒற்றுமையோடு பல நிலையங்களை இணைத்துச் செயலாற்றும் அந்த தாய்ச்சங்கத்திற்கும் அதன் கிளைச் சங்கங்களுக்கும் என் வாழ்த்துக்கள். ஒற்றுமையின் உயர்வை ஈழநாடு கண்டுகொண்டது. இனி அது தொடங்கும் நன்முயற்சிகள் அனைத்திலும் வெற்றிபெறும் என்பதில் ஐயமில்லை.

1/164 லாயிட்ஸ் ரோடு,
ராயப்பேட்டை,
சென்னை 14.

தங்களன்புள்ள
**அகிலன்**



## "தினகரன்" வாழ்த்துகிறது!

இலங்கைவாழ் தமிழ்மக்கள் தமக்கென ஒரு தேசிய இலக்கியத்தைப் படைக்க வேண்டும் என ஆர்வமுற்றிருக்கும் காலம் இது. தேசியப் பண்பானது மாவட்ட ரீதியாகவும் தலை காட்டுவதைக் காணலாம். இத்தகையதொரு சூழ்நிலையிலே **"சமூகத் தொண்டன்"** போன்ற சஞ்சிகைகளுக்கு முக்கிய கடமையும் பங்குமுண்டு. வானளாவும் வரட்டுக் கற்பனைகளை விடுத்துச் சமூகத்தின் சாதாரண வாழ்க்கைக்கு விளக்கம் கொடுக்கும் பணியை அன்பர் முத்தையா செய்து வருகின்றார், பத்து ஆண்டுகளாகச் **"சமூகத்தொண்ட"**னை வெளியிட்டு வந்துள்ள அவர் நிச்சயம் யாவரினது பாராட்டுக்கும் உரியவரே. ஆண்டுமலர் அழகுடன் பொலிவதாக!

"தினகரன்"
கொழும்பு.

**க. கைலாசபதி**
ஆசிரியர்



## "தேசிய இலக்கியஏடு வாழ்க!"

சின்னஞ்சிறிய உருவமுடைய **"சமூகத்தொண்டன்"** மலரா கப் பரிணமிக்கப்போகும் செய்திகேட்டு மகிழ்கிறேன்.

ஈழத்திருநாட்டின் வடபகுதிச் சுற்றுப் பிரயாணத்தில் நான் ஈடுபட்டிருந்த வேளையில், எண்ணற்ற சிறப்புக்களைக் கண்டேன். அத்துடன் ஜாதித் திமிர், விதேசப்பற்றுப் போன்றவைகளையும் பார்க்க முடிந்தது.

சிறந்த முறையில் சிருஷ்டி கர்த்தாக்களைக் கொண்டுள்ள இந்தப் பகுதியில் 'சமூகத்தொண்டன்' செழித்து வளர நல்ல வாய்ப்புகள் உண்டென்று நான் கருதுகிறேன்.

இந்நாட்டின் சின்னத்தனங்களை யெல்லாம் ஒழித்துக்கட்டும் சிறந்த தேசிய இலக்கிய ஏடாக "சமூகத்தொண்டன்" மலர என் மனம் நிறைந்த வாழ்த்துக்கள்!

'சரஸ்வதி'
சென்னை.

**வ. விஜயபாஸ்கரன்**
ஆசிரியர்.



## "இலக்கியத் தொண்டன் வாழ்க!"

இலங்கையில் ஒரு மாத சஞ்சிகையை ஆரம்பித்து நடத்துவதென்பது சுலபமான காரியமல்ல. அதிலும் உயர்ந்த முறையில் ஒரு மாதப் பத்திரிகையைத் தொடர்ந்து வெற்றிகரமாக நடத்த அபாரமான திறமையும் பொறுமையும் வேண்டும். இவ்விரு குண விசேஷங்களும் பொருந்தியவர்கள் இலங்கையில் வெகுசிலரே. அவர்களின் முன்னணியில் இருப்பவர் அன்பர் திரு. முத்தையா அவர்கள். அவரது அரிய பல படைப்புக்களை யாவரும் அறிவர். அவரை ஆசிரியராகக்கொண்டு வெளிவரும் **சமூகத்தொண்டன்** சமூகத்தின்தொண்டனுகமட்டுமன்றி இலக்கியத்தொண்டனுகவும்விளங்கி வருகிறது. ஈழத்து எழுத்தாளர்களின் மத்தியில் விடிவெள்ளியாகத் திகழும் திரு. முத்தையா அவர்களின் கைவண்ணத்தால் சமூகத்தொண்டன் சனசமூக நிலையங்களுக்கு சிறந்ததொரு வழிகாட்டியாக விளங்கி வருவதை நாம் மனப்பூர்வமாகப் பாராட்ட வேண்டும். வாழ்க சமூகத்தொண்டன்.

"வீரகேசரி"
கொழும்பு 14,

**கே. வி. எஸ். வாஸ்**
ஆசிரியர்





## "ஈழநாட்"டின் ஆசி

அன்புடையீர்,

வணக்கம். "சமூகத்தொண்டன்" ஆண்டுமலர் புதுமையும் இனிமையும் கலந்து நறுமலர்க் கதம்பமாக வெளிவர இருப்பதை அறிந்து மகிழ்கின்றோம். தமிழ்மொழி ஆக்கத்துக்கும், சமுதாய மலர்ச்சிக்கும் **"தொண்டன்"** பணியாற்றி வருவது மகிழ்ச்சிக்குரியதே. தங்கள் பத்திரிகை ஏற்படுத்தியுள்ள சிறுகதைப் போட்டி புதிய எழுத்தாளர்களைத் தேடித்தரும் என எதிர்பார்க்கின்றோம். தொண்டன் பணி சிறப்புற்று ஓங்குக. வாழ்த்துக்கள்.

"ஈழநாடு"
யாழ்ப்பாணம்,

**இராஜ அரியரத்தினம்**
ஆசிரியர்.



## "அறிவுக் களஞ்சியம் வாழ்க!"

சமூகத்தொண்டன் ஆண்டுமலர் வெளியீடு வழமைபோல வளம்பொருந்திய அறிவுக் களஞ்சியமாக இருக்கும் என்பது இயம்பாமலே அமையும், வாழ்க்கை நெறியைத் திங்கள்தோறும் நன்கு புகட்டிவரும் **சமூகத்தொண்டன்** தமிழகத்துக்கு ஆற்றி வரும் பணி போற்றற்பாலது. இருள்சூழ்ந்த இன்றைய உலக நிலையில் நல்லறிவுச் சுடர் போன்று நாட்டுக்கு ஒளிபரப்பும் வெளியீடுகளின் சேவை இன்றியமையாதது. சமூகத்தொண்டன் வாழ்க. வாழ்க தமிழ்ச் சால்பு.

"இந்துசாதனம்"
யாழ்ப்பாணம்.

**நம. சிவப்பிரகாசம்**
ஆசிரியர்.



## "இதயம் பூரிப்படைகிறது"

சமூகத் தொண்டனுக்கு நல்வாழ்த்து அனுப்பும் இந்நல் வாய்ப்புக் கிடைத்ததையிட்டு மகிழ்வறுகிறேன்.

'ஒன்றே குலம் ஒருவனே தேவன்'' என்ற கொள்கையைக் கடைப்பிடித்து. 'என கடன் பணி செய்து கிடப்பதே'' என்ற திருவாக்குக்கிணங்க தாங்கள் **சமூகத்தொண்டன்** மூலமாக யாழ்ப்பாண சனசமூகத்திற்கு ஆற்றிவரும் திருப்பணியை எண்ணும்போது என் இதயம மகிழ்ச்சியால் பூரிப்படைகின்றது.

'சமூகத்தொண்டன்' இதுவரை சனசமூக நிலையங்களுக்குப் புத்துயிர் கொடுத்துத் தமிழ்ப் பண்பாட்டுச்சுகந்தவண்ணமாய் அவற்றைச் செயலாற்றத் தூண்டிய வண்ணம். இன்னும் பல பல ஆண்டுகளாக ஈழநாட்டுத் தமிழ் மக்களுக்குத் தலைசிறந்த தொண்டாற்றி 'ஒன்றேகுலம ஒருவனே தேவன்' என்ற கொள்கையில் தமிழ் மக்கள் ஒன்றுபட்டு அன்பினால் ஒருமைப்பாடுடையவர்களாய் திகழ்வதற்கேற்ற நற்பணி புரியுமென்பதே எனது நம்பிக்கை

வாழ்க தமிழினம்! வாழ்க சமூகத்தொண்டன்!!

"உதயதாரகை''
வட்டுக்கோட்டை.

**(வண) டி. ஆர். அம்பலவாணர்**



## "சமூகத்தொண்டன் வாழ்க!"

'சமூகத்தொண்டன்' — ஆண்டுமலர் வெளிவர இருப்பதறிந்து பெருமகிழ்ச்சி. திருவாளர் முத்தையா அவர்கள் உள்ளம் நிறைய எந்த ஆர்வம் பொங்குகிறதோ அதையே பத்திரிகைக்கும் பெயராக வைத்திருக்கிறார்கள்.

அவர்களுடைய ஆண்டுமலர் மணம் நிறைந்ததாக இருக்குமென்பதில் ஐயமே இல்லை. **சமூகத்தொண்டன்** வாழ்க!

சமூகத்தொண்டன் தனதுமலர் மூலம் பரப்பும் நறுமணத்தை உங்களைப்போலவே நானும் நுகர்ந்து மகிழ ஆவலுள்ளவனாயிருக்கிறேன்.

வாழ்க! வளர்க!!,

"கல்கி''
சென்னை.

அன்புடன்,
**நா. பார்த்தசாரதி**
(மணிவண்ணன்)





## "இறைவன் அருள்வானாக!"

இலக்கியம், இசை, நாடகம், சமயம் ஆகிய பல துறைகளில் உங்கள் பத்திரிகை சாதனைகள் புரிந்து வருவதைக் கேட்டுப் பெருமைப்படுகிறேன். கலைகளை வளர்க்கும் **சமூகத்தொண்டன்** நீடுவாழவேண்டுமென வாழ்த்துகிறேன். தொண்டு தொடர்ந்து சிறக்க எல்லாவித சௌகரியங்களும் இறைவன் அருள்வானாக! ஆசிரியர் குழாத்தின் உற்சாகம் சிறப்பதாக,

சென்னை

கே. ஆர். கல்யாணராமன்
(மகரம்)



## "பரிபூர்ண அன்பு"

அன்பரீர்,

வணக்கம். தங்கள் ஆண்டுமலர் சிறப்புடன் வெளிவர வாழ்த்துகிறோம்; உமாவின் பரிபூர்ண அன்பும் இதன்மூலம் வெளிப்படவல்லது. நாம் உடலால் தொலைவில் இருப்பினும், உள்ளத்தால் மிக அண்மையிலேயே இருக்கிறோம். இதுவே நம் தமிழ் இலக்கியத்தின் மாண்பாகும்.

'உமா''
சென்னை,

அன்ப
**பூவை ஆறுமுகம்**



## "வெற்றி பெறுக!"

அன்பீர்,

வணக்கம். தங்கள் நன்முயற்சி மேன்மேலும் வெற்றி பெறுக. ஒவ்வொரு தமிழனும் — அவரவரால் இயன்ற தொண்டை நாட்டுக்கும் மொழிக்கும் மக்களுக்கும் செய்யவேண்டுமென்பது என் ஆசை,

நல்லெண்ணமுள்ள தமிழர்கள் அனைவரும் ஒன்றுகூடி ஆக்கவேலைகளில் ஈடுபடுக.

அன்பு, அன்பு, அன்பு.

தமிழ் எழுத்தாளர் சங்கம்,
சென்னை. 2,

நல்லன்பு
**அன்புப்பழம் நீ**



## "வாழிய தொண்டன்!"

எத்திக்கும் புகழ்நிறுவித் தகைசான்ற
ஒழுக்கமும் டண்பும் பேணி
எடுத்தவர்கை விடுத்திடாது படித்துமகிழ்ந்
தேத்துமின் குறளி னமுதம்
தித்திக்குங் கட்டுரைகள் கதைகளோடு
தீஞ்சுவைக் கவிக ளேந்தித்
தெள்ளுதமிழ்ச் சுவைசொட்ட மதிதோறும்
தேசுடன் பவனி வந்து
புத்திக்கு வித்திட்டுப் பாலரோடு
பாட்டரும் கற்றோர் மற்றோர்
பேதிக்கும் சாதிமத பேதமின்றிப்
போற்றிடும் சமூக**த் தொண்டன்**
முத்திக்கும் வழிகாட்டும் முறைநன்று
வாழிய தொண்டன், வாழி
முத்தையன்; வாழியவே சமாசங்கள்
முதல்வன் ஆசி பெற்றே.

கண்டி வீதி,
சுண்டிக்குளி,

"**விவேகி**" ஆசிரியர்.



## ஆத்மஜோதியின் ஆசி

சகமெலாம் போற்று மேங்கள்
**சமூகத் தொண்டன்** வாழ்க!
இகபர மிரண்டி னுக்கும்
இன்புறு நிலையில் வாழ்க!
அகத்தினை அறிவால் விளக்கி
அன்பினைப் பெருக்கி வாழ்க!
மகத்துறு மக்கள் எல்லாம்
மாண்புற உழைத்து வாழ்க!

"ஆத்மஜோதி"
நாவலப்பிட்டி.

**நா. முத்தையா**
ஆசிரியர்








ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள்

# அபிமான வாசகர்களுக்கு!......

[ “ ஈழத்துச் சோமு ” ]

அபிமான வாசகர்களுக்கு ......! தலைப்பைப் பார்த்துவிட்டு உங்களிற் சிலர் நான் நடத்துகிற பத்திரிகை எதுவோ சுணங்கி வெளியாகிவிட்டதற்காக மன்னிப்புக் கோருவதாக அல்லது பத்திரிகை எதற்கோ சந்தா கோரி வேண்டுகோள் விடுப்பதாக எண்ணிக் கொள்ளப்போகிறீர்கள். நீங்கள் அப்படி நினைத்துக்கொள்ளுவதில் நியாயமிருப்பதாக நான் கருதுவதால், முன்னெச்சரிக்கையோடு விடயத்தை தெளிவுபடுத்திவிடுகிறேன் — நான் ஒரு பத்திரிகைக்காரனல்ல! இனி நீங்கள் தயங்க வேண்டியதில்லை

இனிக்கும் தமிழில் ஏறுநடை போட்டு — சமூகத்தில் நெரிக்கும் பிரச்சினைகளுக்கு விடிவு காண விரைந்து வெளிவந்துகொண்டிருக்கும் ‘சமூகத்தொண்டன்’ ஆண்டு மலர்களில் சில ஆண்டுகளாக நான் எழுதியவை மற்றவர்கள் சொல்லத் தயங்குகிற அல்லது சொல்ல மறந்துவிட்ட விடயங்களாக இருப்பதாக இலக்கிய நண்பர்கள் சொல்லுவார்கள். சென்ற வருட மலரில் எழுதப்பெற்ற ஒரு சின்னக் கட்டுரை—“நாம் எங்கே?”; அதைப் பீடிகையாக வைத்துக் கொண்டு எத்தனை விமர்சனப் புலிகள்—பேனா மன்னர்கள் ஆரம்பம் முதல் 1950 வரையுள்ள ஈழத்து இலக்கிய வளர்ச்சி,—எழுத்தாளர்கள் தோற்றம்பற்றி கடந்த ஒரு ஆண்டுக்குள் அலசி ஆராய்ந்து பல கட்டுரைகளாக வெளுத்து வாங்கிவிட்டார்கள்! அதனுல் இம்முறை மலரில் எந்த இலக்கியப் பிரச்சினையைத் தொட்டு — பயனுள்ளதான ஒரு இலக்கிய சர்ச்சையை எழுப்பலாம்? —கதையா, கவிதையா? நாடகமா? என யோசித்தபடி இருந்தேன்.

“தம்பி! பத்திரிகை அச்சாகிறது. உங்கள் விடயத்தை உடனே அனுப்பவும்! — எதை எழுதுவது என்ற முடிபுக்கே இதுவரை வரவில்லை — விடயத்தை உடனே

---

கதையாகட்டும், கட்டுரையாகட்டும், விமர்சனமாகட்டும், அதில் ‘புதுமை சிந்தும புரட்சிப் பேனு’வாக விளங்குபவர் உங்கள் அபிமான எழுத்தாளர் திரு. “ஈழத்துச் சோமு”; இங்கே அபிமான வாசகர்களை அழைதது, துணிகரமாக, ஆனுல் சுவையோடு தமது சொந்தக் கதையைச் சொல்லி, இலக்கியத்தைத் தொட்டு ஒரு திருப்பு திருப்புகிருரே......அந்த உத்தி இந்தப் பேனுவின் தனிச் சொத்து. 1960 இல் இலங்கை இலக்கியவானில் இடித்த முழக்கங்கள், பளிச்சிட்ட மின்னல்கள் யாவும் இங்கு எதிரொலிக்கின்றன!

அனுப்பட்டுமாம்! எனது அபிமா
னம்மிக்க ஆசிரியருடைய வேண்டு
கோள்!—எதை எழுதுவது?

''அத்தான் … …!'' வேறு யாரு
மில்லை. நீங்கள் யோசிக்க வேண்
டாம். அவள் என் மனைவிதான்!
இலக்கியம் பேசிப்பேசி என் இத
யத்திலேறி உட்கார்ந்து பிறகு
தன் கழுத்தில் தாலியையும் கட்ட
வைத்துவிட்டவள். காஞ்சிபுர பட்
டின் சர சரஒலி அழுங்கிக்கொண்டு
அவள் குரல் குழைந்தது.

''சே; நீங்கள் என்ன இன்ன
மும் தொண்டன் மலருக்கு விடயம்
கொடுக்காமல் … … ஞாபகமூட்டல்
கடிதமும் வந்துவிட்டது?'' அவள்
இலேசாகச் சிணுங்கினுள். சிணுங்
கல் கலந்த ஒரு சீறலைப் பிரயோ
கித்தால், நான் விடயத்தை எழுதி
முடித்து விடுவேனென்று அவளுக்
குத் தெரியும்.

''எழுதுவதில் ஏதாவது புதுமை
இருக்கவேண்டாமா? எதை எழுது
வது குஞ்சு'' — கண்ணே, கனி
ரசமே; கற்கண்டே என அழைப்ப
திலும் பார்க்க, குஞ்சு என நான்
அழைத்து விட்டால் அவளுக்கு
நெஞ்சு குளிர்ந்துவிடும். கொஞ்
சம் பணிந்து வந்து மந்திரி ஆகி
விட்டாள் அவள்.

கடந்த ஆண்டு நாம் செய்த
தமிழகச் சுற்றுப்பிரயாணம் பற்றி
எழுதலாந்தானே? மாமல்லபுரம்
சிற்பங்களைப் பார்த்துப் பிரமித்துப்
போய் மணிக்கணக்காக நின்
ருேமே. கலை, கலையென்று காஞ்சீ
புரம் கோவில்களையெல்லாம் சுற்றி
னுேமே? இன்னும் நாம் கலந்து
கொண்ட எழுத்தாளர் மாநாடு
பற்றி, இலக்கிய வட்டாரம் பற்றி,
நிறைய எழுதலாமே?'' — அவள்
போட்டாளே ஒரு போடு! நல்ல
வேளை! ஆரம்பத்தில் குறிப்பிட்ட
படி நான் ஒரு பத்திரிகாசிரிய
ஞக இல்லாதது அதிர்ஷ்டம்தான்!
அல்லாவிடில், இந்த வங்காள விரி
குடாவைக் கடந்து போய் வந்து
விட்டு ஏதோ 'ரொக்கட்'டில் சந்
திர மண்டலத்துக்குப் பறந்து
போய்வந்த மனப்பாங்கோடு கயிறு
திரிக்கும் பத்திரிகாசிரியராகநானும்
மாறி, பக்கம் பக்கமாக எழுதி உங்
கள் பொறுமையைச் சோதிக்க
வேண்டியிருக்குமே!

அபிமான வாசகர்களே! சீவ
னத்துக்கென வேறு ஒரு தொழி
லும் பார்த்துக்கொண்டு, ஒருவன்
எழுத்தாளனுகவும் விளங்கவேண்டு
மெனத் துடித்துக்கொள்வது உபத்
திரவமானதுதான். அதை ஓரளவு
சகித்துக் கொண்டாலும், இலக்கி
யப் பரிச்சயமுள்ள ஒருத்தி எழுத்
தாளனுக்கு மனைவியாக வாய்த்துக்
கொண்டால், அது மிகவும் உபத்
திரவமானது!

''உங்கள் சிருஷ்டி எங்கே?
உங்கள் அபிமான ரசிகை இதோ
காத்திருக்கிறேன்'' என நச்சரித்
துக் கெஞ்சத் துவங்கி விடுகி
ருளே இவள்!

''கிர் கிர்''ரென ஆகாய விமா
னம் உயரே எழுந்து பறந்து
கொண்டிருந்தது. நடுக் கடல்;
அதற்கு உயரே உள்ள முகிற் பட
லங்களைத் தாண்டி அவற்றுக்கும்
மேலே விமானம் வேகமாகப்



பறந்துகொண்டிருந்தது. பயந்து,
என்னுடன் நெருங்கி ஒட்டிக்
கொண்டிருந்த இவள் அருகிலிருந்த
யன்னலுக்கூடாக எட்டிப் பார்த்து
விட்டு, திடீரெனத் தனது கை
களால் எனது கன்னத்தைப் பிடி
த்து திருப்பி வெளியே காட்டினுள்.
''அதோ பாருங்கோ! எத்தனை
அழகு! பாரதிபாடிய வெள்ளிப்
பனிமலைமீது இப்போது நாங்கள்
உலாவுகிறோம். இல்லையா? … …
இதை வைத்துக்கொண்டு நீங்கள்
எப்போது கதை எழுதப்போகி
றீர்கள்?''

''எப்பொழுது நீங்கள் நாவல்
எழுதப்போகிறீர்கள்?'' என்று
அவள் கேட்காமலிருந்தது எனது
மற்றுமொரு அதிருஷ்டமென எண்
ணிக்கொண்டேன். இனி விடயத்
துக்கு வருவோம்.

என் அபிமான வாசகர்களே!
மேலே கண்டவை இம்முறை
புதுமையாக எதை உங்களுக்கு
எழுதுவது என நான் திணறிக்
கொண்டிருந்தபோது என்நினைவிற்
தெறித்த துளிகள். ஆனுலும் என்
சுற்றுப் பிரயாணத்தைப் பற்றிச்
சொல்வதிலும் பார்க்க கடந்த ஆண்
டில், நமது நாட்டு இலக்கிய உல
கில் நிகழ்ந்தவைபற்றி இந்தமலரில்
எழுதுவது பொருத்தமாக பய
னுள்ளதாக இருக்குமென நம்பு
கிறேன்.

1960-ம் ஆண்டை நோக்கும்
பொழுது பல்வேறு நிகழ்ச்சிகளும்
இலக்கிய முயற்சிகளும் ஞாபகத்
திரைக்கு வருகின்றன.

'தினகரன்' தமிழ் விழா,
இலங்கைத் தமிழ் எழுத்தாளர்
மாநாட்டை நடத்துவதற்காக
இலங்கை முற்போக்கு எழுத்தாளர்
சங்கம் எடுத்த முயற்சிகள், யாழ்ப்
பாணத்திலும் கொழும்பிலும் நடை
பெற்ற எழுத்தாளர் சந்திப்புகள்,
இலக்கிய நண்பர்கள் கூட்டங்கள்,
நூல்வெளியீட்டு விழாக்கள், கருத்
தரங்குகள், தமிழகத்தி லிருந்து
இங்கு வந்திருந்த எழுத்தாளர்களை
யொட்டி எழுந்த வாதப் பிரதி
வாதங்கள் முதலியன 1960-ம்
ஆண்டை நமது இலக்கிய வரலாற்
றில் முக்கியத்துவம் பெற்ற கால
கட்டமாக ஆக்கிவிட்டன!

'தினகரன்' தமிழ்விழா ஒரு
கலை விழாவாக நடைபெற்றுள்ள
போதும், இலக்கியத் துறைக்குப்
பயனுள்ளதாக சிறுகதைப் போட்
டியும், கவியரங்கும் திகழ்ந்தன.
இந்தச் சிறுகதைப் போட்டியில்,
மிக அண்மையில் எழுத்துலகில்
பிரவேசித்த திரு. அ. முத்துலிங்கம்,
முதற்பரிசுபெற்று தமது ஸ்தா
னத்தை நிறுவிக் கொண்டார்'
'தினகரன்' தமிழ்விழாவை யொட்டி
வெளியிட்ட சிறப்பு மலரும் இலக்
கியத் தரமுள்ளதாக அமைந்திருந்
தது.

எழுத்தாளர்கள் அடிக்கடி சந்
தித்து, சர்ச்சை புரிந்து, கருத்துப்
பரிமாறிக் கொள்ளும் வாய்ப்பை,
முன்னெப்போது மில்லாத வகை
யில் 1960-ல் உண்டாக்கிய
பெருமை இலங்கை முற்போக்கு
எழுத்தாளர் சங்கத்துக்கேயுரியது.
ஆக்க பூர்வமான பல திட்டங்களை
அடிப்படையாக வைத்து, அகில

இலங்கையிலுமுள்ள தமிழ் எழுத்தாளர்களையும் கொண்ட ஒரு எழுத்தாளர் மாநாட்டை நடத்துவதற்காக, பல பூர்வாங்க கூட்டங்கள் நாடடின் பல பாகங்களிலும் நடைபெற்றன. இக் கூட்டங்களில் எழுத்தாளர்களும் இலக்கிய ரசிகர்களும் உற்சாகமாகக் கலந்து கொண்டு, ஆக்க பூர்வமான கருத்துப் பரிமாறல்கள் செய்தனர். ஒரு விழிப்பான சூழ்நிலை உருவாகியது. தவிர்க்கமுடியாத அரசியல் நிகழ்ச்சிகள், அமைதியற்ற சூழ்நிலைகளால் மேற்படி மாநாடு திட்டமிட்டபடி கூட்டப்படாமல், மீண்டும் மீண்டும் பின்போடப்பட்டுள்ள போதும், எழுத்தாளர்கள் ஸ்தாபன ரீதியில் இயங்க வேண்டும் என்ற உணர்ச்சி, அடிக்கடி நடைபெற்ற இலக்கிய நண்பர்கள் சந்திப்புகளால் பலப்படுத்தப் பட்டது.

1960-ல் மூன்று சிறுகதைத் தொகுதிகளும் ஒரு கவிதைத் தொகுதியும் வெளியாகி யுள்ளன. திரு. செ. கணேசலிங்கனின் 'ஒரே இனம்'; திரு. டொமினிக் ஜீவாவின் 'தண்ணீரும் கண்ணீரும்'; திரு. வரதரின் 'கயமை மயக்கம்'; நாவற்குழியூர் திரு. நடராசனின் 'சிலம் பொலி' ஆகிய நூல்களின் வெளியீட்டை யொட்டி நிகழ்ந்த எழுத்தாளர் சந்திப்புகள் சிருஷ்டிகர்த்தாக்கள்மீது வெறும் புகழ்மாலைகள் மட்டும் போடும் கூட்டங்களாக அமையாது பயனுள்ள இலக்கியப் பிரச்னைகள் எழுப்பப்பட்ட கருத்தரங்குகளாகவும்திகழ்ந்தமை குறிப்பிடக் கூடியதாகும்.

பாரதி தினத்தை யொட்டி கொழும்பில் நடைபெற்ற கருத்தரங்கில் ஏற்பட்ட கருத்துமோதல்கள் பயனுள்ளவையாகவும், புதிய கண்ணேட்டத்தை தோற்றுவிப்பதாகவும் அமைந்திருந்தன.

1960-ன் முற்பகுதி இலக்கிய விழாக்களும், எழுத்தாளர் சந்திப்புக்களும் நிறைந்து மிக்க விழிப்புணர்ச்சியுள்ள ஒரு இலக்கியச் சூழ்நிலையைச் சிருஷ்டித்துவிட, பிற்பகுதி ஈழத்துக்கு விஜயஞ் செய்த தமிழ்நாட்டு எழுத்தாளர்கள் சிலர் தெரிவித்த கருத்துக்களை யொட்டி எழுந்த காரசாரமான வாதப்பிரதிவாதங்கள் கடந்தஆண்டின் உச்சக் கட்டமாக விளங்கின!

'கங்கை' ஆசிரியர் திரு. பகீரதன் "இலங்கை எழுத்தாளர்கள் பத்து ஆண்டுகள் பின் தங்கிக் கிடக்கிருர்கள்" எனத் தெரிவித்த ஆராய்வற்ற அபிப்பிராயத்தைச் சாடி இலங்கை இலக்கிய வட்டாரத்திலிருந்து எழுந்த குரல்கள் வெறும் ஆட்சேபமாக மட்டுமன்றி, ஈழத்து இலக்கிய வளர்ச்சிபற்றி ஆணித்தரமான, ஆதாரபூர்வமான தகவல்களைக் கொண்ட விவாதமாக விளங்கியது. இலங்கை எழுத்தாளர்கள் மட்டுமன்றி, தமிழகத்து எழுத்தாளர்களான திருவாளர்கள் நா. பார்த்தசாரதி, வ. விஜயபாஸ்கரன் ('சரஸ்வதி' ஆசிரியர்) என்போரும் 'பகீரத'ன் தெரிவித்த அபிப்பிராயத்தை ஒப்புக்கொள்ளவில்லை. தமிழகத்து இலக்கியப் பத்திரிகைகளான 'சரஸ்வதி' 'எழுத்து' ஆகியவையும் இந்த



விவாதத்தில் கலந்து கொண்டு நியாய பூர்வமான கருத்துக்களை வெளியிட்டன.

இனி சிருட்டித் துறையில், இலக்கிய முயற்சிகளில் குறிப்பிடக் கூடியவற்றை நோக்கினுல், ஒரு டசினுக்கு மேற்பட்ட, மனத்தை விட்டகலாத நல்ல சிறுகதைகள் கடந்த ஆண்டில் தேறும். 'தகிப்பு' (சு. வே.) 'நல்ல முத்து' (பத்மா — காந்தன்) 'வீரம்'(வரதர்), 'மொட்டு' (எஸ். பொன்னுத்துரை, 'அக்கா' (அ. முத்துலிங்கம்) 'வாய்க்கரிசி' (டொமினிக் ஜீவா), "தொட்டாற் சுருங்கி" (காவலூர் ராசதுரை), கோடைமழை, (அ. முத்துங்கம்) முதலியவை நல்ல சிறு கதைகளின் வரிசையில் இடம் பெறும். 'பசி' என்ற தலைப்பில் ஐந்து வெவ்வேறு சுவையுள்ள கதைகளை திரு. எஸ். பொன்னுத்துரை எழுதி ஒரு புதுமை முயற்சி செய்தார். யாழ்ப் பாணம் தமிழ் எழுத்தாளர் சங்கம் 'வெறி' என்ற தலைப்பில் ஒரு கதையரங்கம் ஏற்படுத்தி ஐந்து எழுத்தாளர்களைக் கலந்து கொள்ள வைத்தது. 'சமூகத்தொண்டன்' ஏற்பாடு செய்த முதற் சிறுகதைப் போட்டியில் இலங்கையின் பரவலான எழுத்தாளர் வட்டாரம் பங்கு கொண்டுள்ளதும் குறிப்பிடவேண்டியதே. கடந்த ஆண்டில் நமது சிறுகதைத் துறையைப் பொறுத்தவரை இன்னுமொரு முக்கியமான சம்பவம் நடைபெற்றது. தமிழகத்துப் பத்திரிகையான "கல்கி" ஈழத்து எழுத்தாளர்களுக்கென ஒரு சிறுகதைப் போட்டியை ஏற்பாடு செய்தது.

நாவல் துறையைப் பொறுத்தவரை, கடந்த ஆண்டிலும் 'நாவல் எழுத இளங்கீரனை விட்டால் வேறு ஆள் இல்லை' என்ற நிலையில் மாற்றம் எதுவும் ஏற்படவில்லை. திரு. இளங்கீரன் எழுதிய 'இங்கிருந்து எங்கே?' அவரது படைப்புகள் எல்லாவற்றுள்ளும் ஆழமும் நீளமுமானது. சில வருடங்களுக்கு முன்னர் 'ஈழகேசரி'யில் தொடராக வெளிவந்த, திரு. வ. அ. இராசரத்தினம் எழுதிய 'கொழுகொம்பு' (நாவல்) கடந்த ஆண்டில் நூலுருவம் பெற்றுள்ளது. இன்னும் ஒரு நாவலின் நீளத்துக்கு நீட்டி முழக்கப்பட்டு முடிவில் சுவாரஸ்யமான பத்திரிகைக் கதைகளாக மாறிய இரண்டு புது முயற்சிகளும் 'தினகரனி'லும், 'வீரகேசரி'யிலும் செய்யப்பட்டன! 'வண்ணமலர்' என்ற எட்டு அத்தியாயங்கள் கொண்ட கதையை எட்டு சிறுகதை எழுத்தாளர்கள் தலைக்கு ஒரு அத்தியாயமாக எழுதினர். அதுபோலவே 'மத்தாப்பு' என்ற கதையை ஐந்து எழுத்தாளர்கள் எழுதினர். கடந்த ஆண்டில் 'கலைச்செல்வி'ப் பத்திரிகை ஆயிரம் ரூபா நாவல்போட்டி ஒன்று நடத்தும் திட்டத்தை அறிவித்துள்ளது. இதுவரை இலங்கையில் இலக்கியத் துறைக்காக இவ்வளவு பெருந்தொகை எந்தப் போட்டியிலும் வழங்கப்படவில்லை யென்பது கவனிக்கத்தக்கது. இந்த நாவல்போட்டி மூலம், நிச்சயம் நாவல் துறையில் ஈழத்தின் ஸ்தானம் உயரும் என எதிர்பார்க்கலாம்.

இலங்கை வானெலி ஏற்படுத்திய "பாட்டுத் திறத்தாலே...!"

என்ற கவியரங்கும், யாழ். தமிழ் எழுத்தாளர் சங்க ஆண்டு விழா வில் ஏற்படுத்தப்பட்ட ''கண்கள் புரிந்துவிட்ட பாவம்!'' என்ற கவி யரங்கும் கவிதைத்துறையில் குறிப் பிடவேண்டிய நிகழ்ச்சிகளாகும். இளங்கவிஞரான திரு. திமிலைத் துமிலன் கடந்த ஆண்டில் தமது திறமையைக் காட்டவல்ல பல கவி தைகளைப் படைத்து, சிறந்த கவிஞ ராகத் தமது ஸ்தானத்தைப் பிடித் துக்கொண்டார்.

'ஈழத்து இலக்கிய வளர்ச்சி பற்றி 'தினகரன்' இதழ்களில் திரு. கனக. செந்திநாதன் எழுதிய கட்டு ரைத் தொடர் மிகவும் பயனுள் ளது. ''அப்படி ஒரு கட்டுரை எழு தப்பட வேண்டும். அப்போதுதான் தற்கால இலங்கை இலக்கியம் பற் றித் தெரிந்து கொள்ளப் பலருக் கும் வாய்ப்பு ஏற்படும்'' என்ற கருத்தை கடந்த ஆண்டு 'தொண் டன்' மலருக்கெழுதிய எனது கட் டுரையில் தெரிவித்திருந்தேன். இலக்கியத்தின் பல்வேறு துறைக ளிலும் நல்ல ஈடுபாடும், ஞானமும் உள்ள திரு. செந்திநாதன் இந்தப் பணியைச் செய்தது பாராட்ட வேண்டியதாகும். கட்டுரையின் முற்பகுதியில் இலக்கிய வளர்ச்சிப் பாதையில் 1950 வரையுள்ள கால கட்டத்தை மிக ஆராய்வாக எழுதி யுள்ளார். அதற்குப் பின் தோன் றியஎழுத்தாளர்களைப்பற்றி மேலெ ழுந்தவாரியாக அவர் எழுதியுள் ளது ஒரு குறை; அந்தக் கால கட் டத்தைச் சேர்ந்த சிறுட்டிகளில் ஆசி ரியருக்குப் பரிச்சயமில்லையோ என்ற சந்தேகத்தையும் படிப்பவர் களுக்கு எழச்செய்கின்றது.

நாடகத்துறையைப் பொறுத்த அளவிலும் கடந்த ஆண்டு ஒரு வகையில் முக்கியமானதே. தமிழ் நாடக மொன்றைத் தெரிவுசெய்து, அரசாங்க, கலாச்சார ஸ்தாபன மான 'சாகித்திய மண்டல' ஐநூறு ரூபா பரிசளித்தது. திரு. 'சொக்கன்' எழுதிய 'சிலம்பு பிறந்தது' என்ற நாடகத்துக்கு முதற் பரிசு கிடைத் தது. திரு. அருள் செல்வநாயகத் தின் நாடகத்துக்கு மூன்ருவதுபரிசு கிடைத்தது.

1960-ல் வெளியாகிய இலக் கியத் தரமுள்ள வெளியீடுகளாக கணேசையர் நினைவுமலர், 'மூன்ரு வது கண்' என்ற பண்டிதமணி கணபதிப்பிள்ளையின் வரலாறு; கொழும்பு தமிழ்ச் சங்க மலரான 'முருகு; கலைமதி ஆண்டுமலர் முதலியவற்றைக் குறிப்பிடலாம்.

ஆகவே 1960-ம் ஆண்டை, ஈழத்து இலக்கிய வளர்ச்சியில் விளைவுகள் நிறைந்த ஒரு செழுமை யான காலகட்டமாகக் கொள்ள லாம். இலங்கை இலக்கியத்தில் பல்கிப் பெருக இருக்கும் புது யுகத் துக்கு முகத்துவாரமாக 1960 விளங் குகிறது. இந்த ஆண்டில் நிலவிய இலக்கிய விழிப்பும், புது ஊக்கமும் இலங்கையில் முன்னெப்போது மில்லாதவை. ஈழத்து இலக்கிய வரலாற்றில் பொற்காலமாக இலங் கப்போகும் புதிய காலகட்டத்தின் ஆரம்பமாக 1960-ம் ஆண்டை இலக்கிய உலகம் கருதுவது நியாய மானதே.





திருக்கோணமலைக் ''கோணேசர்'' ஆலயம் (புதிப்பிக்கப்படுகிறது)

''தெறித்துமுன் னாற்றும் செழுங்கடற் றாளம் செம்பொனும் இப்பியும் சுமந்து கொழித்துவன் திரைகள் கரையிடைச் சேர்க்கும் கோணமா மலை'' யின் அழகிய தெய்வீக தோற்றம் இது!

✲ ''உள்ளூராட்சித் தலைவர்கள் திருக்குறள் படித்தல் நல்லது'' என்று ஆரம்பித்து வள்ளுவததிலே அத்திவாரமிட்டு இராதாகிருஷ்ணனின் ஒரு கொள்கையிற் சுவர் எழுப்பி சமுகப்பணிக்குகந்த கட்டுரைக் கட்டடம் ஒன்றமைக்கிருர் திருக்கோணமலை மாவட்ட உள்ளூராட்சி ஆணையாளரும் பரம்பரைக் கலைப்பண்பில் ஊறியவருமான திரு ந. சிவராசா.

# வாழ்க்கையும் ஆட்சியும்

ந சிவராசா

உள்ளூராட்சித் தலைவர்கள் திருக்குறள் படித்தல் நல்லது. இந்நூல் வாழ்வாங்கு வாழ வழிகாட்டிச் செல்லும் கைவிளக்கு. வாழ்வாங்கு வாழ்வது எவ்வாறெனத் தெரிந்து கொண்டு அவ்வழிச் செல்வோமாயின் ஆள்வாங்கு ஆள்தலும் இலகுவாகக் கைகூடிவிடும். ஆட்சி வாழ்வின் ஓர் பகுதிதானே. முதலில்,

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்
வானுறையும
தெய்வத்துள் வைக்கப்படும்.''

என்ற குறளை நினைப்போம்.

வாழ்வாங்கு வாழ்பவர் என்று கூறும்பொழுது, வாழ்வாங்குவாழாதவர்களும் இருக்கிருர்கள் என்பது புலனுகிறது. இவ்வாறே ஆட்சித் துறையிலும் ஆள்வாங்கு ஆள்பவர்களும் என இருசாரார் இருக்கின்றனரென்று கூறலாம்.

உள்ளூராட்சித் தலைவர்கள் பலர் ஆள்வாங்கு ஆளாமல், வீணே காலத்தைப் போக்குவதினுல் இவர்களுடைய ஆட்சி, பண்பும் பயனும் அற்றதாய், வாழ்வாங்கு வாழ்வதுபோல் அல்லாமல், மரங்கள், மிருகங்கள், பூச்சி புழுக்கள் உயிரோடு இருப்பதுபோல் அமைந்து விடுகின்றது. இவர்கள் செம்மையான முறைதவறிச் செயற்பட, அன்றேல் செயற்படாமலேயே தேங்கிக் கிடக்க, ஆட்சி மரபு தடைப்பட்டு, வளர்ச்சி குன்ற சமுதாயத்தில் எவ்வித மேம்பாடும் ஏற்படாமற் போய்விடுகிறது. வாழ்வாங்கு வாழாதவர் வானுறையும தெய்வத்துள் வைக்கப்படாததுபோல ஆள்வாங்கு ஆளாதாரும் ஒருபோதும் நன்மதிப்புக்கு உரியராகார்.

வாழ்வாங்கு வாழ்தலும் ஆள்வாங்கு ஆள்தலும் கடினமானவை. இதனுல்தானே வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுதலாகிய மகத்தான பரிசு இவர்களைக் காத்து நிற்கின்றது.

''முறைசெய்து காப்பாற்றும் மன்னவன்
மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்''

என்றும் குறள் கூறுகின்றது.

வாழ்வாங்கு வாழ முயற்சிப்பவர்கள் முதலில் வாழ வழிகாட்டும்

விதிகளைக் கற்றுக் கொள்ளுதல் போல, ஆள்வாங்கு ஆள விரும்புகின்றவர்களும் ஆள்வதற்கென அமைந்த விதிகளைக் கற்று அதன் வழி நிற்க முயற்சிக்க வேண்டும். ஏதொன்றும் சரிவரத் தொழிற்படுவதற்குச் சில சட்டதிட்டங்கள் இன்றியமையாதன. அவற்றை அனுசரித்து அவற்றில் நின்று ஓர் அணுவளவேனும் விலகி விடாமல் அது தொழிற்படும் பொழுதுதான் அதன் உண்மைத்தன்மை விளங்கி, பூரணத்துவம் பெற்று, பயன் தருவதாகப் பரிணமிக்கின்றது. நல்லதோர் நடனத்தில் தாளம் அன்றேல் அசைவு, ஒருதரம் பிழைத்து விடினும் ஆட்டத்தின் அழகும் பொலிவும் பழுதுபட்டு விடுமென்பர். எவ்வளவோ விலையுயர்ந்த திராவகங்களை யெல்லாம் கலந்து, பாகம்பண்ணிப் பக்குவமாகமருந்து செய்பவர்கள் பாகத்தில் ஒரு பிழை தானும் ஏற்பட்டுவிட்டால் அத்தனையையும் வெட்டிப் புதைத்து விடுவார்களாம். அன்றேல், அதன் தன்மை கெட்டு அது நோய்க்கு மருந்தாகி விடாது. கணக்கில் ஒரு எண் தவறினும் சரியான தொகை காணமுடியாது. ஒரு விஞ்ஞானி தன் பரிசோதனையில் ஒருபடி தவறினும் தக்க முடிபு காண்பதரிது. விளையாட்டுப் போட்டிகளிலும்கூட கோடிட்டு, விதிகளை அனுசரித்து, கட்டுக் கடங்கி, நீதிபதிகளை மேற்பார்வைக் கமைத்து, விளையாட்டின் நோக்கத்தையும், முறையையும் பூரணமாகப் புரிந்து கொண்டு, விளையாடும் பொழுதுதான் ஆட்டம் பார்ப்பவர்களுக்கும், பங்குபற்றுபவர்களுக்கும் சுவையுடையதாயும், பண்புடையதாகவும் அமையும். அல்லாவிடில் திமிர்பிடித்த மிருகங்கள் காடுமேடுகளில் ஓடுவதுபோல் ஆகிவிடும். இந்த உண்மை ஜனநாயக ரீதியில் அமைக்கப்பட்ட உள்ளூராட்சிக்கும் முழுதும் பொருந்தும். ஜனநாயக உள்ளூராட்சி முறையில் அதற்கெனச் சிறப்பாக அமைந்த தங்கமான பண்புகள், இயல்புகள், விதிகள் உள. "ஜனநாயகம் என்பது நீதி உணர்ச்சியுள்ள ஒரு கோட்பாடு, செயல்முறை. நம்முடைய பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்வதில் கட்டுப்பாடுகளுக்கு அடங்கி, ஆத்திரமடையாமல் பேச்சு வார்த்தைகள் மூலமே நடவடிக்கைகள் இருக்கவேண்டுமென்பது ஜனநாயக முறை. கட்டுப்பாடுகள் மிகவும் அவசியம். சுதந்திரத்தைப் பூரணமாக அனுபவிப்பதற்குக் கட்டுப்பாடுகள் இன்றியமையாதவை என்ற உண்மையை நாம் புரிந்து கொண்டிருக்கிறோமா என்பதை நினைத்துப் பாருங்கள்" என்கிறார் இராதாகிருஷ்ணன். கட்டுப்பாட்டுக்குள் அமைந்து விதிகளை உள்ளன்போடு அனுசரிக்கும்பொழுதுதான், ஜனநாயகம் பெரிய பெரிய வேலைகளையெல்லாம் சாதித்துவிடக்கூடிய அரியதோர் சக்தியெனும் தன்சால்பைக் காட்டிச் சோபையுடன் மிளிரும்.





- "தமிழர்கள் தமிழிலேயே உறவுகொள்வது, தமிழிலேயே பேசுவது, தமிழிலேயே எழுதுவது என்ற சங்கற்பத்தை நடைமுறை யதார்த்தமாக்கவேண்டும். சமூக, அரசியல், கலாசார, தனிப்பட்ட நடவடிக்கைகளையும், தமிழிலேயே தமிழர்கள் செய்யவேண்டும். தெருவெல்லாம் தமிழ்முழக்கம் கேட்கவேண்டும்!"
- திரு. 'பிரேம்ஜி' மக்கள் இயக்கத்துடன் தம்மை இணைத்துக்கொண்டுள்ளவர்; சிறந்த எழுத்தாளர். இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் பொதுச் செயலாளர்; அவர் இங்கு தெரிவித்துள்ள ஆலோசனைகள் மிகப் பயனுள்ளவை. வாசகர்கள் அவற்றை வாசித்து, சிந்தித்து, செயலாற்ற வேண்டும்.

# தமிழ் வளர்ச்சிபற்றி சில கருத்துக்கள்

— பிரேம்ஜி —

"................................
எனப்பல பேசி இறைஞ்சிடப் படுவதாய்
நாட்பட நாட்பட நாற்றமும் சேறும்
பாசியும் புதைந்து பயன்நீர் இலதாய்
நோய்க்கள மாகி அழிகெனும் நோக்கமோ
விதியே விதியே தமிழ்ச் சாதியை
என்செய நினைத்தாய் எனக்குரை யாயோ"

என்று தமிழகத்தின் தவப்பெருங் கவிஞனை, இருபதாம் நூற்றாண்டின் மனச்சாட்சிப் பாவலனை, புதிய யுகத்தின் சகாப்த புருஷனை மகாகவி பாரதி தமிழ் குறித்து, தமிழ்ச் சாதி குறித்து ஏங்கி ஏங்கி ஏங்கி, விம்மி விம்மி விம்மிக் கண்ணீர் விட்ட, நெஞ்சம் வெந்து வெந்து நெக்குருகிய நிலை இன்னமும் முற்றாக மாறவில்லை - முழுதாக மாற்றப்படவில்லை.

அதற்கு மாறாக 'தமிழுக்கு ஆபத்து, தமிழ்ச்சாதிக்கு ஆபத்து' என்ற அபாய அலறலையும்', 'தமிழ் வளரவில்லை—புத்தம் புதிய கலைகள் பஞ்சபூதச் செயல்களின் நுட்பங்கள் சொல்லுந்திறமை தமிழ்மொழிக்கில்லை. எனவே ஆங்கிலமே கொலுவிலிருந்து கோலோச்சவேண்டும்' என்ற பெட்டைப் புலம்பலையும், பேடிக்கூச்சலையும்தான் இன்றும் தமிழகத்திலும், அதன் தத்துக்குழந்தை (தாய் நாடு - சேய்நாடு என்கிறார்களே) என்று கூறப்படும் ஈழத்திலும் கேட்கிறோம்.

இது ஏன்?

தமிழ் வளர தமிழ் செழிக்க, தேமதுரத் தமிழோசை உலகெலாம் பரவ வகை, வழி, திசை திக்கு என்ன?

தமிழ் வளர்ச்சிக்கான வழிவகைகளை, திக்குத் திசைகளைப் பார்ப்பதற்கு முன்னர் தமிழைப்பற்றி, மொழியைப்பற்றி தமிழர்கள் மத்தியிலுள்ள தத்துவக் குழப்பத்திற்கு, பார்வைக் கோணலுக்கு, தப்புத் தவறான கருத்தோட்டத்திற்கு முடிவும்-முத்தாய்ப்பும் வைத்தாக வேண்டும்.

தமிழைப்பற்றி, தமிழ் சாதியைப் பற்றி ஆறுவிதக் கண்ணோட்டங்கள் சமுதாயத்தில் நிலவுகின்றன.

ஒன்று: 'தமிழ் தெய்வமொழி. எனவே அதற்கு ஆபத்தில்லை, அது அழியாதது' என்ற வாதம்.

இரண்டு: 'மூவேந்தர் வளர்த்த தமிழுக்கு, கடாரத்திலும் இமயத்தின் எல்லையிலும் மீன்கொடி, புலிக்கொடி பொறித்து பாராண்ட தமிழ்ச் சாதியின் மொழிக்கு,

ஆபத்து வந்து விட்டது' என்று அலறிக்
குமுறி தமிழ்காக்க 'எழுமின், விழிமின்,
பொங்குமின்' என்று முக்காரமிட்டு முழங்கி
யுத்த முரசம் கொட்டும் ஆவேசக்குரல்.

மூன்று: 'கல்தோன்றி மண்தோன்றாக்
காலத்து முன்தோன்றி மூத்தகுடி'யின்
மொழி இன்றும் 'கன்னித் தமிழாக' இருக்
கிறது என்றும், 'எல்லாம் உளது இதன்
பால், ஈடாமோ எதுவும் இதற்கு' என்றும்,
'மறைவான பழங்கதைகள்' மார்தட்டிப்
பேசும் நிலை.

நான்கு: 'இலக்கணம் கண்டவன் தமி
ழன - மரபும் பரம்பரை மாட்சியும் கொண்
டவன் தமிழன்' என்றுகூறி பழைய இலக்
கணை மரபு - பரம்பரைகளை அப்படி அப்ப
டியே கட்டிக்காக்க முனையும் மரபு வாதம்.

ஐந்தாவது: "தரணி ஆண்ட தமிழ்
தனித்துவம் வாய்ந்தது" என்றும், 'தமிழ்
புனிதமானது' என்றும் கூறி; பிறமொழிச்
சொற்களின் சங்கமத்தை எதிர்க்கும் 'புனித'
வாதம்.

ஆறாவது: மொழி பற்றிய, மொழி
வளர்ச்சிபற்றிய விஞ்ஞான பூர்வமான-சரித்
திர ரீதியான கண்ணோட்டம்.

இந்த மாறுபட்ட, எதிரெதிரான கருத்
துக்கள் தமிழ் மக்கள் மத்தியில் - தமிழ்
வளர்க்கும் ஆசான்கள் மத்தியில் ஏற்படுத்தி
யுள்ள கொள்கைக் குழப்பத்திற்கு - தத்து
வக் குழறுபடிக்கு முடிவும் விடிவும் காணு
மல், அதாவது தமிழ்வளர்ச்சிக்கு யதார்த்த
பூர்வமான, ஸ்தூலமான, நடைமுறைச்
சாத்தியமான ஒரு பாதையைத் தேர்ந்
தெடுத்துச் செயற்படாது தமிழ் வளர்வதைப்
பற்றிப் பேசுவது புத்திபூர்வமற்றது -
வெறும் பிரமை. எனவே மேற்குறிப்பிட்ட
ஆறு கருத்தோட்டங்கள் பற்றியும் தெளி
வான தீர்க்கமான விளக்கம் ஏற்பட வேண்
டியது அவசியம்.

முதலாவது கண்ணோட்டம்பற்றி, அதா
வது தமிழ், தெய்வம் தந்த மொழி என்பது
பற்றி ஆராய்வதே அர்த்தமற்றது - அறு
வசியமானது. இந்த வாதம் சரித்திரத்தை,
மனித சமூகத்தினதும் - மொழிகளினதும்
பரிணும வளர்ச்சி பற்றிய சரித்திரத்தைப்
புரட்டுகிறது. மனித அறிவைக் கேலிசெய்து
கொச்சைப்படுத்துகிறது. தமிழ் தெய்வீக
மொழி என்ருல் அது தெய்வத்தின் சிருஷ்டி
என்று கூறப்படும் மனித குலம் அத்தனையி
னதும் ஒரே ஒரு மொழியாக இராது,
ஆளுக்கு ஒரு முழமாகக் கூறுபோட்டுப்
'பாராண்ட' மூவேந்தர்களின் ஒரு சிறு விட்
டத்திற்குள் மட்டும் மடங்கிக் கிடந்தது
ஏன்? பிழைப்புத்தேடி புகலடைந்த 'புக்ககங்'
களில் மட்டுமல்ல, பிறந்த தமிழகத்திலேயே
இளைத்த - இழிவான நிலையில்; ஆட்சிப்பீட
மேற லாயக்கற்றதாக தெய்வந் தந்த தமிழ்
இருப்பது ஏன்? தமிழ் தெய்வமொழியானுல்
தமிழனின் தெய்வ ஆராதனைக்குக்கூட அரு
கதையற்றதாக - தெய்வத்திற்குக்கூடப் புரி
யாது என்ற நினைப்பில் 'தெய்வத் தமிழ்'
ஞலேயே வாழ்வில் - வழிபாட்டில் புறக்
கணிக்கப்பட்டிருப்பதேன்? தமிழ்
'தெய்வமொழி' என்ருல் - தமிழன் 'தெய்வச்
சாதி' என்ருல் - "பற்பல தீவினும் பரவிய
விவ்வெளிய தமிழ்ச்சாதி தடியுதையுண்டும்,
காலுதையுண்டும், கயிற்றடியுண்டும்" வருந்
துவது - இழிவுற்று இன்னல்படுவது ஏன்?
மகாகவி பாரதிகூறுவது போல 'நாட்பட
நாட்பட நாற்றமும் சேறும் பாசியும்
புதைந்து நோய்க்களமாகி விட்டதேன்?
நவீன யுகத்தின் பல பொருட்களுக்கு
காலத்தைக் கடந்து நிற்கும் 'தெய்வ'த்தின்
மொழியில் சொற்களுக்குத் தட்டுப்பாடு
இருப்பது ஏன்?

தமிழ் தெய்வீக மொழி என்பவர்கள்,
அது அகிலாண்ட சக்தியைப் போலவே
அழியாதது என்பவர்கள் தமிழின் வளர்ச்
சிக்கு - தமிழ்ச்சாதியின் வளர்ச்சிக்கு ஏற்
படும் தடைதடங்கல்களை நீக்கவும், தமிழர்
களின் தேசியஇனப் பிரச்னைகளைத் தீர்க்க
வும், தமிழை வளர்க்கவும் நடவடிக்கைகளை
மேற்கொள்ளாது விடுகிருர்கள். 'தமிழ்
தெய்வமொழி. எனவே அது அழியாதது'



என்று கூறுவதன் மூலம் தமிழினதும், தமிழர்களினதும் உரிமைகளை வென்றெடுப்பதிலும் - தமிழ் வளர்ச்சியிலும் தமிழ் மக்களினது பரவலான ஜனநாயக இயக்கத்தை வளர்க்க, நடத்த மறுக்கிருர்கள். அதன் மூலம் தமிழைக் கொல்லும், தமிழ்மக்களின் நலன்களைக் கொல்லும் தமிழ் விரோதிகளாகவே யதார்த்தத்தில் மாறுகிருர்கள். இந்தத் தத்துவம் நிர்மூடத்தனமானது - துரோகத்தனமானது. தமிழை வளர்க்க தமிழர்களின் வாழ்வை வளர்க்க செயல்படாது 'அபயம்' கூறி அழிவுக்கு வித்திடும் வாதம் இது.

இரண்டாவது ரகத்தினர் இமயத்திலும் கடாரத்திலும் கொடி பொறித்த பரம்பரை பற்றிப் பேசி ஆவேச உணர்ச்சியை எழுப்புவார்கள். முதல் ரகத்தினருக்கு நேர்மாருக தமிழுக்கு 'அழிவு' வர்து விட்டது என்று ஆரூடம் பார்த்து அலறுபவர்கள். இவர்களும் சரித்திரத்தை அறியாதவர்கள். சரித்திரத்தைப் புரட்டுபவர்கள் சரித்திரத்தில் நம்பிக்கை அற்றவர்கள். மொழிப் பிரச்னை - தேசிய இனப் பிரச்னைகள் ஜனநாயக ரீதியில், சமாதான பூர்வமான வழிகளில், காலத்தின் பக்குவ நிலையில் தீர்க்க முடியும் என்ற சரித்திர உண்மையில் இவர்கள் நம்பிக்கை அற்றவர்கள். தமிழ் உணர்வையும், இன உணர்வையும் உண்டாக்கிய சாதகமான அம்சம் இருந்த போதிலும் இந்த உணர்ச்சிப் பிரவாகம் 'மொந்தைப் பழைய கள்ளில் மோடி கிறுக்க' வைத்து பூசலுக்கும் பொய்மைப் பகைக்கும் வித்திட்டு ரத்த வெள்ளத்தில் மடைதிறந்து விடுவதில் தான் முடிகிறது. தமிழ் வளர்ச்சிக்கான ஸ்தூல நடவடிக்கைகளை எடுக்க முடியாத குழப்ப நிலை உருவாக்கப்படுவதுடன் மொழி-தேசிய இனப் பிரச்னைகளுக்கும் ஜனநாயகத் தீர்வு ஏற்படுவதையும் தடுக்கிறது.

இந்த ரகத்தினர் வெறும் உணர்ச்சிகளின் மூலம், ஆவேசத்தின் மூலப்பிரச்னைகளுக்கு முடிவு காண முடியும் என்று உண்மைக்கு மாருக ஊமைக் கனவு காண்பவர்கள், ஒருமொழியை அம்மொழி பேசும் மக்களிடமிருந்து இவர்கள் தனிமைப்படுத்திப் பார்க்கிருர்கள். பெருவாரி மக்களின் வளர்ச்சியோடு, விடுதலையோடுதான் மொழியின் வளர்ச்சியும், விடுதலையும் ஒன்றிக் கிடக்கிறது என்ற சரித்திரச் சத்தியத்தைப் பார்க்க மறுக்கிருர்கள். மக்களை மறந்து மக்களின் ஏனைய நலன்கள் அனைத்தும் மறந்து வெறும் மொழியைப்பற்றி மட்டும் பேசுகிருர்கள். இவர்களுக்கு மொழி மக்களின் கலை - கலாசாரத்தை, அறிவு - ஆராய்ச்சியை, பொருளாதார - அரசியல் துறைகளை, வாழ்வை - வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கான - வளர்ப்பதற்கான ஒரு சாதனமல்ல. அதற்குமாருக அது வெறும் ஆவேசப் பொருள் - அபின்.

மூன்ருவது வகையினர் 'கல்தோன்றி மண்தோன்ருக் காலத்தில் முன்தோன்றி மூத்தகுடி' என்ற சரித்திரப் புரட்டலுடன் ஆரம்பித்து 'மண் தோண்டி வானம் பார்க்கும் "இன்றைய நிலையிலும் தமிழை கன்னி கழியாக் குமரியாக - கன்னித் தமிழாகக் கட்டியங் கூறுபவர்கள். இவர்களும் முன்னையவர்களைப் போலவே மொழி வளர்ச்சி - பரிணமம் பற்றிய சரித்திர உண்மைகளை உணராதவர்கள் தமிழுக்கு வாலிபமும், விறுமுட்ட இவர்கள் விரும்பியபோதிலும் 'கன்னி கழியா' நிலையில் தமிழைக் காண்பதன் மூலம் தமிழின் காலவளர்ச்சியைப் பார்க்க மறுப்பதுடன் புதிய வளர்ச்சிகளையும் விரும்பாதவர்களாக இருக்கிருர்கள்.

'கன்னியான இதன் பால் 'அனைத்தும் உள்ளது' என்று 'மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் 'பேசும்' இவர்களின் வாதம் யதார்த்த நிலையைப் பார்க்க மறுப்பதுடன் உலக அறிவு - விஞ்ஞான வளர்ச்சியின் புதிய புதிய உண்மைகளை வரவேற்கவும் கையேற்றுத் தனதாக்கவும் வேண்டிய சரித்திரக் கடமையை மறுக்கிறது. இதன்மூலம் தமிழ் வளர்ச்சிக்கும் - தமிழர்கள் பல்வேறு வளர்ச்சிக்கும் இவர்கள் நடைமுறையில் முட்டுக்கட்டை போடுகிருர்கள்.

நான்காவது வகையினர் இற்று இடிந்து
போன இலக்கண வரம்புகளுக்கும், மாய்
ந்து மறைந்து போன மரபு - பரம்பரைக
ளுக்கும் ஒட்டும் கட்டும் போடுபவர்கள்.
இவர்கள் மொழியின் வளர்ச்சிப் பரிணா
மத்தை - சரித்திரத்தின் வளர்ச்சி விதிக
ளைத் தெரியாதவர்கள். பல நூற்றாண்டுக
ளுக்கு முன் அன்றைய மொழி வளர்ச்சியின்
தேவைக்குத் தக்கதாகத் தோன்றிய இலக்
கண - மரபு வரம்புகளையும் வரையறைகளை
யும் இன்றைய மாறுபட்ட வளர்ச்சி நிலையி
லும் வலுக்கட்டாயமாகத் திணிப்பவர்கள்.
இன்றைய காலத்தின் - வளர்ச்சியின்
தேவைக்குத் தக்கதாகப் புதிய இலக்கணங்
களும், மரபு பரம்பரைகளும் தோன்றுவதை
எதிர்ப்பவர்கள் இவர்கள். இதன்மூலம் தமி
ழின் வளர்ச்சிக்கும் - தமிழர்களின் புதிய
‘மரபு - பரம்பரை’த் தோற்றத்திற்கும் முட்
டுக்கட்டையிடுபவர்கள். சரித்திரத்தின்,
வாழ்வின், மொழியின் வளர்ச்சியை பழைய
‘இலக்கண - மரபு’ இரும்புக் கூட்டுக்குள்
அடைத்து முன்னேற்றத்தைத் தடுக்க எத்த
னிப்பவர்கள் இவர்கள் புதியவற்றின் பகை
வர்கள்.

கடந்த கால - காலத்தால் கடர்த இலக்கண - மொழி வரையறைகளை அளவுகோலாகக் கொண்டு இன்றைய இலக்கியங்களை, இன்றைய தமிழை அளந்து அலுத்து விரக்தியுற்ற நிலையில் ‘இலக்கியம் வளரவில்லை - தமிழ் அழிகிறது’ என்று ஒப்பாரி வைத்து இன்றைய படைப்பிலக்கியங்களை நிராகரித்து ‘சூன்ய’த்தில் வாழ்பவர்கள் - அல்ல செத்துக்கொண்டிருப்பவர்கள். ஆனால் அதே நேரத்தில் இவர்கள்தானும் பண்டைய இலக்கிய மரபில் - இலக்கண முறையில் இன்று எதுவும் படையாதவர்கள், படைக்க வக்கில்லாதவர்கள்.

எனவே இவர்களின் வாதம் ஒட்டு மொத்தத்தில் சூன்ய வாதமே.

ஐந்தாவது வகையருக்கள் தமிழின் தனித்துவம், புனிதத்துவம் பற்றிப் பேசு

பவர்கள். இந்துக் கலாசாரத்தின் சங்கமத்
தில், புதிய கலாசாரங்களின் வருகையில்
‘கொடுத்தும் எடுத்தும்’ தமிழ் வளர்ந்துள்ள
போதிலும், பல்லாயிரக் கணக்கான பிற
மொழிச் சொற்கள் தமிழில் கலந்து தமிழர்
களின் நாளாந்த வாழ்வில் ஐக்கியப்பட்டு
விட்டபோதிலும், தமிழில் - தமிழனில்
இணைந்து பிணைந்து ஒன்றாகிவிட்ட இந்த
ஐக்கியத்தை எதிர்த்து இவர்கள் ‘புனிதப்
போர்’ தொடுத்துள்ளார்கள். சந்திரமண்ட
லத்தியல்பு தெளிந்து அண்டவெளியை
வெல்லும் ரொக்கட் யுகத்தின் புத்தம் புதிய
கலைகளைத் தமிழில் கொண்டுவருவதை இவர்
களின் போக்குத் தடுக்கிறது.

புனிதத்துவத்தின் பேரால் தமிழையும், தமிழர்களையும் இந்துக் காலாசர்ரத்திற்கு முந்தியகால கட்டத்திற்குப்பின் தள்ள இவர்கள் எத்தனிக்கிறார்கள். அத்துடன் சரித்திரத்தின் முன்னேற்ற வளர்ச்சியையும் தடுக்க முனைகிறார்கள். என்றாலும் வாழ்வும் யதார்த்தமும் இவர்களின், ‘தூய்மை’ வாதத்தைத் தூக்கியெறிந்துவிட்டது.

ஆறாவது வகையினர் மொழியைப் பற்றிச் சரித்திர பரமான—விஞ்ஞான பூர்வமான கருத்தோட்டம் கொண்டவர்கள். தமிழ்மொழி இவர்களுக்கு ஒருசாதனம்—ஒருகருவி. மனிதவர்க்கத்தின் பரிணாம வளர்ச்சியில் — சரித்திரத்தின் போக்கில் மொழிகள் தோன்றின் என்ற காலத்தின் தேவையோடு காலத்தின் தேவைக்கு ஈடுகொடுத்து அவை வளர்ந்தன மாறின; மறைந்தன, தேங்கின, புத்துருப் பெற்றன, வளர்கின்றன என்ற சரித்திர உண்மையைத் தெரிந்தவர்கள். எனவே தெய்வீகப் பிரமையோ, ஆவேச மயக்கமோ. பழம்பெருமைப் பீத்தலோ, இலக்கணத் தடிப்போ, புனிதஇறுமாப்போ இன்றி மொழி வளர்ச்சி பற்றிய விஞ்ஞானபூர்வமான கண்ணோட்டத்துடன் மொழிவளர்ச்சிக்கு ஸ்தூலமான நடைமுறைச் சாத்தியமான நடவடிக்கைகளை எடுக்க வழிவகைகளை முன்வைக்கிறார்கள்.



சமூகத்தின் வளர்ச்சியோடு, நாட்டின் வளர்ச்சியோடு, நாட்டுமக்களின் வளர்ச்சியோடுதான் மொழிவளர்கிறது என்றும், எனவே மொழிவளர நாடு வளரவேண்டும், நாட்டுமக்கள் வளரவேண்டும், மக்களின் வாழ்வு வளரவேண்டும் என்றும் இவர்கள் கருதுகிறார்கள். இவர்கள் மொழியை அம்மொழி பேசும் மக்களுடனும், அவர்கள் வாழும் நாட்டுடனும், மக்களினதும், நாட்டினதும் பொதுவான வளர்ச்சியுடனும் ஒன்றுபடுத்திப் பார்க்கிறார்கள்.

மொழி வளரவேண்டுமென்றால் மொழி பற்றி திசைமயக்கமற்ற தெளிவான கருத்து அவசியம், திட்டவட்டமான செயல் திட்டம் அவசியம். ‘நாட்பட நாட்பட நாற்றமும் சேறும் பாசியும் புதைந்து’ தமிழ் ‘நோய்க்களமாகி’ விட்டதென்றால் அதற்குக் காரணம் காலத்தின்போக்கில் ஏற்பட்ட தேக்கங்களையும் அதன் விளைவான சேற்றையும், பாசியையும் தெய்வீக முலாம்பூசித் தமிழ்ச் சாதி இதுவரை மறைக்க முற்பட்டதேயாகும். இன்றைய உலகத்தின் வளர்ச்சியை எட்டிப்பிடிக்க முயலாது ‘கொடிகட்டிப் பறந்த’ பழங்கதைகளை மறைவாக நமக்குள்ளே பேசிப் பேசி அந்தப் பேச்சிலேயே தமிழ்ச்சாதி செத்துச் சிவலோக பரலோக பிராப்தியடைந்ததே காரணம்.

தமிழ் அதன் இன்றைய தேக்கநிலையிலிருந்து விடுபட்டு நவீன உலகத்தின் மொழியாக, நவீனக் கருத்துக்கள் பஞ்சபூதச் செயல்களின் நுட்பங்கள் நிறைந்த மொழியாக மாறவேண்டுமானால் மொழியைப் பற்றிய உக்கிப்போன, காலாவதியான கருத்துக்கள் மறைந்து புதிய விஞ்ஞான ரீதியான—சரித்திரபரமான கருத்துக்களும் அவற்றைத் தொடர்ந்து ஸ்தூலமான காரியார்த்தமான செயலாற்றலும் அவசியம்.

இதற்கு:—

ஒன்று: மொழிபற்றிய தெய்வீகப் பிரமைகளையும், ‘கன்னி’ மயக்கங்களையும் விட்டொழித்து மொழிவளர்ச்சிபற்றி விஞ்ஞானக் கருத்துக்கள் அங்கீகரிக்கப்பட வேண்டும்.

இரண்டு: நியாயமான அளவு மொழி ஆர்வம் ஏற்படவேண்டுமேயல்லாது அது மொழிவெறியாக — ஆவேசமாக மாறாது பார்த்துக்கொள்ளவேண்டும். நிதானமான ஒருநிலையில்தான் மொழி வளர்ச்சிக்கான மொழிப்பிரச்சனைக்கான தீர்வுகளைக் காண முடியும்.

மூன்று: மறைவாக நமக்குள்ளே பழங்கதைகளைப் பேசும் கவைக்குதவாத போக்கு மறையவேண்டும். நமது மொழியின் வெவ்வேறு வளர்ச்சி—தேக்கநிலைகளை ஆராய்ந்து உலகவளர்ச்சியோடு ஐக்கியப்பட்டுப் புதியவளர்ச்சிக்குத் திட்டமிட வேண்டும்.

நான்கு: ‘ஆங்கிலமே உலகம்’ என்ற பேதைப்போக்கு—தேசாபிமானமற்ற துரோகப் போக்கு ஒழிக்கப்படவேண்டும். நமது மொழியில் நவீன உலகக் கலைகள் அனைத்தையுங் கொணடுவர முடியும் என்ற நம்பிக்கையுடன் செயலாற்ற வேண்டும்.

ஆறாவது, கண்ணோட்டத்திலிருந்து—மொழிபற்றிய விஞ்ஞான பூர்வமான கண்ணோட்டத்திலிருந்து தமிழ்வளர்க்க வழிவகைகளைப் பார்ப்போம்.

(1) நமது சமூகத்தின் வாழ்விலும், எண்ணத்திலும் ஆங்கிலம் இன்று வகிக்கும் ஆதிக்கம் ஒழிக்கப்பட வேண்டும். ஏகாதிபத்தியத்தின் சகல வடிவங்களையும் (மொழி ஆதிக்கம் உட்பட) எதிர்க்கும் தேசாபிமான உணர்வு பரவலாக வளரவேண்டும்.

(2) தமிழை நேசிக்கும்—தமிழ்மக்களை நேசிக்கும் கௌரவிக்கும் தன்மை, பண்பு நிறைவுபெற வேண்டும். தமிழ்மக்கள் மத்தியிலிருந்த மேல்தட்டினர் ஆங்கிலமோகிகளாக மாறி அன்னை மொழியை மறந்து திரிந்தபோது சாதாரணத் தமிழ்மக்கள்—பாடுபடுந் தமிழ்மக்கள்தான் தமிழைப் பேசி

னார்கள்—தமிழரிற் சிலர் கேலிசெய்த போதிலும் பேசினார்கள். இதன்மூலம் தமிழையும் தமிழ்க்கலை கலாசாரங்களையும் காப்பாற்றினார்கள். தமிழ்காத்த இந்த விழியெதிர் காண்தெய்வங்களை தமிழ்பற்றி இன்று பேசும் ஒவ்வொருவரும் முதலில் சிரந்தாழ்த்தி வணங்கவேண்டும்.

(3) தமிழர்கள் தமிழிலேயே உறவு கொள்வது. தமிழிலேயே பேசுவது, தமிழிலேயே எழுதுவது என்ற சங்கற்பத்தை நடைமுறை யதார்த்தமாக்கவேண்டும், சமுக அரசியல், கலாசார தனிப்பட்ட சகல நடவடிக்கைகளையும் தமிழிலேயே தமிழர்கள் செய்யவேண்டும். 'தெருவெலாம் தமிழ் முழக்கம்' கேட்கவேண்டும்.

(4) பல நூற்றாண்டுகளுக்கு முன் தோன்றிய இலக்கணச் சூத்திரங்களுக்கு இன்றும் சாஷ்டாங்க பிரதிஷ்டை செய்து வளரும் தமிழுக்குத் தடுப்புச்சுவர் எழுப்புவது நிறுத்தப்படவேண்டும். பண்டிதர்களின் 'இலக்கணச் சிறையை' எதிர்த்தவாதம் இலக்கண அராஜகத்தில் கொண்டுபோய் விடக்கூடிய ஆபத்தையும் அதே நேரத்திற் தடுக்கவேண்டும். இன்றைய தமிழின் வளர்ச்சிக்கு ஏற்றதான பழைய இலக்கணவரையுறுப்புக்களை ஏற்று, வளரும் தமிழுக்குத் தக்க இலக்கணம் செய்யவேண்டும். தமிழ்ப் பண்டிதர்களின் இலக்கணப் 'பூதங்களின்' சொத்தாக இல்லாது மக்கள் சொத்தாக்கப்படவேண்டும், ஆனால் அதே நேரத்தில் மொழியை வளப்படுத்தி மேலும் வளர்க்கவேண்டும்.

(5) 'மரபு பாரம்பரியம்' என்பவை வெறும் பஜனைப் பொருட்களாக்கப்பட்டுள்ளநிலை ஒழிக்கப்பட்டுப் பழைய மரபு பாரம்பரியங்களிலுள்ள இன்றைக்குத்தேவையான ஜனநாயக அம்சங்களைக் கையேற்று மேலும் முன்னுக்குக் கொண்டுபோகவேண்டும். ஒவ்வொரு தமிழனும் தமிழ் மரபின் பாரம்பரியத்தின் ஜனநாயக ஓட்டத்தில் சங்கமமாகிப் புதிய யுகத்தின் புதிய வளர்ச்சியின் சிருஷ்டி புருஷனாக வேண்டும். பழமை என்றபேரில் பழமையை அடியோடு நிராகரிக்கும் கண்மூடிப்போக்கு நிர்த்தாட்சண்யமின்றி நிர்மூலமாக்கப்படவேண்டும். மனிதனின் முன்னேற்றத்திற்குச் சாதகமாக இருக்கும் சம்பத்துக்கள் அனைத்தையும் நம்மில் நமதாக்கிக்கொண்டு அவற்றைக் காலத்தின் தேவைக்கேற்ப மேலும் முன்னெடுத்துச் செல்லவேண்டும்,

(6) புதிய கலைகளை—பஞ்ச பூதங்களின் நுட்பங்களைக்கூறத் தமிழின் மூலத்தைத் தழுவிய புதியசொற்கள் உருவாக்கப்படுவதுடன் அவசியமான பிறமொழிப் பதங்களை ஏற்றுக்கொள்ளத் தயங்கப்படாது. மொழித்தூய்மை என்பது வெறும் ஏமாற்று. பிறமொழிகள் கலவாத எந்த ஒரு மொழியும் உலகிலில்லை, மொழிகளின் வளர்ச்சிக்கு — தங்குதடங்கலற்ற வளர்ச்சிக்கு மொழிகளுக்கிடையில் நிகழும் பரஸ்பர பரிமாறல்கள் உதவுகின்றன.

(7) 'சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்' என்ற எங்கள் பாரதியின் அன்புக் கட்டளையைச் சிரமேற்கொண்டு உலகத்துப் பழம்பெரும் இலக்கியங்கள் முதல் புத்தம்புதிய கலைகள் பஞ்சபூதச் செயல்களின் நுட்பங்கள் அனைத்தையும் (செய்மதிமுதல் சந்திரமண்டல ரெக்கெட் வரை விஞ்ஞானத்தின் நவீனவளர்ச்சிகள் அனைத்தையும்) தமிழில் கொண்டுவந்து சேர்க்கவேண்டும். அதாவது தமிழ் நவீன உலக மொழியாக, விஞ்ஞான பொழியாக வளரவேண்டும். ஆய்வுக்கூடங்கள், ஆக்க ஆராய்ச்சி—கண்டுபிடிப்பு நிலையங்கள் பல்கலைக்கழகங்கள் தொழில்நுட்பக் கல்லூரிகள் பல்கிப் பெருகவேண்டும்.

ஆங்கிலம் உட்பட உலக மொழிகள் அனைத்திலும் பாண்டித்தியம் பெற்ற பன்மொழி அறிஞர்களை உருவாக்க வேண்டும்.



அத்துடன் பெருவாரி மக்களும் உலகமொழிகளில் பரிச்சயம் பெறவேண்டும்.

(8) பழங்கால இலக்கியங்களுக்கு உரையும், உரைக்கு உரையும், பத உரையும், பொழிப்புரையும், சிறப்புரையும் செய்து செய்து செய்து அதையே ஆதியும் அந்தமுமாகக் கொண்டு அதிலேயே வாழ்ந்து அதிலேயே மடியும் தமிழறிஞர் கூட்டம் இந்தப் 'பற்றி' இலக்கியச் சிறைக் கூண்டிலிருந்து விடுபட்டு வெளிவந்து படைப்பாற்றலுடன் - சிருஷ்டி உத்வேகத்துடன் புதிய புதிய இலக்கியங்களை, நவீன சாஸ்திரங்களை, வாழ்வின் அறிவின் சகல துறைகளையும் பிரதிபலிக்கும் புதிய புதிய இலக்கியங்களை, நவீன சாஸ்திரங்களை, வாழ்வின் - அறிவின் சகல துறைகளையும் பிரதிபலிக்கும் புதிய புதிய நூல்களைத் தமிழில் ஏராளமாக உருவாக்க வேண்டுர்.

'சங்க இலக்கியங்களும், ஆழ்வார் இலக்கியங்களும்தான் அமர இலக்கியங்கள். ஏனைய அனைத்தும் வெறும் இலக்கியக் குப்பைகள்' என்று கருதும் 'மர மண்டை'ப் போக்கும், புதிய இலக்கியங்களையும் - மனித சமுதாயத்தின் இன்றைய வளர்ச்சிகளையும் நிராகரிக்கும் 'சூன்ய'ப் போக்கும் நிர்த்தாட்சண்யமின்றி நிர்மூலமாக்கப்பட்டு பழையவற்றிலுள்ள உயர்ந்தவற்றைப் போற்றும் அதேவேளையில் புதியனவற்றை வரவேற்கும் மனப்பாங்கு - மனிதப்பண்பு வளரவேண்டும்.

ஆனால் அதே நேரத்தில் படைப்பிலக்கியங்களின் பேரால் பழைய மாபெரும் இலக்கியங்களை நிராகரித்து வெறுமையில் - நின்று புதிய இலக்கியம் செய்யப்போவதாகக் கூறும் தான்தோன்றிப் போக்கும் தயவுதாட்சண்யமின்றித் தகர்க்கப்படவேண்டும்.

பழைய இலக்கியங்களை சரித்திர ஆய்வுக் கண்ணோட்டத்துடன் ஆராய்ந்து அவற்றிலுள்ள இன்றைய காலத்தின் தேவைக்கேற்ற முற்போக்கான - ஜனநாயகக் கருத்துக்களை மேலும் முன்னெடுத்துச் செல்லும் அதே வேளையின் சிருஷ்டி இலக்கியத்திற்கு அதிக அழுத்தம் கொடுக்கப்படவேண்டும்.

(9) புதிய கலைகள் - புதிய சாஸ்திரங்களை தமிழில் செய்யும் அதேவேளையில் தமிழ் மக்களின் உயர்ந்த பண்பாட்டுச் சம்பத்துக்களை - கலாசார பிதுரார்ஜிதங்களை ஒறுத்து ஒதுக்கி மேலை நாடுகளைக் கண்மூடித்தனமாகப் பாவனை செய்யும் திரிபுகளையும் - போலித்தனத்தை எதிர்த்தும் ஈவிரக்கமற்றுப் போராடவேண்டும். இலக்கியம் தேசிய வடிவம் பெற்றதாக இருக்கவேண்டும். அதே நேரத்தில் தேசிய இலக்கியத்திற்கும் சர்வ தேசிய இலக்கியத்திற்கும் உறவுப் பாலம் போடப்படவேண்டும்.

(10) தமிழ் வளர்ச்சிக்குத் தமிழ் நூல்கள் இடைமுறிவின்றி இடையறாது வெளிவரவேண்டும். இதற்குச் சிறந்த பிரசுராலயங்கள் ஆரம்பிக்கப்படவேண்டும்.

(11) தமிழ் ஆட்சி மொழியாகத் தமிழர் வாழும் பிரதேசங்களிலும், தமிழர்களின் போதனா மொழியாகவும் மாறவேண்டும். ஆட்சி அந்தஸ்துப் பெறாத எந்த மொழியும் பூரணமாக வளர முடியாது. போதனாமொழியாகாத எந்த மொழியிலும் புதிய கலைகள், புதிய பதங்கள், புதிய வளர்ச்சிகள் இடம் பெறா. தமிழை தமிழர் பிரதேசங்களின் ஆட்சி மொழியாக்குவதும் தமிழர்களின் பிரதான கேந்திரக் கடமை. தேசியக் கல்வி முறை தோன்றுவதும், தேசியஇன சுயாட்சி முறை உதயமாவதும் தமிழ் வளர்ச்சிக்கு அவசியமானவை.

(12) தமிழை தமிழ் மக்களிடமிருந்து, தமிழ் வளர்ச்சியை தமிழ் மக்களின் வளர்ச்சியிலிருந்து பிரித்துப் பார்ப்பது அபத்தமானது. தமிழர்கள் வளரவில்லை என்றால் அவர்களின் கருத்துக்களைத் தெரிவிக்கும் சாதனமான தமிழ் வளரமுடியாது. பெருவாரித் தமிழ் மக்களின் அரசியல், பொரு

ளாதார, கலாசார, சமூக, விஞ்ஞான அறிவு வளர்ச்சியில்தான் தமிழ் வளர முடியும். எனவே மொழி வளர்ச்சி பெருவாரி பொது மக்களின் அரசியல், பொருளாதார, சமூக, கலாசார வளர்ச்சியோடும், விடுதலையோடும் பின்னிப் பிணைந்து கிடக்கிறது.

(13) சமூகத்தின் அடித்தட்டில் அமுக்கப்பட்டுக் கிடக்கும் பெருவாரி மக்கள் சுதந்திரமும், சுபீட்சமும் பெருத நிலையில், அவர்கள் வாழ்க்கைத்தரமும் — கலாசாரத் தரமும் உயராத நிலையில் தமிழின் உயர்வு பற்றி — வளர்ச்சிபற்றிப் பேசுவது சுவர் இன்றிச் சித்திரம் தீட்ட முனையும் பேதைமைத் தனத்தையே குறிக்கும். பெருவாரி மக்கள் 'விழி பெற்றும் பதவி கொள்ளும்' போது தான், 'கலைப் பெருக்கும் கவிப் பெருக்கும்' பெருவாரி மக்களின் மத்தியில் ஊற்றெடுத்து ஆக்குரோணி வெள்ளமாகப் பெருகும்போது தான், பெருவாரி மக்கள் 'ஆயகலைகள் அறுபதிலும்' தேர்ச்சிபெறும்நிலையில்தான்— அதாவது பெருவாரி மக்களின் கலை—கலாசாரத்தரம் உயரும் போதுதான் செந்தமிழ் செழிக்க முடியும்; வண்டமிழ் வளர முடியும் தமிழை வளர்க்க விரும்புபவர்கள்—திரிகரண சுத்தியுடன் விரும்புபவர்கள் பெருவாரி மக்களின் விமோசனத்திற்கான சமூகப் போராட்டத்தில் இதயமார இணைய வேண்டும்.

(14) நவீனக் கலைகள், நவீன வளர்ச்சிகள் தமிழ்பேசும் பூமிக்கு வராது, தமிழ்ப் பிரதேசங்களின்—நாட்டின் நடைமுறை யதார்த்தமாகாது தமிழில் நவீனக் கலைகள் — நவீன வளர்ச்சிகள் பற்றிப் பேசுவது நிர்மூடத்தனமானது. தமிழில் நவீனக் கலைகள் வளரவேண்டுமானால் நாடு நவீன வளர்ச்சி—நவீனத் தொழில் வளர்ச்சியடைய வேண்டும். ஆங்கில நாட்டில் தொழிற் புரட்சி நடந்திராவிட்டால் ஆங்கிலம் வளர்ந்திருக்க முடியாது. ருஷ்ய நாட்டில் 'ஆகா என்று எழுந்த யுகப் புரட்சி' நடந்திருக்காவிட்டால் ருஷ்ய மொழியும், ஏனைய சோவியத் மொழிகளும் சந்திர மண்டலத்தியல்பு தெளிந்த மொழிகளாக நாற்பது ஆண்டுகளில் வளர்ந்திருக்க முடியாது. எனவே நமது மொழி வளரவேண்டுமானால் நமது நாடு தொழில் மயமாக வேண்டும். விஞ்ஞானம் தமிழனுக்கு மொழிபெயர்ப்புக்குரிய சாதனமாக மட்டுமில்லாது தமிழனின் சாதனையாகவும் மாறவேண்டும். ஆகவே தேசத்தை — வாழும் பிரதேசத்தை தொழில் மயமாக்க, கலோனியல் அமைப்பை மாற்றி தேசிய —ஜனநாயக மாற்றத்தை ஏற்படுத்துவதற்காக நடைபெறும் பொதுப் போராட்டத்தில் தமிழர்கள் — தமிழ்ச்சாதி பரிபூரணமாகப் பங்கு கொள்ளவேண்டும்.

(15) மொழி வளர அந்தமொழி பேசும் மக்களுக்குரிய சுயாட்சி அவசியம். அப்பொழுதுதான் தமிழ் மக்கள் தமது பொருளாதாரத்தை— தமது தொழில்களை வளர்ப்பதுடன் கலை—கலாசாரங்களையும் வளர்க்க முடியும். வளர்ப்பதற்கான பணியில் நேரடியாக ஈடுபடமுடியும். ஐக்கிய இலங்கையில் பிரதேச சுயாட்சி பெற்று தமிழினமும் அதன் லௌகீக—ஆத்மீக செல்வங்கள் — சம்பத்துக்களும் செழித்து வளர தமிழ் மக்கள் தமது பிரதேச சுயாட்சியை நிதானமாக – ஜனநாயக வழிகளில் பெற முனைய வேண்டும்.

மொழி பற்றிய கொள்கைக் குழப்பத்திற்கு முத்தாய்ப்பு வைத்து, மொழி மயக்கத்திற்கு முடிவுகட்டி விஞ்ஞான பூர்வமான சரித்திர பூர்வமான கொள்கைத் தெளிவுடன் தமிழை வளர்க்க—தமிழரை வாழ்விக்க தமிழபிமானம், தேசாபிமானம் நிறைந்த நல்லோர் முன்வரவேண்டும்.

போராட்டம் ஒன்றே விமோசனத்தின் வழி மார்க்கம்—வளர்ச்சியின் விரி பாதை. அதேபோல கருத்துகளுக்கிடையில் நடைபெறும் போராட்டம் புதிய கருத்துக்களுக்கான சரியான கருத்துக்களுக்கான தோற்று பூமி. இந்த விளை நிலத்தை மேலும் வளப்படுத்தி செழுமையூட்டுவோமாக.

வாழ்க செந்தமிழ்! வாழிய நற்றமிழர்!!
தோன்றுக புதியதோர் உலகு!!!

———



[ பத்துப் பன்னிரண்டு தென்னைமரம் பக்கத்தேயுள்ள காணிநிலத்தையும் எட்டுத் திசையும் பறந்து விட்டு விடுதலையாகி நிற்கும் சிட்டுக்குருவியின் வாழ்வையும் விரும்பிய பாரதிப் பண்பின் பரம்பரையில் வந்த கவிஞர் யாழப்பாணன் "ஒருகுடிசை அமைத்திடவே உளம்பறந்து செல்லுதடி" என்று ஏழைகளின் குடிசைகளையும் சுற்றுடல்களையும் படம்பிடிக்கிறார் ].

# குடிசையில் சுவர்க்கம்

" யாழ்ப்பாணன் "

பரந்த கடலழகில் பற்றியுளம் பாயுதடி
விரிந்த வயலழகில் விழைந்தெனுளம் வீழுதடி
சரிந்த மலைகளிலே தாவியுளம் சாருதடி
கரந்த வாழ்வதனைக் கட்டறுத்தும் ஓடுதடி. (1)

ஒருகுடிசை அமைத்திடவே உளம்பறந்து செல்லுதடி
இருமருங்கும் இயற்கையெழில் என்னுளத்தை ஈர்க்குதடி
விரைமலரின் வாசனைகள் வெறியெனக்கு மூட்டுதடி
அருகமரும் கிளிமொழியுன் அமுதமொழி சுவர்க்கமடி. (2)

வண்டினங்கள் இன்சுருதி மகிழ்வுதரும் பாடலடி
கொண்டலசை குமுறல்களே கொட்டுமுயர் முழவமடி
அண்டர்களும் வியப்புறவே அருந்தமிழைச் சுவைத்திடுவோம்
எண்டிசைக்கும் இன்பெருக்கி இன்கவிகள் இசைத்திடுவோம். (3)

தென்றலுடன் தவழ்ந்திடுவோம் தேன்சுனையில் திளைத்திடுவோம்
குன்றுகளில் உருண்டிடுவோம் கொழுகொம்பில் தாவிடுவோம்
அன்றிலெனும் பறவைகளாய் அருகணைந்து மகிழ்ந்திடுவோம்
ஒன்றியொரு சோடிகளாய் உலகனைத்தும் உவந்திடுவோம். (4)

எனையணைந்து சேர்ந்திடடி என்குயிலி விரைந்திடடீ
தனியெனக்கு வழித்துணையாய் சகமுளநாள் சார்ந்திடடீ
சுனைகளிலே வீழ்ந்திடுவோம் தோய்ந்திடுவோம் பாய்ந்திடுவோம்
நினைவதனி லொன்றெனவே நீளிறக்கை அடித்திடுவோம். (5)

பாட்டிசைப்போம் பண்ணொலிப்போம் பறந்துவெளி திரிந்திடுவோம்
கூட்டிசைப்போம் குதூகலிப்போம் குயிலினமாய் குலவிடுவோம்
நாட்டிலுறு வளங்களெல்லாம் நமதுயர்ந்த செல்வமடி
மேட்டளந்து காட்டளந்து விண்ணளந்து விரைந்திடுவோம். (6)



● “நல்ல கனவு காண்பவர்கள் பாக்கியசாலிகள்...... கனவு காண்பது நம் வசததில் இல்லை...... ஆண்களைவிடப் பெண்களிடம் பகற் கனவு காணும் தன்மை அதிகம்!” ஏன்? ஆழமான சமய தத்துவார்த்த அம்சங்களையும் பொதிந்து மிகச் சுவையாக ஆராய்கிறது கட்டுரை.



# கனவு



— ‘ஆத்மஜோதி’ நா. முத்தையா —

கனவு காணாதவர் யாருமில்லை என்றுதான் நினைக்கின்றேன். மிருகங்கள்கூடக் கனவு காண்கின்றன என்று சமீபத்தில் விஞ்ஞானி ஒருவர் தமது கருத்தை வெளியிட்டிருந்தார். கனவு தாம் காண்பதில்லை என்று எவராவது தம்மைக் கூறிக்கொண்டால், அவர் கண்ட கனவு நனவில் இல்லாதுபோனது என்பதே கருத்து.

இறைவனார் ஒரு கனவு கண்டார். அக்கனவு ஓர் உருக் கொண்டது. அவ்வுருவே விராட்ஸ்வரூபம்! அப்பெரிய கனவுக்குள்ளே எண்ணிறந்த கனவுகள். கனவுக்குள்ளே கனவு என்றால் வேடிக்கையாக இல்லையா? ஒன்று தன்னைப் பலவாகப் பாவிக்கின்றது. பலவும் தம்மில் வெவ்வேறாக எண்ணுகின்றன. இங்ஙனம் தெய்வ சங்கற்பம் என்னும் விதையிலிருந்து இந்தப் பெரிய சம்சார விருட்சம் வளர்ந்தது.

கனவைப்பற்றிப் பலரும் பல விதமாகக் கூறுவர். மனது விழிப்பு நிலையின் அநுபவங்களால் அளிக்கப்பட்ட பொருள்களைக்கொண்டு கனவுகளை உண்டுபண்ணுகின்றது. தையல்இயந்திரம் கனவிலிருந்தே கண்டுபிடிக்கப்பட்டதென்றால் எவ்வளவு ஆச்சரியம். பெரியபெரிய கணித விற்பன்னர்கள் நனவில் செய்யமுடியாத கணக்குகளைக் கனவிற்செய்து நனவுக்குக் கொண்டுவந்திருக்கின்றார்கள். இன்னுஞ் சிலர் பரீட்சை வினாப் பத்திரங்களைக் கனவிலே படித்து நனவிலே விடை எழுதியிருக்கின்றார்கள். கண்ட கனவை ஞாபகத்திலே வைத்திருக்கமாட்டாதவர்களுக்கு இவையெல்லாம் பொய்யாகவும் புரட்டாகவுந் தோன்றலாம். ஆசைகளின் நிறைவேற்றமே கனவு.

விருப்பங்களை உள்ளது உள்ளபடி தோற்றுவிக்கும் கனவுகள் மிகமிகச் சிலவே. கனவிலே ஒவ்வொருவனும் தத்தமது சுயத்தன்மையை உணரலாம். மனப்பான்மை, இயற்கைப்போக்கு அவனுடையஆகாரம் ஆகியவற்றுக்குத் தக்கபடி கனவின் பிரதிக் கிரியைகளும் வேறுபடுகின்றன. கனவுகள் யாவும் சில விநாடிகளினால் தோன்றும் விஷயங்களே. பத்து விநாடிகளுக்குள் பல ஆண்டுகளில் நடக்கக்கூடிய சம்பவங்களை கனவில் அநுபவித்துவிடுகின்றார்கள். சிலருக்கு எப்போதாவது கனவுகள்



தோன்றும். சிலர் தினந்தோறும் கனவுகாண்பர். அவர்களுக்குக் கனவின்றிய தூக்கமே ஒருபோதும் இல்லை.

எனக்குச் சிறுவயதில் பெரிய பயம். தனிவழியில் பயம்; இருட்டறையில் பயம்; பாம்பை நினைத்தாலே இரவு முழுவதும் நித்திரை வருவதில்லை. மரணத்தைப்பற்றிய பயமோ அளவுகடந்தது. இறந்தபின் உடலைச் சுடுவார்களே என்று நினைக்கும்போது உடல் எல்லாம் நெருப்பால் வேகுவது போலிருக்கும். அத்தகைய பயம் வெகுநாட்களாக உள்ளத்திலே மறைவாக இருந்துவந்தது. “சுவாமீ என் உடலை எரிக்கும்போது எனக்கு நோகக்கூடாது” என்று இறைவனைப் பலமுறை வேண்டியிருக்கிறேன். பகவத்கீதையைப் படித்துக் கொண்டிருந்த காலத்தில் ஒருநாள் ஒரு கனவு கண்டேன். நான் செத்துப்போனேன். எனது உடலை எடுத்துக்கொண்டு சென்று விறகை அடுக்கி நெருப்பை மூட்டுகின்றார்கள். உடல் வேகின்றது. நான் பார்த்துக்கொண்டு நின்று சிரிக்கின்றேன்.

காலை எழுந்ததும் கனவு நினைவுக்கு வந்தது. நண்பருக்குக் கூறினேன். அவர் திருமணம் நிகழப் போகின்றது என மங்கலமாகக் கூறினார். அப்படி ஒன்றும் நிகழ்ந்துவிடவில்லை. அக்கனவின் பின்தான் மரணத்தைப்பற்றி உள்ளத்திலிருந்த பயம் நீங்கியது. எனது உடல் நெருப்பில் வேகுவதை நான் பார்த்துக்கொண்டு நின்று மகிழ்ந்த செய்தியை இன்று நினைத்தாலும் உள்ளத்திலே ஆனந்தம் பொங்கி எழுகின்றது. அன்று அக்கனவை நான் கண்டிராவிட்டால் இன்றும் எனக்கு மரணபயம் இருந்துகொண்டேதான் இருக்கும்.

இப்பிறப்பிலே ஒருநாளாவது இறைவனது திருக்காட்சி காண வேண்டும் என்பது பெரிய ஆசை. நனவிலல்ல; கனவில்தான். கனவில் கண்டால்தானே நனவிலும் நம்பிக்கையிருக்கும். “கனவிலேனும் காட்டென்றால் காட்டுகின்றாயில்லை” என வள்ளலார் ஏங்குகின்றார். நல்ல கனவுகள் காண்கின்றவர்கள் பாக்கியசாலிகள். யாருக்காவது கூடாதகனவு காணவேண்டுமென்ற ஆசை உண்டாகுமா? நல்ல கனவு காணவேண்டுமென்றுதான் விரும்புவார்கள். அது அவர்களால் முடிகின்றதா? அதுதான் இல்லை. கனவு காண்பது எம்வசத்தில் இல்லை.

கனவுதான் காணத் தெரியாது. பகற்கனவாவது காணத் தெரியுமோ என்றால் பலருக்கு அது கூடத் தெரியாது. எல்லா உளநூலாசிரியர்களும் பகற்கனவு மிக முக்கியம் என்று வெளியிட்டுள்ளார்கள், மாணவர்களில் எழுபது விதமானோர் அடிக்கடி பகற்கனவில் ஈடுபடுவதாகவும் முப்பது வீதமானோர் எப்போதாவது ஈடுபடுவதாகவும் விஞ்ஞானிகள் ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்கள். சிலர் சிறிது நேரமே அதில் ஈடுபடலாம். வேறு சிலர் நடக்க முடியாதவைகளை எண்ணி எண்ணி ஆகாயக் கோட்டைகள் கட்டலாம். இன்னுஞ் சிலர் எதிர்கால வாழ்க்கைக்

குத் தம் திறமைக்குத் தக்கவாறு
திட்டங்கள் வரையறுக்கலாம்.

சாதாரணமாக ஒருவனிடத்து
அவன் அயர்ந்து ஓய்ந்து
இருக்குஞ் சமயங்களில் பகற்
கனவு உள்ளத்தில் எழுகின்றது.
மேலும் ஒருவன் கும்பலில் இருக்
கும்போது பகற் கனவில் ஈடுபடுவ
தில்லை. தனிமையே பகற் கனவு
எழுவதற்கு வசதியாக அமைகின்
றது. பகல் நேரங்களை விடப்
பொழுது சாய்ந்த நேரத்திலும் இர
வில் நிலா வெளிச்சத்திலும் பகற்
கனவு அதிகம் எழுகின்றது.
'எல்ட்டன் மேயோ' போன்ற அறி
ஞர்கள் ஆண்களை விடப் பெண்க
ளிடத்துப் பகற்கனவு காணுந்
தன்மை அதிகம் இருக்கிறது என்று
வெளியிட் டிருக்கிறார்கள். இதற்
குக் காரணம் ஆண்களைவிடப்
பெண்கள் பெரும்பாலும் தங்கள்
மனம் முழுதும் பதியும் வேலைக
ளில் பொதுவாக ஈடுபடுவதில்லை
என்பதாகும்.

பகற்கனவுக்கு அடிப்படையாக
அமைவன நிறைவேறாத இயல்பூக்
கங்களும் இச்சைகளுமே. பகற்
கனவு ஓரளவு வாழ்க்கையில் நிறை
வேற்ற முடியாத இச்சைகள் நிறை
வுறும் வழியாக அமைந்து உள்
ளத்தைச் சமநிலையில் வைப்பதற்கு
ஏதுவாகின்றது. ஆனால் அள
வுக்குமீறி ஒருவன் பகற் கனவில்
ஈடுபடுவானாகில் அது பிறழ்வான
நிலைமையையே குறிக்கும். மக்கள்
வாழ்க்கையில் தோன்றும் முட்டுக்
கட்டைகளை ஒழித்துத் தம்காரியங்
களைச் சாதிப்பதே முறை. முயற்சி

செய்தால் நிறைவேற்றிக்கொள்
ளக்கூடிய இச்சைகளை அடைய
முயற்சி செய்யாமல் அஞ்சிப் பின்
வாங்கும் பகற்கனவில் நிறைவேற்
றிக்கொள்வது உறுதியான உள்ள
நிலையைக் குறிக்காது. பகற்கன
வில் மிகவும் ஈடுபடுபவர்கள்
நாளடைவில் உண்மை நிலையை
விட்டுவிடுவார்கள்.

விழிப்பு நிலையில் பார்க்கப்படும்
பொருள்கள் எப்போதும் உட
லுக்கு வெளியில் உள்ளன. அத
னால் அது கனவு காண்பவனுக்கு
வெளியிலுள்ளது; கனவு உல
கமோ எப்போதும் கனவு காண்ப
வனுக்கு உள்ளேயுள்ளது. அது
ஒன்றே இரண்டுக்குமுள்ள வேறு
பாடு. விஞ்ஞானிகளும் மேனாட்டு
தத்துவ சாஸ்திரிகளும் தங்களது
'ஜாக்கிர' அநுபவங்களை ஆராய்
ந்தே தங்கள் முடிவுகளைக் கொண்
டிருக்கிறார்கள். ஆனால் எமது
மகான்களோ ஜாக்கிரம், சொப்ப
னம், சுழுத்தி ஆகிய மூன்று நிலை
களின் அநுபவங்களையும் பயன்
படுத்திப் பிறகு தங்கள் முடிவுக
ளைக் கொண்டிருக்கிறார்கள்.

ஒருவன் கனவில் பொருட்க
ளைக் காணும்போது அவை யாவற்
றையும் உண்மையாகக் கொள்ளு
கின்றான். அவன் விழித்துப் பார்க்
கும்போது அவை யாவும் பொய்
யாகின்றன. நாமரூப உலகம் நாம்
இரவில் காணும் கனவு போன்றது.
நாம் அவற்றை உண்மையாகக்
கொள்கின்றோம். ஆனால் அவை
பொய்யானவை; நிலையற்றவை.
சத்தியப் பொருளான கடவுள் ஒரு
வரே இருப்புள்ளவர். இதை அறி
ந்து இன்புறுவீர்களாக! மாயைத்
தூக்கத்தினின்று விழிப்புறுவீர்க
ளாக.

———



[அலைகடற் பிறந்த கலையெழிற் பரிதி தெளித்திடும் ஒளியிற் களித்திடும் இக் கவிஞர் 'சமூகத் தொண்டன்' வாசகர்களுக்குப் புதியவர்தான்! சென்னையி லுள்ளவர்; தமிழகத்து ஏடுகளில் அடிக்கடி கவிதைகளும், கதைகளும் எழுதிவருகின்றார்!]

## எழுகதிர்!

கெ. பக்தவத்சலம்

கீழ்த்திசை வானிற் கிளர்ந்தெழு ஞாயிறு
வாழ்த்துது நம்மை, வணங்குவம் நாமே!
நாம்வாழ் ஞாலம் நமக்கவன் தந்த
சேமக் கொடையாம், செங்கதிர் வாழ்க!

அலைகடற் பிறந்த கலையெழிற் பரிதி
தொலைவழிப் பயணம் தொடங்கிய காலை
பலப்பல புதுமை பளிச்சிடும் உலகம்
கலப்பிலா ஒளியில் களித்திடல் காணீர்!

சூரிய காந்தியும் சிரித்தே எழுந்திட,
சீரிய தாமரை தொழுதுனை மலர்ந்திட,
காரிருள் வடித்த கண்ணீர் துடைத்திடப்
பாரினைக் காக்கும் பகலாய் விடிந்ததே!

வேறு

உறக்கமோட்டிப் புத்துணர்ச்சி யூட்டிக் குளிர்ச்சி
தெறிக்கு மிளங்காலைத் தென்றல்—திறக்குமின்ப
வாசல்; கதிரொளியே வந்தக்கால் நம்முள்ளம்
மாசில்லா வாச மலர்.



''கவிதையில் கடவுளர்களைக் கிண்டல் செய்யும் ஒரு பாரம்பரியத்தைத் தமிழ்ப் புலவர்களிடமன்றி, வேற்றுமொழிப் புலவர்களிடம காண்ப தரிது'' சொக்கநாதப்புலவரின் செய்யுளை வைத்துக்கொண்டு அவரே ''மாயாசாலம் மந்திரசாலம் புரிந்து'' சுவைததும்ப விளக்குகிறார் சுதந்திரன் ஆசிரியர்.

# தெய்வ நிந்தை!

எஸ். டி. சிவநாயகம், ஆசிரியர், ''சுதந்திரன்''

எல்லா மொழிகளிலும் புலவர்களும் கவிஞர்களும் இருந்திருக்கிறார்கள். ஆனால் தமிழ்ப் புலவர்களுக்கு இருந்த துணிச்சல் அளவு வேறுமொழிப் புலவர்களுக்கு இருந்ததாகத் தெரியவில்லை.

மன்னர்களையும், மாபெருந் தலைவர்களையும் அவர்களுடைய முகத்துக்கு முன்னாலேயே கேலியும் கிண்டலும் செய்து 'இழிவுபடுத்தி' அதற்குப் பரிசுகூடப் பெற்றிருக்கிறார்கள் தமிழ்ப் புலவர்கள்.

அதுமட்டுமா? இறைவனையும், இஷ்ட தெய்வங்களையும் தமிழ்ப் புலவர்கள் நிந்தாஸ்துதி என்ற போர்வையில் எவ்வளவுதான் திட்டியிருக்கிறார்கள்! அற்புதமான தமிழ்ச் சொற்களை வைத்துக்கொண்டு மாயாசாலம், மந்திரசாலம் புரிவதன்மூலம் கேட்போர் தலையை முதலில் கிறுங்க வைத்து, அப்புறம் புதுப்புதுப் பொருட்களை அங்கே புடமிட்டுக் காட்டியிருக்கிறார்கள்.

கவிதையில் கடவுளர்களைக் கிண்டல் செய்யும் ஒரு பாரம்பரியத்தைத் தமிழ் மொழிப் புலவர்களிடமன்றி வேற்று மொழிப் புலவர்களிடம் காண்பது அரிது. தெய்வ பக்தியும், சமயபக்தியும் வேறு; இலக்கிய ரசனை வேறு என்ற கொள்கை தமிழ் மக்களிடம் இருந்ததனாலேயே அவர்கள் இரண்டையும் பிரித்துக் காணமுடிந்தது. இது பண்டைத் தமிழ் மக்களின் பரந்த மனப் பான்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

அந்தக் காலத்துத் தமிழ்மக்கள் சிந்திக்கத் தெரிந்ததுபோலவே சிரிக்கத் தெரிந்தவர்களாகவும் இருந்திருக்கிறார்கள். தங்கள் இஷ்ட தெய்வங்களை ஒரு புலவன் 'நிந்தை' செய்துவிட்டானே என்பதற்காக அவர்கள் கூட்டம் போட்டுத் தீர்மானம் நிறைவேற்றவில்லை. எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்யவில்லை. இலக்கியச் சுவையையும், நகைச் சுவையையும் ரசித்தார்கள்: மகிழ்ந்தார்கள். அத்தோடு விட்டுவிட்டு மறுகாரியம் பார்த்தார்கள்.

பலபட்டடைச் சொக்கநாத புலவர் என்று ஒரு தமிழ்ப்புலவர் இருந்தார். சிவபெருமானின் பாரியாரான சிவகாமி அம்மையைக் கொஞ்சம் திட்டவேண்டும் என்று அவருக்கு ஆசை பிறந்தது. சாதிப் பெயர்களைச் சொல்லித் திட்டவேண்டும் என்று திட்டமிட்டார்.

''பள்ளி என்றார்; அதுவும் சிவந்த மேனியுடைய பள்ளி என்று சொல்ல அவருக்கு மனம் வரவில்லை — கரும் பள்ளி என்றார். குசத்தி, அம்படைச்சி, இடைச்சி, குறத்தி, வலைச்சி, புழுக்கச்சி, பாம்பாட்டிக்குத் தங்கச்சி, பறைச்சி என்றெல்லாம் வாயில் வந்தபடி ஏசினார். இப்படிப்பட்ட இழிகுலத்தவளையா ஏத்தித் துதிப்பது? என்று கேட்டார். அழகான பாடல்:





அந்தங் கரும்பள்ளி பாசாங்குசத்திகண்
ணம்படைச்சி
நைந்த விடைச்சி குறத்திக்கு மாமி
நவில் வலைச்சி
சந்தம் புழுக்கச்சி பாம்பணை யோனுக்குத்
தங்கச்சியாம்
இந்தப் பரச்சியையோ சிவகாமியென்
றேத்துவதே!

[அந்தம் கருப்பு அள்ளி - அழகிய கரும்பு வில்லைக் கையிற் கொண்டவளும்; பாச அங்கு சத்தி - பாசமும், அங்குசமும் திருக்கையில் உடைய சக்தியானவளும்; கண அம்படைச்சி - கண் அம்புபோல வடிவமையப்பட்டவளும்; நைந்த இடைச்சி - நுண்ணிய இடையை உடையவளும்; குறத்திக்கு மாமி - வள்ளி நாயகியாகிய குறத்திக்கு மாமியும்; நவில் வலைச்சி - வலை வீசிய கடவுளுக்கு மனைவியென்று கூறப்படுபவளும்; சந்தம் புழுக்கச்சி - சந்தனமும், புனுகும் கமழும் மார்புக் கச்சம் அணிந்தவளும்; பாம்பு அணையோனுக்குத் தங்கச்சி ஆம் - பாம்பின் மேல் பள்ளிகொள்ளும் பெருமாளின் தங்கையுமாகிய; இந்தப் பரச்சியையோ - இந்தப் பராசக்தியையோ; சிவகாமி என்று ஏத்துவது? - சிவனைக் காதலிப்பவள், சிவனை நேசிப்பவள் என்று நினைத்து எல்லாரும் வழிபடுவது?].



## மனிதாயதம்

விஞ்ஞான ஆராய்ச்சியின் முடிபுகளின் அடிப்படையில் உருவாக்கப்பட்டு வரும் உலகம், சமயத்தை வேண்டா நிலைக்கு வந்துவிட்ட தெனலாம். கடவுள் சேவையிலும் உயர்ந்தது மக்கள் சேவை என்னுங் கொள்கை இன்று எங்கும் பரவியுள்ளது. மக்கள் சேவையை உயர்ந்த இலட்சியமாகக் கருதி வாழ்வது ஒரு சமயமாக இன்று கருதப்படுகின்றது. அதுவே 'மனிதாயதம்' (Humanism) எனப்படும். மனிதாயதம், தெய்வமென்னும் ஒரு பொருளில் நம்பிக்கை வேண்டுமென்னும் நியதியற்ற கொள்கை. அது மனித நலன்களையே முக்கியமெனக் கருதும்.

—கலைப்புலவர்: க. நவரத்தினம்,

○ கவிபாரதி கண்ட கனவு—"வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப் பெருக்கும், கவிப் பெருக்கும்'' அக்குரோணி வெள்ளமாக அணைகள் உடைத்து சோவியத் நாட்டில் பாயக் கண்டபோது பேராச்சரியமாகவும், பெருமையாகவு மிருந்தது!

# மக்கள் கலாச்சாரம் கண்டேன்!

எச். எம். பி. முஹிதீன்

**சோ**சலிசத்தின் கீழ் சோவியத்நாடு 42 ஆண்டுகளைக் கழித்துவிட்டது. இந்த 42 ஆண்டுகளில் கலை, கலாசாரத் துறைகளில் சோவியத் மக்களின் வாழ்விலே ஒரு பெரும் மலர்ச்சியை சோசலிசம் ஏற்படுத்தியுள்ளது. இந்த மறுமலர்ச்சி எனக்கு கலாச்சாரப் புரட்சியாகவே தோன்றுகிறது.

உருசியநாடு பழம்பெரும் உயர்ந்த கலாச்சாரத்தின் மணிமகுடமாகும். விஞ்ஞானத்திலே, இலக்கியத் துறையிலே, சங்கீதத்திலே, கட்டிடக் கலையிலே, சிற்பத்திலே நுண்கலைகளிலே பேறும் பெருமையும் பெற்று, உலகின் எட்டுத் திக்கிலுமுள்ள நாடுகளும், நல்லேடுகளும், நல்வாழ்த்துக் கூறிப் போற்றும் பெருந்தகையாளர்களையும், பண்புமிக்க பேரறிவாளர்களையும் பெற்றிருந்த பெருமை உருசிய நாட்டுக்கு உண்டு. என்றாலும் அதேவேளையில் வாழ்வின் அடித்தட்டிலே, நாகரிகத்தின் முதற் படியிலேயே நிலைதடுமாறிக்கொண் டிருந்த மக்களையும் உருசியா தன்னகத்தே பெற்றே இருந்தது. இதை உருசியநாட்டின் புரட்சித் தலைவன் **மாமேதைலெனின்** 1913-ல் தெட்டத் தெளிய எடுத்துக் கூறினான்.

"உருசியாவைப் போன்று ஐரோப்பாவிலே மிகமிகப் பின் தள்ளப்பட்ட நாடு வேறெதுவுமே இல்லை. கல்வியிலும் சரியே, அறிவுத் துறையிலும் சரியே உருசியநாடு உலகின் வளர்ச்சியடைந்த நாடுகளிலிருந்து 100 ஆண்டுகள் பின் தங்கி நிற்கிறது''.

இது 1913-ல் லெனின் கிளப்பிய வேதனைக் குரல். 1916-ல் இங்கிலாந்திலிருந்து உருசியநாடு சென்ற பிரபல பத்திரிகையாளரான **ஸ்டீபன் கிரஹம்,** "நான் கண்ட உருசியா'' என்ற தனது நூலில், "...கலைக்கும் உருசியாவுக்கும் வெகுதூரம். உருசியர்கள் காட்டுமிராண்டி காலத்து வாழ்க்கை நடத்துகிறார்கள் ... ...'' என்று கடுமையான வார்த்தைகளைப் பிரயோகித்து உருசியர்களைக் கண்டித்திருந்தார்.

லெனின் குறிப்பிட்ட பின் தங்கிய உருசியாவுக்கு, கிரஹம் அநாகரிகத்தின் இருப்பிடம் என்று கிண்டல் செய்திருந்த உருசியாவுக்கு, 42 ஆண்டுகாலம் சோசலிசத்தின் கீழ் வாழ்ந்த இதே உருசியாவுக்குச் சென்று, சோவியத் எழுத்தாளர் சங்கத்தின் விருந்தினராக இரண்டரை மாத காலம் தங்கியிருக்கும் வாய்ப்பு சமீபத்தில் எனக்குக் கிட்டியது.

உருசியாவின் தலைநகரமான மாஸ்கோவுக்கு, விழாக்களோ, வேறு எவ்வித வைபவங்களோ இல்லாத ஒரு தினத்தில் நான் சீனத்திலிருந்து திரும்பினேன். 3 தினங்கள் ஓய்வின்றிச் செய்த விமானப் பிரயாணத்தினால் அதிகம் களைத்திருந்த நான் அன்று பூராவும் படுத்திருந்துவிட்டு, மாலை நேரத்தில் எழுந்திருந்து, ஏதாவது ஒரு கலை நிகழ்ச்சியைப் பார்க்கவேண்டுமென்ற ஆர்வத்தினால் ஹோட்டல் பணியாளர் அறைக்குச் சென்றேன். அன்றைய கலை நிகழ்ச்சிகள் சம்பந்தப்பட்ட "கலாச்சார கெசட்'' பத்திரிகையை எடுத்துவரச் செய்து, கலை





**வெள்ளைப்பரவைப் பள்ளி வாசல்**

அன்பும் சமத்துவமும் அவனிக்கீந்த இசுலாமியப் பண்பாட்டின் சின்னமாக வேலணை - மண்கும்பான் ஊரின் கடற்கரையிலே இயற்கை வனப்புடன் நிமிர்ந்து நிற்கும் வெள்ளைப்பரவைப் பள்ளி வாசல்.

நிகழ்ச்சிகளின் பகுதியை வாசிக்கச் சொன்னேன். பணியாளரும் உருசிய மொழியிலிருந்து மொழிபெயர்த்து வாசிக்க ஆரம்பித்தார்.

பொரதீன் ஒப்பரா மத்தியகல்லூரி மண்டபத்தில் நடைபெறும், வேர்தி ஒப்பரா — விஞ்ஞான — கழக மண்டபத்தில் சேக்ஸ்பியரின் நாடகம் — மத்திய பட மாளிகையில், கவிதாகூரின் நாடகம் — புஷ்கின் தியேட்டரில், பெர்னுட்ஷாவினது ஒஸ்கார் வைல்டினது, ஒஸ்டிராவ்ஸ்கியினது, தூர்க்கினேவினது இத்தாலிய நாடக ஆசிரியர் லாப்டி வேகாவினது......'' —மொழிபெயர்ப்பாளர் தொடர்ந்து கால்மணி நேரம் செக் எழுத்தாளர், எஸ்தோனிய எழுத்தாளர் இன்னும் பல நாடக ஆசிரியர்களின் நாடகங்களையும், ஒரு பாலே நாட்டியத்தின் பெயரையும், சிறுவர் காட்சிகள் பலவற்றினைப் பற்றியும், இன்னும் பத்துக்கு மேற்பட்ட பல கலைநிகழ்ச்சிகளையும், அவைகள் நடைபெறவிருக்கும் இடங்களையும் மூச்சுப் பிடித்து வாசித்துக்கொண்டிருந்தார். எனக்குப் போதும் போதுமென்றாகி நண்பரை நிறுத்தச் சொன்னேன். எனக்கு ஒரு சந்தேகம். ''ஒரு வார அட்டவணையை ஒரு நொடியில் வாசித்துவிட்டீரே'' என்று குத்தலாகச் சொன்னேன். மொழிபெயர்ப்பாளருக்கு சற்று கோபம். ''ஒரு வாரமா? சரியாய்ப் போச்சு. எல்லாம் இன்றைய நிகழ்ச்சிகள் தோழர்'' என்று அவர் கூறியது என் காதுகளில் இடிவிழுந்தாற்போல் இருந்தது. என்னுல் அதை நம்பவே முடியாது போய் விட்டது. பத்திரிகையை அவர் கையிலிருந்து வாங்கி திருப்பித் திருப்பிப் பரிசீலனை செய்தேன். உருசிய மொழி எனக்கு வராதென்ற போதிலும் எனது சந்தேகத்தைப்போக்க முயற்சி செய்தேன்.

இதற்கிடையில் உருசிய நண்பர் மற்றுமொரு அணுக்குண்டைத் தூக்கிப் போட்டார். ''சினிமாப் பகுதியைப் பார்க்கிறீர்களா? பத்து பதினைந்து நல்ல புதிய படங்கள் ஓடுகின்றன ... ...'' என்று ஒவ்வொரு படத்தைப் பற்றியும் விமர்சனம் பண்ண ஆரம்பித்தார். பொறுமை பறிபோகு முன்னர் அவரை ஒருவாறு அரைகுறையாக நிறுத்தி, ''வாருங்கள் தாகூரின் ''கங்கா நதியின் திருமகள்'' என்ற நாடகத்தைப் பார்க்கப்போவோம் என்றேன். அவரும் இசைந்தார்.

வழி நெடுக என் சிந்தனை எங்கெல்லாமோ சுற்றி அலைந்தது. கலைக்கு இரண்டாம் பொருத்தமாக இருந்த நாட்டிலா இந்தப் புதுமை நிகழ்கிறது என்று எண்ணும் போது எனக்குப் புதுமையாக இருந்தது. நம்கவி பாரதிகண்ட கனவு "வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப் பெருக்கும், கவிப் பெருக்கும்'' அக்குரோணி வெள்ளமாக அணைகள் உடைத்துப் பாயக் கண்டபோது பேராச்சரியமாகவும், மறுபுறம் பெருமையாகவும் இருந்தது.

இதைவிடப் பெரும் புதுமையை புஷ்கின் தியேட்டரினுள் கண்டேன். பால்நிறப் பாவாடை உடுத்த மங்கையாகக் காட்சி தந்த பனி படர்ந்த மாஸ்கோ அன்னை, தியேட்டருக்கு வெளியே பயங்கரக் குளிரால் என்னைப் பயமுறுத்திக் கொண்டிருந்தாள். ஆனல் உள்ளே, தாகூரின் சந்நிதானத்தில் நான் பரிபூரணத்துவம் பெற்றுத் திளைத்தேன். 'கங்கை மகள்' கலை உத்தியால் உயிர்பெற்று லயப் பிரமாணத்துடன் அழகுநடை போட்டாள். அவளின் கொள்ளை அழகிலே கட்டுண்டு ஆனந்த நடனமாடிய மெல்லிய ருதுவின் சுகந்த ஸ்பரிசத்தை நுகர்ந்து, தெய்மகள் பாய்ந்தோடும் அழகு அசைவிலே, அவளைப் பார்த்துச் சிரித்துச் சிரித்துப் பூரித்துப் புளகாங்கிதம் பெற்று நின்ற இரு மருங்கிலுமுள்ள கரைகளின் தத்ரூபமான காட்சியிலே பரிபூரணமாக லயித்த நான் மெய்மறந்திருந்தேன். மூன்று மணித்தியாலம் அந்த மேடையில் இந்தியாவைத் தவிர வேறு எதையும் நான் காணவில்லை, சினிமாவிற் காண

முடியாத புதுமைகளை இந்த நாடகக் காட்சி
களிலே அன்று நான் கண்டேன். கங்கை
நதி மேடையில் தங்குதடையின்றி ஓடியது.
அதிலே ஒரு படகு, அது அசைந்தாடிச்
சென்றது. வசந்த ருது, பச்சைப் பசே
லென நிருந்த கரைகள், பறவைகள் — புது
மையினும் புதுமையான காட்சிகள்!

புதுமைகளினுலேயே கட்டுண்டிருந்த
அந்த தியேட்டர் இடைவேளையின்போது,
மற்றுமொரு புதுமையை, நம்ப முடியாத
புதுமையை எனக்குக் காட்டியது. அந்தப்
புதுமை சோவியத் மக்களின் கலை
ஞானத்தை. விமர்சன வளர்ச்சியை எனக்கு
ஐ ய ந் தி ரி ப ற த் தெட்டெனத் தெளிவு
படுத்தியது.

இடைவேளையின்போது பலர் ஓய்வு
அறையில் நின்றுகொண்டும், இருந்துகொண்
டும் பேசினர். "என்ன பேசுகிருர்கள்?''
என்று மொழிபெயர்ப்பாளரை வினவினேன்.
"நாடகத்தைப் பற்றியும், நடிப்பைப் பற்றி
யும் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைப்
பரிமாறிக்கொள்ளுகிருர்கள்'' என்ருர். ஆர்
வப்பெருக்கால் நானும் அதில் கலந்து
கொண்டேன். இரு உருசியர்கள் கலந்து
கொண்டனர். எங்கள் பேச்சு, இடைவேளைக்
குப் பின் ஒத்திவைக்கப்பட்டு நாடகம் முடி
ந்தபின்னர் மீண்டும் தொடங்கிப் பல மணி
நேரம் நீண்டது. நானும் ஆர்வத்துடன் பல
கருத்துக்களை முன்வைத்து என் முடிவுகளை
வலியுறுத்தினேன். ஒவ்வொரு பாத்
திரத்தையும் அலசி ஆராய்ந்து
பிரித்து, குறைபாடுகளையும், நிறைவுகளை
யும் விளக்கி விவாதித்தனர். முதல்தர
விமர்சன கர்த்தாக்களாகவே அவர்கள் எனக்
குப் புலப்பட்டனர்.

பலமணி நேரத்திற்குப் பின், விடை
பெற்றுச் செல்லும்போது அவர்களின்
தொழிலைப்பற்றி வினவினேன். அவர்கள்
இருவரும் கன யந்திர தொழிற்சாலையில்
வேலைசெய்யும் தொழிலாளர்கள். இதைக்
கேட்டபோது எனக்குப் பேராச்சரியமாக
இருந்தது. தொழிலாளர்களாவது, இப்படி
விமர்சனம் செய்வதாவது என்ற எண்ணத்
தில், "உண்மையாகவே நீங்கள் தொழிலா
ளர்களா?'' என்று ஆச்சரியக்குறி என் முகத்
திற் படரக் கேட்டேன். அவர்கள் முகத்தில்
ஒரு புன்முறுவல் மின்னிட்டது. சீவனுள்ள
சிரிப்பு. அதில் எனக்கு வேண்டிய பதில்மட்டு
மென்ன, அதற்குமேலும் என்னவோ அடங்கி
இருந்தது. அன்று இரவு எனக்குத் தூக்கமே
பிடிக்காதிருந்தது. **"எங்கள் நாட்டில் விமர்**
**சன கர்த்தாக்களுக்கெல்லாம் விமர்சன**
**கர்த்தாக்கள், பாடுபடும் தொழிலாளர்கள்**
**— ஏழை பொதுமக்கள்தான்''** என்று
சோசலிச இலக்கியத்தின் மூலபிதா மார்க்
சிம் கார்க்கி 30 ஆண்டுகளுக்கு முன்
எடுத்துக்கூறிய தீர்க்க தரிசனம் நிசமாகி
இருப்பதைக் கண்ணுரக்காண எனக்கு
என்னையும் அறியாமலேயே ஒரு பூரிப்பும்,
பெரு மகிழ்ச்சியும் ஏற்பட்டன.

இப்படிப்பட்ட அனுபவங்கள் இரண்
டரைமாத காலத்தில் சோவியத்நாட்டில் பல
தடவைகள எனக்கு ஏற்பட்டன. ஒவ்
வொரு தடவையும் என்னுல் ஒவ்வொரு புது
மையைக் காணமுடிந்தது.

கலைத்துறையில் உருசியா இவ்வளவு
தூரம் முன்னேறி இருப்பதற்குப் பொதுமக்
கள் மத்தியில் வளர்ந்து விரிவடைந்துள்ள
அபார கல்வி அபிருத்தியே காரண
மெனலாம்.

உருசிய நாட்டில் நான் இருந்தபோது
வேறு எந்தநாடும் இதுவரை செய்யாத
ஒரு பெரும் சாதனையை அவர்கள் வெற்றி
கரமாகச் சாதித்திருக்கக் கண்டேன். உல
கெங்கும் இன்றுவரை, அறிவுத் துறையில்
பின் தள்ளப்பட்டு, ஆரம்ப தசையில்
இருந்து வரும் விவசாய மக்கள் அங்கு
கலை, கலாச்சார, இலக்கிய, மற்றும் எல்
லாப் பொது அறிவுத் துறைகளிலும்
முதன்மை பெற்றவர்களாக — முன்னவர்க
ளாக இருப்பது போற்றுதற்குரியதாகும்.



அவர்கள் இன்று சோவியத் நாட்டிலே,
"கைவருந்தி உழைப்பவர் தெய்வம்; கவி
ஞர் தெய்வம்; கடவுள் தெய்வம்'' என்று
பாரதப் புலவன் பாரதி பறைகொட்டியதற்
கேற்ப, கண்கண்ட தெய்வங்களாக மதிக்
கப்படுகிருர்கள், மரியாதை செய்யப்படுகி
ருர்கள். சோவியத் நாட்டில் இருக்கும்
போது பல தடவைகளில் பல கிராமங்களுக்
குச் செல்லும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது.
ஆகா, அதை நினைத்தாலே ஒரு பேரானந்
தம் உண்டாகிறது. உலகத்துக் கலைச் செல்
வங்கள் எல்லாம், கைகளிலும் கால்களிலும்
சேறுபடிந்த மக்கள் மத்தியில்தான் வாழ்கின்
றன', என்று அமரகவி தாகூர் கூறியது
முழுக்க முழுக்க உணமை என்று எனக்குப்
பட்டது. புரட்சிப் பாவலன் பாரதியின்
அமரமொழியைக் கேட்டிருந்தார்களோ
என்னவோ!

"வானமழைபொழிதல் போலவே
நித்தம் வந்து பொழியும்
இறவாத புது நூல்கள்''.

"வீடுதோறும் கலையின் விளக்கம்
வீதிதோறும இரண்டொரு பள்ளி''.

"சென்றிடுவீரே எட்டுத்திக்கும் - கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு
[சேர்ப்பீர்''

இவைகள் அனைத்தும் அங்கு உயிர்
பெற்று வாழக்கண்டேன்; புளகாங்கிதம்
கொண்டேன். சோவியத் நாட்டின் கிராமங்
கள் எனக்கு வானலோகத்திலிருக்கும்
சுவர்க்கத்தைவிட மேம்பட்ட சுவர்க்கமாகத்
தோன்றின. அங்கு தெய்வங்கள் உயிர்
பெற்று நடமாடின.

"திறமை கொண்ட தீமையற்ற
தொழில் புரிந்து யாவரும்
தேர்ந்தகல்வி, ஞானமெய்தி''

வாழும் மக்களைக்கொண்ட சோவியத் நாடு,
அமர கலைகளின் அற்புதப்பூங்கா, கலாசா
ரத்தின் மகோன்னத சொர்க்கம்.



## பண்டைய பண்டமாற்று

பாண்டிய நாட்டின் அண்மைக் காட்டிலே உறையும் வேடன்
கடுஞ்சினம் மிகுந்தவன் தன் நாயுடன் நாட்டுக்கு வருவான்.
வந்து, தான் வட்டிநிறையக் கொண்டுவந்த மானிறைச்சியை
உழவர்க்குக் கொடுப்பான். முல்லைநில இடைச்சி பானை நிறை
யத் தயிர் சுமந்துகொண்டு வருவாள். அவைகளைப் பெற்ற
உழத்தி குளங்களில் விளைந்த நெல்லை அளந்து அளந்து அவ்
வேடனுக்கும் இடைச்சிக்கும் வட்டியும் பானையும் நிரம்பி வழி
யும்படி கொடுப்பாள். இந்த வனவளமும் மனவளமும் நிலவள
மும் மலைவளமும் படைத்தது பொதியன் என்பவனின் நாடு.

—புறநானூற்றிலே கோவூர் கிழார்.



★ கம்பன் அயோத்தியா புரியில் ஓர் அதி உன்னத சமுதாயத்தைக் கண்டான். ஆனால் நம் "பரமஹம்சதாசன்" தாம் கண்ட ஒப்பிலாச் சமுதாயத்தைச் சொல்லும்போது-அது உருவாக்கப்பட வேண்டுமென உணர்ச்சி பிறக்கிறது நமக்கு!

# வெறும் கனவா?

பரமஹம்ச தாசன்

பகலவனே வெங்கனலைப் பாய்ச்சி விட்டான்;
பதைத்துமனம் கொதித்தமணற் பாதை, ஆங்கு
புகுந்தவெனைத் துடிதுடிக்கக் கொடியார் கண்போற்
பொசுக்கியது; நொடிப்பொழுதிற் புழுவாய்த் துள்ளி,
அகங்குளிர்ந்தார் முகம்போல நிழல்கனிந்து
அருகிருந்த ஆலமரத் தடியில் வீழ்ந்தேன்;
யுகாந்தநெருப் பதைக்கடந்த உணர்ச்சி யோடு,
உஸ்சென்ற பெருமூச்சிட் டயர்ந்துட் கார்ந்தேன்! 1

அப்பப்பா, என்னவெயில்! இந்நாள், பொங்கி
அரியதமி ழுலகழிக்கும் பேதத் தீக்கே
ஒப்பிதுவாம்; எனமுனகிக் கொண்டே, துண்டை
உதறிக்கீழ் விரித்துச்சற் றுடலைச் சாய்த்தேன்!
செப்பருவள் ளுவன்,கம்பன் கண்ட இன்பத்
திருநாடு சென்றதற்குள் திரும்பிற் றுள்ளம்!
"எப்பொழுதந் நாடிங்கு வருமோ?" என்ற
எண்ணங்கள் அலைமோத இதயம் சோர்ந்தேன்! 2



கலகலென வளைகுலுங்கத் தென்றற் கன்னி
களைத்தஉடல் பிடித்துவிட்டாள்; சிந்தை, இன்ப
நிலவில்விளை யாடியது; அருகில் வந்த
நித்திரைப்பெண் கண்கள்தமைப் பொத்திவிட்டாள்!
அழகியபூஞ் சோலையொன்றின் பளிங்குக் கல்மேல்
அமர்ந்திருந்தேன்; நெருங்கிவந்தோர் அமிழ்தச் செல்வி
பழகியவள் போலென்னைப் பார்த்தாள்; அந்தப்
பார்வையிலே அன்புவெள்ளம் பாயக் கண்டேன்! 3

என்னையறி யாமற்கை யெடுத்தேன்; ஆசி
என்கரத்தால் அஞ்சலித்தாள்; "யாரோ தாங்கள்?"
என்னலும்,அம் மாதரசி புன்ன கைத்து,
"எழில்மகனே, தமிழணங்கு யானே! என்னை
முன்னம்நீ அறியாயோ? எதையோ எண்ணி
முகவாட்ட முற்றிருந்தாய், அன்றோ? நீ,என்
பின்னேவா; துயர்களைவேன்" என்றாள்! சென்றேன்;
பெருங்கான வெளிகடந்தோர் நகர் அடைந்தோம்! 4

வான்தழுவு கோபுரங்கள் வலிந் தழைக்க,
மகிழ்ந்தாடும் மணிக்கொடிகள் வரவு கூற,
மீன்பாடும் வாவிமலர் விழிகள் பேச,
வீதியெலாம் கலைச்செல்வர் விருந் தளிக்க,
தேன்தமிழ்நா டகம்புகுந்தோம்; ஆங்கு, வாழும்
செந்தமிழர் நலமனைத்தும் தெரிய வைத்தாள்,
வான்தமிழ்த்தாய்! யான்கண்டு, கேட்டு ணர்ந்து,
மகிழ்ந்தவெலாம் உரைப்பதென்றால் வலிமை யேது? 5

பாரோடும் உயிர்ப்பூண்டை அழிக்க வென்று
பாய்ந்தஅணு சக்திதனைப் பயன் படுத்தி,
நீரோடும் கார்முகில்,தேன் பொழியக் கண்டேன்;
நிலத்தோடி யந்திரம்பொன் விளைக்கக் கண்டேன்;
தேரோடும் வீதியெலாம் ஒலி முழக்கம்
செயும்ஆலைத் தொழிற்செல்வம் செழிக்கக் கண்டேன்!
வேரோடு சாய்ந்தமரம் தலை நிமிர்ந்து
விண்ணோடு கலந்துநிற்கும் விந்தை கண்டேன்! 6

குழல்,யாழ்,மத் தளம்,நாத சுரம்சா ரங்கி,
கொஞ்சிடுதண் ணுமைவீணை யாதி இன்பப்
பழந்தமிழ்நல் லிசை,கூத்துச் சிற்ப மென்னும்
பைங்கலைகள் வெள்ளமெனப் பரவக் கண்டேன்!
களங்கமறப் பழகும்இள மடவார் நோக்கில்
கவின்புதுமை யொடு,கற்புக் கனலும் கண்டேன்!
எழிலொழுகும் மழலைவிளை யாட்டி லெல்லாம்
எதிர்காலப் புவிதாங்கும் ஏற்றம் கண்டேன்! 7

பித்தமத பேதங்கள், சாதிக் கூச்சல்,
பிணி,மடைமை, மிடிதீண்டாப் பேய்க ளெல்லாம்
செத்தொழிந்து, சன்மார்க்கம் செழிக்கக் கண்டேன்!
சிவசக்தி யெனஆண்பெண் திகழக் கண்டேன்!
எத்திசையும் பழைமையிலே புதுமை கண்டேன்!
எம்முகமும் தன்முகமாய் இலங்கக் கண்டேன்!
வித்தகரைப் போற்றிடுநல் விழாக்கள் கண்டேன்! 8
மேலும்எங்கும் காணாத விந்தை சொல்வேன்.

முதலாளி தொழிலாளிச் சண்டை யில்லை;
முற்றும்உழைப் பாளிகளாய் முகிழ்த்த லாலே!
எதிராளி உறவாளி யென்ப தில்லை;
எல்லோரும் அருளாளி யான தாலே!
அதிகாரத் திமிர்,அடிமைக் கலக்க மில்லை;
அன்புக்கே கட்டுண்ட அமைதி யாலே!
சதிகாரக் கும்பலிலை; வீழ்வா ரில்லை; 9
தனிநேர்மைத் திறன்எங்கும் தழைத்த தாலே!

ஏழைபணக் காரரென்ப தில்லை, தேவைக்
கேற்றபொருள் எவரிடத்தும் இருப்ப தாலே!
கோழையென்பார் யாருமிலை, உயிர் கொடுத்தும்
குலமானம் காக்கும்உயர் கொள்கை யாலே
தாழ்வுயர்வுப் பேதமிலை, மக்கள் யாரும்
சரிநிகர் சமானமுடன் வாழ்வ தாலே!
வாழவகை காணாத மாந்த ரில்லை, 10
வழிகாட்டும் குறளாட்சி மலர்ந்த தாலே!

துயருற்றார் இன்புற்றா ரில்லை, யாரும்
சுகதுக்கம் பங்கிட்டுத் துய்த்த லாலே!
பயமென்னும் விடப்பாம்பங் கில்லை, எங்கும்
பலவீனம் தலைகாட்டாப் பான்மை யாலே!
அயல்சொந்தம் என்னும்வழக் கில்லை; எங்கும்
அன்புச் சகோதரத்வம் ஆள்வதாலே!
உயர்சாதி கீழ்சாதி யில்லை, மக்கள் 11
ஒருகுலமென் றனைவருமே உணர்ந்த தாலே!

இல்லையென இரப்போரும் இலை,ஈ வாரும்
இலை;எவரும் மனநிறைவு எய்த லாலே!
கல்லாதார் கற்றார்என் றில்லை யாரும்
கல்வியொன்றே கண்களெனக் கருத லாலே!



சொல்வேறு செயல்வேறென் றில்லை, யாரும்
துய்த்தகல்வி முறைவாழும் துணிச்ச லாலே!
இல்லை,உண்டு எனும்வாத மில்லை, தூய 12
இறையுணர்வு தனையெவரும் எய்த லாலே!

வல்லரசுப் போட்டியில்லை, சுய நலத்தால்
மண்ணாசை வெறியற்ற மாண்பினாலே!
நல்லுயிரைக் கொன்றுண்ணும் நரகமில்லை,
நமதுயிரென் றுயிரையெலாம் மதிப்ப தாலே!
தொல்லைதரும் மாய்கையெனும் சொற்களில்லை,
தோற்றமெலாம் ஒன்றெனவே துணிந்ததாலே!
இல்லறமா, துறவறமா எதுமே லென்னல் 13
இலை,எவரும் பற்றறவாழ்ந் திடுத லாலே!

சீதனத்தின் கொடுமையில்லை, ஆண்பெண் தாமே
தேர்ந்தெடுத்து வாழுமுறை தெரிந்ததாலே!
காதலுக்கு மோதலில்லை; நெஞ்சும், நெஞ்சும்
கலப்பதுவே இன்பமெனக் கண்ட தாலே!
ஆதலில்லை யெனிற்கா(தற் கொலை)யும் இல்லை,
ஆயிரம்இன் பத்துறைகள் அறிந்த தாலே!
மாதர்தமை அடிமைகொளும் வழக்க மில்லை, 14
மாட்சிமிகு தாய்க்குலமாய் மதிப்ப தாலே!

போர்வெறியை வீரமெனப் புகல்வா ரில்லை,
புகழகிம்சை வலிமிகுந்த போதத்தாலே!
ஊர்திருத்தக் கச்சைகட்டித் திரிவா ரில்லை,
ஒவ்வொருவ ரும்திருத்த முறுத லாலே!
சீர்கனிந்த நற்றவரை இகழ்வாரில்லை,
தெய்வம்அவர் பாற்கண்டு தெளிந்த தாலே!
பாரின்ப போகத்தை வெறுப்பா ரில்லை, 15
பண்புறுபே ரின்பம்,அதே பயப்ப தாலே!

இத்தகைய ஒப்பில்ஒரு சமுதா யத்தை,
இமயம்முதல் ஈழம்வரை தமிழி னத்தில்
வித்தகநற் பெருமக்கள் பல்காற் கண்ட
விண்ணரசாய்க் கண்முன்னே விளங்கக் கண்டேன்!
புத்தமுதம் உண்டவன்போற் பரவ சத்தால்
புளகித்துத் “தமிழுலகம் வாழ்க” வென்றே,
சத்தமிட்டு நர்த்தமிட்டேன்; என்ன விந்தை! 16
தமியேனும் “வெறும்கனவு” தானா கண்டேன்?





"கோடு ஒரு களரி; அதிலுறுந் துரையோ கூத்துப் பார்த்திடும் மூப்பு ஆடுறுங் குரங்கோ வழக்கர்களாவர், அவையிடை யவைகளைக் கொண்டு, நாடொறும் ஆட்டுங் கயிறுதான் வழக்கு......"

உடுப்பிட்டியில் வாழ்ந்த இராமலிங்கப் புலவர் இயற்றிய 'கோட்டுப்புராண'த்திலுள்ள சில பாடல்களைத் தேடிஎடுத்து, ஆராய்ந்து கட்டுரையாக்கித் தந்திருக்கிருர், தமிழறிஞர் வித்துவான் நடராசா அவர்கள்.

# கோட்டுப் புராணம்

எவ். எக்ஸ். சி. நடராசா

**கோடு** என்பது திரிபு வழிவந்த அந்நியநாட்டுச் சொல். ஆங்கிலமொழி தமிழ்ச் சாயல் பெற்றுக் குற்றுகரமாக முடிவுபெற்றுள்ளது. அந்நிய மொழியெனினும் பெருவழக்குப்பெற்று தமிழ்மொழியிலே சாதாரண சொல்லாகி உபயோகிக்கப்பட்டு வருகின்றது.

"கோடு கேடு"

"கோட்டுக்குப் போனுல் ஓடெடுக்க வேணும்".

என்ற பழமொழிகளும் தமிழில் வழங்குகின்றன. இச்சொல்லைத் தனித்தமிழ்ச் சொல்லால் மாற்றியமைக்க முனைவாருமுளர். இவர்க்குக் கோட்டுப்புராணம் ஒன்று யாழ்ப்பாணத்துப் புலவர் ஒருவரால் பாடப்பட்டுண்டென்பது தெரியாதுபோலும்

வேலுப்பிள்ளை இராமலிங்கம் என்பவரே இதனைப்பாடியவர். தந்தையார் உடுப்பிட்டியிற் பிறந்தவர்; கோப்பாயில் வாழ்ந்தவர்.

கோட்டுப்புராணம் பாடிய இராமலிங்கம் விரைவிற் பாடல் தொடுக்கும் ஆற்றல் பெற்றவர். இவர் நீதித்தலஞ்சென்று அங்கு வியாச்சியம் நடத்தும் வாதி பிரதிவாதிகளுக்கு நேரிடும் அல்லல் தொல்லைகளையும் "உதர நிமித்தம் வெகு கிருதுவேடம்" எனப் பிழைப்பின் பொருட்டுத் தந்திரவேடம் போட்டுத் தமனகனைப்போல் இருதிறத்தவரையும் மூட்டிவிட்டுப் பணம் பறிக்கும் கோட்டு நியாயவாதிகளையும், பிரதிவாதிகளுக்காகத் தனித்தனி ஏற்பட்டும் இருபக்கமும் கைநீட்டும் நியாய துரந்தரர்களையும் பழித்தும் இழித்தும் இக்கோட்டுப் புராணத்தைப் பாடினுர் என்பர்.

காண்டம் சருக்கம் என்னும் பகுப்பு வைத்துப் பாடினரோ அல்லது மொத்தமாயொரு கோவையாகப் பாடினரோ யாம் அதனை அறியேம், புராணத்தையும் கண்ணுரக் கண்டிலேம். ஒருசில பாடல்களையே கேட்டுள்ளோம். அவற்றைத் தருவாம்.

கோடொருகளரி யதிலுறுந்துரையோ
கூத்துப் பார்த்திடும் மூப்பு
ஆடுறுங் குரங்கோ வழக்கர்களாவார்
அவையிடை யவைகளைக்கொண்டு



நாடொறும் ஆட்டுங் கயிறுதான்வழக்கு
நட்டுவப்பணிக்கனே தரணி
வாடிவயிறு வளர்ப்பதற்கெடுதத
வஞ்சனை வேடமென்றுணரே.

நாட்டிலென் பட்டிமாடு நாசமாய்ப்
போச்சுதோதான்
வீட்டிலென் மனையாட்கென்ன வில்லங்கம்
விளைந்துதோதான்
சீட்டிலே யெழுதியல்லாற் செலவுக்குக்
கதிவேறில்லைக்
கோட்டிலே வந்தநாளாய்க் குளறுறேன்
குளறுறேனே.

பத்திய மென்னவென்ருற்
பட்டினி கிடக்கவேண்டாம்
நித்தமும் நடக்கவேண்டும்
நினைவுவே றொன்றுமாகா
சத்திர மதனிற்சோறு
சாப்பிடல் நஞ்சதாகும்
சிதத்தைச் சிவன்பால்வைத்துச்
சிவசிவா வென்றுசொல்லே.

இவ்வகையான பல செய்யுள்கள் கொண்ட கோட்டுப்புராணம் நமக்குக்கிடைக்காமல் அழிந்துவிட்டது போலும்.

மேலும் யாழ்ப்பாணத்தில் கோட்டுடன் சம்பந்தப்பட்ட பல பாடல்கள் பல்லோராற் பாடப்பட்டிருக்கின்றன. அப்புக்காத்து கூல் என்பார் வெகு சாமர்த்தியகாரர். சிறந்த நியாயவாதி. மிகுந்த புத்திசாலி. இவருடன் சேர்ந்த வேறு கோட்டுப்புலிகளைப் பற்றிய பாடலொன்று வருமாறு.

ஆனைக்கோட்டை இராமலிங்கம்
அப்புக்காத்துக் கூலரும்
பூனைநாக முத்தரும்
புழுகுகந்தப் பிள்ளையும்
சேனைத்தலைவ ராகிநின்ற
சிறந்தகோட்டுச் சுப்பரும்
ஏனையோரும் பட்டபாடு
இயம்புதற் கில்லையே.

யாழ்ப்பாண உத்தியோகர் இலட்சணக் கும்மி என்ற இன்னோர் நூல் கோடேறிக் கெட்ட பலரைப்பற்றியும் கூறுகின்றது. பிராமணப்பிள்ளைக்கு எதிராகக் கள்ள உறுதி எழுதின கூல் பட்டபாடுகளும் மறியலுக்குப் போனதும் அங்கு விரிவாகக்கூறப்பட்டுண்டு. அதில் ஒருசில பாட்டுக்கள் காட்டுதும்.

தலையி லிருந்து செவியைக்
கடித்தாற்போற்
சண்டாள ஞண
குழந்தை வேலன்
கொலைசெய் கோடரிக்
காம்புபோலே நின்று
குடியைக் கெடுத்தானே
ஞானப் பெண்ணே.

இட்ட முடையவன்
கூல்மேலே சுப்பர்தா
னெத்தனை யோவழி
மாறு லிருந்தது
கொட்டியு மாம்பலும
னெய்தலும் போலவே
யொட்டி யுலர்ந்தானே
ஞானப் பெண்ணே.

மூன்றுநாள் பின்னே
முதலாமெதிரியை
மூவிரா சாக்களும்
கூடியழைப்பித்து
வேண்டினுர் சட்டையை
யப்போதுங் கூல்தன்
வீரம் விடவில்லை
ஞானப்பெண்ணே.

எத்தனை பேர்கள்
துரைமார் முதலாக
எண்ண முடியாத
கேடுகள் செய்தனர்
இத்தனை வேதனை
வந்தும் மனது
இளைத்தானே கூலடி
ஞானப் பெண்ணே.

மானம் மருங்கு
பணங்களும் போச்சுது
மறிய லிருக்கத்
தலையில் விதியாச்சு
ஈனமல்லோ வேழைப்
பார்ப்பார் பணத்துக்
கிவராசைப் பட்டது
ஞானப்பெண்ணே.

இவ்வகைப் பாடல்கள் பல, கோடேறிக் குடிமுடித்த சங்கதிகள்பற்றி எழுந்துள்ளன. இவை மறைந்துபோகாமற் காப்பாற்றப்பட வேண்டியவை.

●○●

தமிழ் வகுப்புவாதமும் சிங்கள வகுப்புவாதமும் முட்டிக்கொண்டபோது பெருக்கெடுத்தது செங் நீர்! ஒரு தமிழச்சியைக் கட்டிக்கொண்டதற்காக வெட்டிக் கொல்லப்பட்ட சந்திரசேனவின் சட லத்தின்மீது சொரியப்பட்ட கண்ணீர்கள் ஒரு மொழியைததான் பேசின! சிங்களக் கண்ணீர் தமிழ்க் கண்ணீர் என்ற வித்தியாசமில்லை.

கதாசிரியர் திரு. கணேசலிங்கன் வாசகர்களுக்குப் புதியவரல்லர்; சிறுகதைத்துறையில், அவர் சிருட் டித்திறமைக்கு எடுத்துக்காட்டாக ‘நல்லவனும்’ ‘ஒரே இனமும்’ தொகுப்புக்களாக உண்டே!

# சங்கமம்

செ. கணேசலிங்கன்

புகைவண்டி உடுவர புகையிரத நிலையத்திலிருந்து கூக்குர லிட்டுக்கொண்டு புறப்பட்டு விட்டது. அந்தக் குக் கிராமத்துப் புகையிரத நிலையத்தில் இறங்கியவர் இருவர் — அல்ல மூவர் — அதோ தேவியின் கரத்திலே ஒரு பச்சைப் பாலகன்கூட. குழந்தையை மார்பிலே அணைத்தபடி, தேவி நிலத்தைப் பார்த்தபடி நடந்துகொண் டிருக்கிருள். நான்கு நாட்களாகத் தண்ணீரே படாது கண்ணீரை மட்டும் கண்டுகொண்டிருந்த அவள் கண்கள் இடையிடையே நிமிர்ந்து எதிரே நோட்டம் போடுகின்றன. கண்களிலே பீதி. குழந்தையை இறுக அணைத்துக்கொள்கிருள். அவள் உடலெல்லால் இடையிடை பதறிக்கொள்கிறது.

நெஞ்சிலே வலிமையை வரவழைத்துக் கொண்டு கிழவரின் பின்னே அமைதியாக நடக்கிருள். புகையிரத நிலயத்தை விட்டு வெளியே இறங்கிவிட்டனர்.

ஒரு கரத்தை வண்டிக்காரன் எதிரே வந்து “மாத்தயா, ஏறுங்களேன்” என்று பணிவுடன் கிழவரை வேண்டுகிருன். அவன் குரலிலே பயபக்தி தொனிக்கிறது.

“வேண்டாம், நடந்துதான் போகப்போகிறேன்”.

கிழவரின் குரலிலே கடுகடுப்பும், மனக்கொதிப்பும் எதிரொலிக்கின்றன. அரையிலே ‘பிளானல்’, சாரமாக; மேலே கோட்டு; தலையிலே குடுமி; அதனிடையே சீப்பு; காலிலே செருப்பு; கையிலே ஒரு குடை; கொடுப்புக்குள்ளே ஒரு புகையிலைத் துண்டு. உதடுகளைத் தொட்டுக்கொண் டிருந்த வெண் பஞ்சு போன்ற மீசையை இடையிடையே புறங்கையால் தட்டி விட்டுக்கொண்டிருந்தார்.



கிராமத்தின் நடுப் புறத்தை நோக்கிச் செல்லும் தெருவழியே கிழவர் நடந்துகொண் டிருந்தார். தெருவோரத்திலிருந்த வீடுகள், குடிசைகளிலிருந்து அந்தக் காட்சியைக் காண்பதற்காக அனைவரும் தெருவோரத்தே வந்துகொண் டிருந்தனர். எல்லோரது பார்வையும் குழந்தையை ஏந்திய தேவியின் மேலே பதிந்திருந்தது. அனைவரது முகத்திலேயும் அமைதி; மரண அமைதி.

அவர்கள் பிரயாணம் ஓர் ஊர்வலம்போல இருந்தது. விநோதம் பார்க்கும் கூட்டம் பெருகிக்கொண் டிருந்தது. படலைகளிலெல்லாம் பெண்களும் குழந்தைகளும் கூடி நின்றனர்.

மாலை வெய்யில் காய்ந்துகொண்டிருந்தது. தேவி தன் முந்தானைச் சேலையால் குழந்தையின் தலையை மூடி அணைத்துக்கொண்டாள். நான்கு நாட்களாக மாறாத அதே சேலை; சிவந்த சேலையும், அவளது சிவந்த மேனியும், சூரியனது செங்கிறக் கதிர்களும், அவளது மரண நிலைக்கு உயிரூட்ட முனைந்துகொண்டிருந்தன.

கடைத்தெருவுக்கு வந்து விட்டனர். இருகடைகள் அங்கே எரிந்து சாம்பலாகிக் கிடந்தன. தேவியின் இதயம் ஒருகணம் அதிர்ந்தது.

சில வாலிபர்கள் அங்கே கூடிப் பேசிக்கொண்டு நிற்கின்றனர். கிழவரின் கண்கள் அவர்களை ஊடுருவிப் பார்க்கின்றன. அவர்களிடையே ஒரு சிலரைக் கிழவர் இனம் கண்டு கொள்கிருர்.

சில நாட்களின் முன்னர் அவ்விடத்தேகண்ட காட்சிகளனைத்தும் கிழவரின் கண்முன்னே காட்சியளிக்கின்றன. வீட்டை நினைந்துவிட்டார். உள்ளம் பொருமுகிறது. இரத்தம் கொதிக்கிறது. கிழவரின் செருப்புச் சத்தம் ஒருகணம் ஓய்கிறது. குடையை நிலத்திலே ஊன்றியபடி சுற்றிப் பார்க்கிருர். எல்லோரது பார்வையும் தம்மேலே பதிவதைக் காண்கிருர்.

“இவள் ஒரு தமிழச்சிதான். துணிவு இருப்பவன் எவனுவது வந்து தொடுங்கடா பார்ப்பம்”.

கிழவரின் மனதிலே பொங்கி வந்த ஆத்திரமும் கவலையும் வார்த்தைகளாகப் பாய்கின்றன. தேவி குழந்தையை அணைத்தபடி அப்படியே நிற்கிருள். கிழவர் சிங்களத்தில் கத்தியதை ஓரளவு புரிந்து கொள்கிருள்.

“நீங்கள் மனிதப் பிறவிகளா, அல்ல மிருகங்களா ... மிருகங்கள். புத்த தர்மத்தின் விரோதிகள் ... ... வெறிநாய்கள் ...”.

உள்ளக் கொதிப்பு கிழவரின் உடலையும் நாவையும் பதறச்செய்கிறது. என்ன பேசுகிறேன், எங்கே நின்று பேசுகிறேன் என்பவற்றையெல்லாம்மறந்துவிடுகிருர்.

மீண்டும் நடைபோடுகிருர். தன் உலகையே இழந்துவிட்ட நிலையில் தேவி தொடர்கிருள். அவள்

உள்ளம் விரைவிலே வீட்டை அடைந்துவிடத் துடிக்கிறது. அவள் நா அசையவேயில்லை. பொருமித் துடிக்கும் இதய ஆவலை அடக்கிக் கொண்டே கிழவரின் பின்னே அமைதியாக நடந்து கொண்டிருந்தாள்.

தெருவிலே கூட்டம் அதிகரிக்கின்றது. எல்லோர் விழிகளும் அவர்களையே வட்டமிட்டுக்கொண்டிருக்கின்றன.

கொழும்பிலிருந்து மாலையில் வரும் அந்த வண்டியில் அலுவிகாரா தன் மருமகளை அழைத்து வரலாம் என்ற செய்தி கிராமமெல்லாம் பரவியிருந்தது. வண்டிச் சத்தம் கிராமத்தவர்களையெல்லாம் எதிர்பார்த்த நினைவுக்குக் கொண்டுவந்துவிட்டது. எல்லோரும் தெருவையே பார்த்துக்கொண்டு ஒருவரையொருவர் விசாரித்தபடி நின்றனர். தூரத்திலேயே கிழவரும் மருமகளும் வருகிருர்கள் என்பதைக் கண்டுகொண்டனர்.

அலுவிகாராவை அந்தக் கிராமத்தில் அறியாதவரே கிடையாது. பழைய கிராம விதானையார்; சீர், செல்வம், நிலபுலன்கள் உடையவர்; பெரிய சாதிக்காரர். அவர் வீட்டிலே சோகப் புயல் வீசுவதென்ருல் அது கிராமத்திற் பெரிய பரபரப்பை ஏற்படுத்தத்தானே செய்யும்.

சந்திரசேஞ அவரது ஒரே மகன். கொழும்பிலே வைத்தியக் கல்லூரியிற் படித்துக்கொண்டிருந்தான். படிப்பு முடிந்து டாக்டர் பட்டம் பெறும்நாள் நெருங்கிக்கொண்டிருந்தது. கிராமத்தில் முதல் டாக்டர்; கிழவர் பெருமையுடன் காத்திருந்தார்.

கிராமத்தில் தன் மகனுக்குத் தகுதியான பெண்களையெல்லாம் பார்த்து, மனைவியுடன் சர்ச்சை செய்துகொண்டிருந்தார்.

அவ்வேளை, சந்திரசேஞ ஒரு தமிழ்ப் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ளப்போகிருன் என்ற செய்தி கிட்டியது. கிழவரும் கிழவியும் அதிர்ச்சியடைந்தனர். கிராமத்தவரின் வாய்க்கு அஞ்சினர்.

“தேவி ஒரு பெண். அவள் தமிழ்ப் பெண்ணு சிங்களப் பெண்ணு என்பதை நான் விசாரிக்கவேயில்லை. அவள் தன்பெற்ருர் தமிழர் என்று பின்னர் சொன்னபோதேயே தெரிந்தது. இந்தப் பரந்த உலகத்திலே மொழியால் ஏற்படும் வேற்றுமை மிகக் குறுகியது. இதை இன்று நீங்கள் உணராவிட்டாலும் என்ருே ஒருநாள் கட்டாயம் உணர்ந்து கொள்வீர்கள். நான் எங்காவது வாழ வேண்டும் என்று கருதினுல் இந்தப் பெண்ணுடனேயே வாழ முடியும்” என்று பெற்ருேருக்கு எழுதிவிட்டுத் திருமணம் செய்துகொண்டான் சந்திரசேஞ.

எங்காவது பிள்ளை உயிரோடு வாழட்டும் என்று கிழவரும் கிழவியும் ஆரம்பத்திற் சொல்லிக்கொண்டனர்.

மாதங்கள் செல்லச் செல்லப் புத்திரசோகம் வலுத்து வந்தது.



“தமிழர்கள் நமது சகோதரர்கள்தானே. அவர்களது இரத்தம் எமது நரம்புகளிலும் ஓடுகிறது” என்று கிழவர் துணிச்சலுடன் கிராமத்தில் சமாதானம் பேசத் தொடங்கி விட்டார்.

கிழவர் ஒரு தடவை கொழும்பிற்குச் சென்று மருமகளையும் பேர்த்தியையும் பார்த்து வந்தார்.

இரண்டு வாரங்களின் முன்னரேயே மருமகளையும் குழந்தையையும் அழைத்துக்கொண்டு கிராமத்திற்கு ஒருதடவை வந்துபோகும்படி கிழவர் மகனுக்குக் கடிதம் எழுதினுர்.

அதற்கிடையில் எல்லாம் நடந்து முடிந்துவிட்டது.

வகுப்புக் கலவரம் கிராமத்திலேயும் தீயாக எரிந்தது. தமிழர் கடைகளுக்கு அருகேயிருந்த சிங்களவர் கடைகளையும் தீ எரித்துவிட்டது. அலுவிகாரா போன்ற சிலரின் முயற்சி எல்லாம் வீணுகி விட்டன.

கொழும்புச் செய்திகளைக் கேட்ட கிழவர் மருமகளுக்கு என்ன நேருமோ என்று உணவு உறக்கமின்றி ஏங்கிக்கொண்டிருந்தார்.

உடலெல்லாம் கட்டுக் காயங்களுடன் குற்றுயிராக மகனைக் காரிலே கொண்டுவந்து சேர்த்தான், ஒரு நண்பன்.

“சிங்களக் காடையர் காட்டிய கைவரிசை, தமிழச்சியைக் கட்ட என்ன துணிச்சல் என்று கூறி விட்டையே கொள்ளையும் அடித்து விட்டார்கள், மருமகளும் பேர்த்தியும் பொலிஸ் ஸ்ரேசனிலே” என்று கூறிச் சென்ருன், அந்த நண்பன்.

“தேவி, தேவி …… என் குழந்தை” என்று அனுங்கியபடியே உயிரை விட்டான் மகன்.

கிராமத்தில் வெறி அடங்கி, பச்சாத்தாப உணர்ச்சி தலையெடுக்கத் தொடங்கியது. கிராமத்தவர் அனைவரும் வீட்டிற் கூடிநின்றனர்.

கிழவரின் மனம் மலைத்து விட்டது. கொழும்பிலிருந்து மருமகளையும் பேர்த்தியையும் அழைத்து வந்துதான் சுடலைக்கு வருவேன் என்று புறப்பட்டு விட்டார் கிழவர். அவர்களைப் பார்த்து எல்லோரும் காத்து நின்றனர்.

அதோ கிழவர் நடந்துகொண்டிருக்கிருர். சோகம் நிறைந்த கண்கள் அவர்களைத் தொடர்கின்றன. கிழவரின் மனக் குமைச்சலும் எரிவும் இன்னும் அடங்கவில்லை.

கிராமத்திலே வெறியாட்டம் நடத்திய வேறு சிலரையும் கிழவர் தெருவில் இனம்கண்டுகொள்கிருர்.

“இவள் மருமகள்தான். தமிழச்சி. இவர்கள்தான் நீங்கள் குடியிருக்கும் நிலங்களையும் ஆளப் போகிருர்கள். துணிச்சலிருந்தால் வந்து தொடுங்கடா பார்ப்பம்.”

எவரும் அசையவேயில்லை, கிழவர் மீண்டும் நடந்துகொண்டிருக்கிருர்.

வீடு நெருங்கிக்கொண்டிருக்கிறது. அதோ வீட்டு வாசலிலே கூட்டம்.

“வருத்தம் பார்க்க இத்தனை கூட்டமா?” தேவியின் மனம் அடித்துக்கொள்ளுகிறது. கிழவர் அவளுக்கு உண்மையைக் கூறவில்லை.

“மகன் அழைத்து வரச் சொன்ஞன்” எனக் கூறியே அழைத்து வந்தார்.

சூது அறியாத தேவியின் மனம் உதறத் தொடங்கியது. தலையை நிமிர்த்தாது நடக்கிருள். ஒரு தடவை நிமிர்ந்து பார்க்கிருள். பழைய கல்வீடு; நாற்சந்தியின் மூலை; எதிரே ஒற்றைத் தென்னை;

சந்திரா முன்னர் கூறிய அடை
யாளமெல்லாம் நினைவில் வருகின்
றன. அவன் பிறந்த மண், விளை
யாடிய இடம், இளநீர் பிடுங்கிய
மரம், ஏறிப் பாய்ந்த படலை, நீரா
டிய தண்ணீர் ஓடும் வாய்க்கால்
யாவும் அவன் வர்ணித்தபடி மன
தில் விளையாடுகின்றன.

வீட்டின் எதிரே வந்துவிட்ட
னர்; எல்லோரும் வழி விடுகின்ற
னர். படிக் கட்டுகளைப் பார்த்த
படியே ஏறுகிறாள். கண்கள்
அரும்புகின்றன. உள்ளே நுழை
கிறாள். கணவரைக் காணும் ஆவல்
உந்துகிறது. தலையை நிமிர்த்த
வலுவில்லை. குழந்தையின் பாரமே
தெரியவில்லை. இதயப்பாரம் வலுக்
கிறது; தொண்டை அடைத்துக்
கொள்கிறது; தலையை நிமிர்த்து
கிறாள். எதிரே சவப்பெட்டி! கிழவி
ஓடிவருகிறாள். கால்களைக் கட்டிப்
பிடிக்கிறாள். குழந்தையை யாரோ
பிடுங்கிக்கொள்ளுகிறார்கள்.

"ஐயோ ...... " கிழவி ஏதோ
எல்லாம் சொல்லிக் கத்துகிறாள்.
தேவி மலைத்துப்போய் நிற்கிறாள்.
இதயம் உடையத் தொடங்குகின்
றது. கிழவியின் காலகளில் விழு
கிறாள்; தலையை அடித்துக்கொள்
கிறாள்; புரள்கிறாள்.

எழுந்து பிணத்தின்மேல் விழு
கிறாள். ஏதோவெல்லாம் சொல்
லிக் கத்துகிறாள்; பிதற்றுகிறாள்.

"தமிழச்சியாகப் பிறந்ததற்
காக வேண்டுமானால் என்னைக்
கொன்றிருக்கலாமே. உங்களை
ஏன் பழிவாங்கவேண்டும் ..."

சிலர் அவள் பிதற்றும் தமி
ழைப் புரிந்துகொள்ளுகின்றனர்.
அவர்கள் மயிர்கள் குத்திடுகின்
றன. புரியாதவரும் அவள் நிலையை
உணர்ந்துகொள்ளுகின்றனர்.
எல்லோர் கண்களும் ஏனோ கலங்கு
கின்றன.

கிழவர் முதலாக வாய்விட்டுக்
கத்துகிறார். கிழவி அவரின் கால்
களைப் பிடித்துக் கதறுகிறாள்.

"அம்மா" என்ற குழந்தையின்
அழுகைக்குரல் கேட்கிறது. கிழ
வர் விடுவித்துக்கொண்டு சென்று
பேர்த்தியை வாங்கிக் கொள்கிறார்;
கண் மடல்களிடையே பொங்கி
வழியும் கண்ணீருடன் பிள்ளையை
அணைத்தபடியே குழந்தையின்
முகத்தைப் பார்க்கிறார். மகனின்
பிரதிபிம்பம் முகத்தில் தெரிகிறது

"நீதான் இந்த இரு இனங்களை
யும் எதிர்காலத்தில் ஒற்றுமைப்
படுத்தப் பிறந்திருக்கிறாய். எல்லோ
ரது கண்ணீரும் ஒரே மொழியைத்
தான் உடையன. தமிழ்க் கண்ணீர்
சிங்களக் கண்ணீர் என்றும் வேறு
பாடு உண்டா"?

கிழவரின் மனம் பேசிக்கொள்கி
றது. குழந்தையின் முதுகைத்
தடவிக் கொடுக்கிறார். கண்கள்
இன்னும் உலர மறுக்கின்றன.

மருமகள் ஓடிவந்து அவரது
கால்களிலே விழுகிறாள்.

"என்னையும் கொன்று விடுங்
கள்" என்று கதறுகிறாள். கிழவ
ரால் அந்த வார்த்தைகளைப்
பொறுக்க முடியவில்லை. நெஞ்சம்
அடைக்கிறது. கண்கள் பொலு
பொலுவெனக் கண்ணீரைக் கக்கு
கின்றன. அவை கன்னத்தின்
வழியே வழிந்து விழ்ந்து, மருமக
ளின் முகத்திலே வடிந்துகொண்
டிருக்கும் இரத்தக் கண்ணீருடன்
சங்கமமாகின்றன.

●○●





கி. பி. 15-ம் நூற்றாண்டுக்கு முன்பு, யாழ்ப்பாணத்து அரசர்களின் இராசதானியாக விளங்கிய சிங்கைநகர் எது? வடமராட்சியிலுள்ள வல்லிபுரப் பகுதியா? அல்லது நல்லூருக்கும் கொழும்புத்துறைக்கும் இடைப்பட்ட பிரதேசமா?

வல்லிபுரப்பகுதி மணற்கும்பிகளுள், காற்றடிக்குங் காலங்களில் அல்லது மழை பெய்து விட்டபின், அநேக தொல்பொருட்கள் அகப்படுகின்றன! ......பூர்வகாலக் கலவோடுகள், கீச்சுக்கிட்டம், பெருவீதியின் அடையாளங்கள் முதலியன வல்லிபுரம் சிறந்த நகராக விளங்கியதென நிரூபிக்கின்றன என்கிறார்; வன்னிப்பகுதி யாழ்ப்பாணப் பகுதிகளின் தல, சரித்திர வரலாறுகளின் ஆராய்ச்சிகளிற் பெருந் தொண்டு புரிந்துவரும் முதலியார் சபாநாதன்.

# சிங்கைநகர்

முதலியார் குல: சபாநாதன்

பண்டைக்காலத்தில் வடஇலங்கையில் கந்தரோடை சிறந்த தலைநகராக விளங்கியது. நாகவரசர்கள் இங்கிருந்து ஆட்சி புரிந்து வந்தார்கள். இதற்குச் சில காலத்திற்குப்பின் உக்கிரசிங்கன் கி. பி. எட்டாம் நூற்றாண்டின் கடைசிக் கூற்றில் அரசனானான். இவன் அநேகவாயிர ஆண்டுகளாகத் தலைநகராகவிருந்த கதிரமலையைவிட்டுச் சிங்கபுரமாகிய சிங்கைநகரைத் தன் இராசதானியாகவும் தலைநகராகவுஞ் செய்தான். தன் இனத்தவர்களுஞ் சனத்தவர்களுமாகிய கலிங்கர் அவ்விடத்திற்குக் குடியேறியிருந்தபடியாலுந் தான் சிவவழிபாடுடையவனானபடியாலும் புத்த பள்ளிகள் நிறைந்திருந்த கதிரமலை (கந்தரோடை)யிலுஞ் சிங்கைநகரே சிறந்ததெனக் கருதினான். இந்நகைய கருத்தினை வெளியிட்டவர் முதலியார் இராசநாயகம் அவர்களாவர்.

உக்கிரசிங்கனுக்குப் பின் அவனுடைய மகன், செயதுங்க பரராசசிங்கன் என்னும் நாமத்துடன் அரசனானான். கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு மத்தி தொடக்கம் பதின்மூன்றாம் நூற்றாண்டுவரை இவனுடைய சந்ததியினரே சிங்கை நகரிலிருந்து அரசாண்டு வந்தனர். மணிமங்கலத்திற் கண்டெடுக்கப்பட்ட முதலாம் இராசாதிராச சோழவரசனின் கல்வெட்டுக்களிற் குறிப்பிடப்பட்ட மானாபரணன், வீரசலாமேகன், ஸ்ரீவல்லப மதனராசன் ஆகியோர் சிங்கைநகர் அரசர் என்பது முதலியார் அவர்களின் கொள்கையாகும்.

கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் மத்தியில் சோழவரசனின் அரண்மனைப் புலவராயிருந்த புகழேந்திப்புலவர் கதிர்காம யாத்திரையின் பொருட்டு இலங்கைக்கு வந்தபொழுது, சிங்கைநகர் அரசனைக்கண்டு அவனைப்பாடி, யானையும் நிதியும் பரிசிலாகப்பெற்றுச் சென்றார். புலவர் பெற்ற யானை வாயிலிலே கட்டப்பெற்றிருப்பதையறிந்த சோழனும் பாண்டியனும் அதனைப் பெறும்வண்ணம் புலவரிடம் போனகாலத்து.

பாவலன் வாசலில் வந்திபம்
வாங்கப் படிபுரக்கும்
காவலர் நிற்கும்படி வைத்தவா
கண்டியொன் பதினும்

**மேவலர் மார்பினுந் திண்டோ**
**ளினுஞ் செம்பொன் மேருவினும்**
**சேவெழுதும் பெருமான் சிங்கை**
**யாரிய சேகரனே.**

எனத் தமக்குப் பரிசில்தந்த அரசன் பெருமை தோன்ற முன்னிலைப்படுத்திப் புகழ்ந்து பாடினர். சிங்கைநகர் அரசன் இறந்ததைக் கேள்விப்பட்டபோது,

**ஆஆ விதியோ வடலா**
**ரியர் கோமான்**
**ஏஏ வலரா லிறந்த**
**நாள்—ஓஓ**
**தருக்கண் ணிலுங் குளிர்ந்த**
**தண்ணணிதங் தாண்ட**
**திருக்கண்ணி னுஞ்சுடுமோ தீ.**

எனக் கவன்று பாடியுள்ளார். புகழேந்திப் புலவர் பாடிய பாக்களிலிருந்து பன்னிரண்டாம் **நூ**ற்றுண்டின் ஆரம்பத்திலேயே சிங்கைநகரரசர் சிங்கையாரிய வரசர் எனும் பட்டப்பெயர் பூண்டிருந்தனர் என்பது பெறப்படும்.

பதினைந்தாம் **நூ**ற்றுண்டில் செண்பகப் பெருமாள் வந்து நல்லூரை இராசதானியாக்கும்வரை சிங்கைநகரே யாழ்ப்பாணத்தரசர்களின் தலைநகராக விளங்கியது.

சிங்கைநகர் வடஇலங்கையில் எங்கேயிருந்தது என்பதைக் கவனிப்போம். பருத்தித்துறைக்கணித்தாய் மணல் மேடுகள் பொருந்தியிருக்கின்ற வல்லிபுரமே பூர்வ காலச் சிங்கைநகராகும் என்பது முதலியார் இராசநாயகம் அவர்கள் கண்ட முடிபாகும். வல்லிபுர மணற்கும்பிகளுள் காற்றடிக்குங் காலங்களில் அல்லது மழைபெய்து விட்டபின் அநேக பழம்பொருட்கள் அகப்படுகின்றன. அங்கே பலவிடங்களில் பூர்வ காலக் கலவோடுகள், கீச்சுக்கிட்டம், அங்கிருந்து கரைமார்க்கமாய்ப் போன பெருவீதியின் அடையாளங்கள் முதலியன வல்லிபுரம் பண்டொருஞான்று சிறந்த நகராக விளங்கியதென நிரூபிக்கின்றன. இக்கொள்கையினையே நல்லூர் சுவாமி ஞானப்பிரகாசர் அவர்களும் ஆதரித்து எழுதியுள்ளார். இவ்வாராய்ச்சியறிஞரின் கருத்தினை நோக்குவோம்.

“அப்பால் ஆரியச் சக்கரவர்த்திகள் தம் செல்வாக்கு நிரம்பிய நாட்களில் பெருங் கப்பற்படை யுள்ளோராய்ப் பிரங்கியாதி பெற்றுள்ளமையினுல் அம்மரக்கலத்திரள் ஆழியிற் சுலபமாய்ச் சென்று திரும்புதற்கு அநுகூலமான துறைமுகம் உள்ளோராய் இருந்தமை அவசியம். தேகாலைப் பகுதியில் உள்ள கொத்தகயத்திற் கண்டெடுத்த கல்வெட்டுக்களும் அன்னேரைப் “**பொங்கொலிநீர்ச் சிங்கைநகர் ஆரியர்**” எனச் சூசிப்பிக்கின்றது. பெருங்கடற் சமீபமும் சிறந்த துறைப் பொலிவும் பொருந்தக் கொண்டது வல்லிபுரமே. ஆங்கு நற்றுறையுண்டோ என இராசநாயக முதலியார் கொண்ட ஐயுறவு எம்மால் இனிது தீர்க்கப்பட்டது, வல்லிபுரத்துக்கு மேலேயுள்ள கடலோரம் பண்டைநாட்தொட்டுக் குடாக்கரை என்றழைக்கப்படுதலையும் வெருகமுனைக்கும் கொட்டோடைக்கும் இடைப்பட்ட வில்வளைவான அக்கரை ஓர்காலம்மிகச் சேமமான ஒதுங்கு குடாவாய்த் திகழ்ந்தமையையும், இடைப்பட்டகாலத்திலும் இன்றைக்கும்மரக்கலங்கள்கச்சான் ஒதுக்கைநாடி அவ்வப்போது இக்குடாவில் நிறுத்தப்படுகின்றமையையும் நாம் நேரில் ஆராய்ந்து அறிந்துகொண்டோம். ஆகவே யாழ்ப்பாணச் சரித்திர ஆராய்ச்சி அறிஞர் இருவரும் சிங்கைநகர் எது என்பதை நிரூபிப்பதில் ஒரே கருத்துடையவராகக் காணப்படுகின்றனர்.





ஈழகேசரி வெள்ளிவிழா மலர்

**நல்லூர் இராசதானியிலே........**

இது ஒல்லாந்தர் ஆட்சியை நினைவூட்டும் சின்னம். கற்பு - நீதி - நேர்மைக்காகப் போராடிய பூதத்தம்பி முதலியாரின் இல்லத்து முகப்பு. யாழ்ப்பாண அரசர்களின் மாளிகையிருந்த இடத்தில் இருக்கின்ற பெருமையுடையது.

நல்லூர் அல்லது நல்லூருக்கண்மையிலுள்ள பகுதியே புராதன காலத்தில் சிங்கைநகர் என்னும் பெயருடன் விளங்கியதென் பாருமுளர். போர்த்துக்கீசர் கி. பி. 1590-ம் ஆண்டில் கொழும்புத்துறையில் இறங்கி நல்லூரைத் தாக்கியவிடத்து சிங்கைநகர் என்னும் பெயரோடு ஓர் பெலத்த அரண இருந்ததென குவிரேஸ் சுவாமியார் தாம் எழுதிய நூலிற் குறிப்பிட்டுள்ளதை மேற்கூறிய கொள்கைக்கு ஆதாரமாகக் காட்ட இடமுண்டு. இது எவ்வாறு பொருந்தும் என்ற ஆசங்கை எழுவது இயல்புதான். பூர்வ சிங்கைநகர் கொழும்புத்துறைக்கும் நல்லூருக்கும் இடையில் இருந்தது எனக் கொள்வதற்குப் போதிய சான்றுகள் இதுவரை கிடைக்கவில்லை. பொங்கொலி நீர்ச்சிங்கைநகர் என்பதற்கும் வேறுபொருள் வலிந்து கொள்ளவேண்டி வரும். சிங்கைநகர் அழிந்துபட்டு நல்லூர் தலைநகராயினபின், அந்தப் பழையநகர்ப் பெயரோடு ஓர் அரண் இங்கு விளங்கியதெனக் கொள்வதே பொருத்தமுடையதாகும். யாழ்ப்பாண வரலாறு சிறந்த முறையில் எழுதப்படவேண்டும். **இத்துறையில் சமூகத்தொண்டன் ஆர்வங் காட்டிவருவது வரவேற்கத்தக்கது.** இத்துறையில் இளைஞர் பலர் உழைக்க முன்வரவேண்டும். அப்பொழுதுதான் சிறந்த வரலாற்று நூல்கள் வெளிவரமுடியும். யாழ்ப்பாணச் சரித்திரமன்றி இலங்கைச் சரித்திரமே நடுநிலைமை நோக்குடன் எழுதி வெளியிடப்படவேண்டும். நம்நாட்டு வரலாற்றினை இக்கால ஆராய்ச்சி முறைக்கியைய எழுதி வெளியிடுவது விரும்பத்தக்கது.



நாடகத்திலுள்ள பலதரப்பட்ட கூத்து வகைகள், அவற்
றிற்குரிய இலக்கண விளக்கங்கள் நடிப்பிற்குரிய மெய்ப்பாட்
டுணர்ச்சிகள் முதலியவற்றைப்பற்றி யெல்லாம் தமிழ் இலக்கி
யங்களில் ஆங்காங்கு சில குறிப்புகள், கிடைக்கின்றன.
கிடைக்கும் செய்திகளில் நாம் பெருமளவுக்குப் புரிந்துகொள்ள
உதவியா யிருப்பது சிலப்பதிகாரத்திலுள்ள அரங்கேற்று
காதையும் அதற்கு அடியார்க்கு நல்லார் எழுதியுள்ள உரை
யும்தான். தமிழர்கள் நாடகக் கலையிலும், சிறந்து விளங்கி
ஞர்கள், என்பதற்குரிய சான்றுகள் இதிலேதான் கிடைக்
கின்றன.

— ஔவை டி. கே. சண்முகம்



பசுமைப் பூங்கா - பக்கலிலே பாலை! அணி நகர் - அருகிலே முட்காடு! உயர் கோபுரம் - அயலில் உட்கிய சுவர்! ஏன்? விதியா - விழிப்பற்ற தனமா? ஈழத்துக் கவிஞர் முருகையன் விடுக்கும் வினாக்கள் விழிக்கவைக்கின்றன!

# காரணம்?

முருகையன்

மாலைப் பொழுதில் வளமிக்க
வாழ்வை உடையோர் வந்துலவும்
சோலைப் பசுமைப் பூங்காவின்
சொக்கும் எழிலுக் கிணையேது?
சோலைப் பசுமைக் கப்புறத்திற்
சோர்ந்து கருகி வறுபடும்அப்
பாலைத் தரிசில் புல்தேடிப்
பார்த்தால் ஒன்றும் காணேம்;ஏன்?

வணிக நிலையம், அங்காடி
வாடி வீடு, நெடுவீதி
அணிகொள் நகரின் சமீபத்தில்—
அப்பாலுள்ள சிற்றூரில்
கிணறு தூர்ந்து, தெருச்சிதைந்து
கீழே விழுந்த மதகுகளும்
பிணைந்து பின்னிப் படர்ந்துள்ள
பெரிய முள்ளுக் காடுகளும்,

சிற்பக் கலைஞன் செய்திறனின்
சீர்மை தனக்கோர் சிகரம்போல்
நிற்கும் உயர்ந்த கோபுரத்தின்
நிமிர்வும், திமிரும்—அளவில்லை
பக்கத்தினிலே சுவரொன்று
பாழாய்க் குவிந்த மேடாகிக்
கற்களாகக் கலைபட்டுக்
காட்சி தருவ தெதனாலே?

○●○



இ தமிழ்ச் "சட்டம்பிமார்"கள் தூங்கிவழியும் மேல்தட்டு இலக்கியம் சமைப்பவர்களா? ஏனைய எழுத்தாளராய் உள்ளவர்களால் தான் முற்போக்கு இலக்கியம் படைக்க முடியுமா?

எழுத்துக்கும் எழுத்தாளர்க்கும் சிறந்த விமரிசனம் தரும் திறமைவாய்ந்த திரு. கனக - செந்திநாதன் இங்கு கனல் பறக்க கேள்விகளைமட்டும எழுப்பவில்லை — மேற்கோள்களுடன் விளக்கமும் தருகிறார்!





# செல்வமும் வறுமையும்

கனக - செந்திநாதன்

அவருக்கு ஒன்றல்ல; இரண்டல்ல... இருபத்தேழு பிள்ளைகள். அவ்வளவு பிள்ளைகளையும் காப்பாற்ற அவர் பெரிய செல்வச் சீமானுமல்ல, பரமஏழை. காட்டிடை இருந்து தவஞ்செய்யும் முனிவர் அவர். அவரே உடுத்திருப்பது பழைய-கிழிந்த-கந்தல் வஸ்திரந்தான். குசேலர் என்று அழைக்கப்பட்ட அந்த முனிவர்; அடக்கமும் பொறுமையும் வாய்மையும் அன்பும் உடையவராய், தாமியற்றும் தவத்தில் நாட்டஞ்செலுத்தி குடும்பத்தின் பொறுப்பை மனைவி-சுசீலை-கையில் விட்டு விட்டுத் தாமரை இலையில் தண்ணீர் போல வாழ்ந்து வந்தார்.

அவரால் அப்படி வாழமுடிந்தது. ஆனால் அவளால்-சுசீலையால்-அப்படி வாழ முடியுமா? பிள்ளைகளின் பசிக்கு ஏதாவது கொடுத்துச் சாந்தி செய்ய வேண்டுமே. காட்டிலிலுள்ள புல்தானியங்களை எடுத்துக் கஞ்சியாகக் காய்ச்சித்தான் அவளால் வார்க்கமுடிந்தது. அந்தக் கஞ்சிக்குக்கூட பெரிய மல்யுத்தம் பிள்ளைகளிடத்தே நடக்கும். அப்படி நடக்கும் பட்டினிப் பட்டாளத்தின் யுத்தத்தைப் பற்றி வறுமையின் கொடுமையைப்பற்றி இக்கால யதார்த்த-முற்போக்கு-இலக்கியப் பேராசிரியர்கள், சிறுகதை எழுத்தாள 'சம்ராட்'டுகள் கனவு கூடக் காண்பதற்கு முன்பே, பச்சைப் படியாக உருக்கமாகப் பாடியிருக்கிறார் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்,

"ஒருமகவுக்கு அளித்திடும்போது
ஒருமகவு கைநீட்டும்;
உந்திமேல் வீழ்ந்து
இருமகவும் கைநீட்டும்;
மும்மகவும் கைநீட்டும்;
என்செய் வாளால்
பொருமிஒரு மகவு அழும்;
கண்பிசைந்தழும் மற்றொரு மகவு;
புரண்டு வீழாப்
பெருநிலத்திற் கிடந்தழும்மற்றொருமகவு;
எங்ஙனம் சகிப்பாள்?
பெரிதும் பாவம்!

ஒரு பிள்ளைக்குக் கஞ்சிவார்க்கத் தொடங்கிய
போதே அதன்தலைக்கு மேலால் மற்றொரு
குழந்தை ஆவலோடு கையை நீட்டுகிறது,
அதை அதட்டிவிட்டுத் திரும்பிப் பார்க்கை
யில் 'அம்மா! கஞ்சி!!' என்றபாவத்தோடு
வேறிரண்டு குழந்தைகள் கைகளை நீட்டு
கின்றன, அவைகளைச் சாந்தப் படுத்தமுன்
வேறு மூன்று குழந்தைகள் தங்களுக்குத்
தான் முதலில் தரவேண்டுமென 'அடம,
பிடிக்கின்றன. இதற்குள் முதற்குழந்தை
'பொருமத்' தொடங்கிவிட்டது. அதை
அரவணைக்கமுன் வேறொரு பிள்ளை கண்
களைக் கசக்கி அழத் தொடங்கிவிட்டதே.
இதன் பொருமலைப் பார்ப்பதா? அதன்
அழுகையை மாற்றுவதா? என்று சிந்திப்ப
தற் கிடையில் நிலத்திலே விழுந்து, புரண்டு
கத்துகிறான் வேறொருபையன். அவளால்
என்னசெய்ய முடியும்? கவிஞராலேயே இக்
காட்சியைச் சகிக்க முடியவில்லை. 'பெரிதும்
பாவம்!' எனச் சுசீலைக்காக அநுதாபப்
படுவதோடு மற்றொருகாட்சியைத் தொடங்கி
விட்டார்,

**"அங்தோஎன் வயிற்றெழுந்த பசிஅடங்**
**கிற்றில்லைஎன அழுமா லோர்சேய் [கிற்**
**றில்லைஎன அழுமா லோர்சேய்**

**"அங்தோஎன் வயிற்றெழுந்த பசிஅடங் [கிற்**
**றில்லைஎன அழுமா லோர்சேய்**
**சிநதாத கஞ்சிவார்க்கிலை எனக்கு அன் [ணுய்**
**எனப்பொய் செப்பும் ஓர்சேய்**
**முந்தார்வத் தொருசேய்மி சையப்புகும் [போ**
**தினில்ஒருசேய் முடுகி யீர்ப்ப**
**நந்தாமற் றச்சேயும் எதிர்ஈர்ப்ப**
**சிந்துதற்கு நயக்கும் ஓர்சேய்"**

பேசமாட்டாத—சிறிது பேசத்தெரிந்த குழந்
தைகளின் காட்சியைக் காட்டிய கவிஞர்.
நன்ருகப் பேசத்தெரிந்த—பசிக்காகப் பொய்
சொல்லத் தெரியாத—அடிபிடி சண்டைகள்
போடத் தெரிந்த பெரிய பிள்ளைகளின் காட்
சியைக் காட்டுகிருர். "ஐயோ! என் வயிற்
றில் உண்டான பசி நீ தந்த கஞ்சியால்
அடங்கவில்லையே; பசி இன்னும் கூடிவிட்
டதே' என்று ஒருபிள்ளை அழுகிறது. நிலத்
திலே ஒருசிறிதும் **சிந்தாமல் கவனமாக**
ஒவ்வொரு பிள்ளைக்கும் வார்த்தும் எனக்
குக் கிடைக்கவில்லையே என்று ஒரு பையன்
பொய்யே சொல்லத் தொடங்கிவிட்டான்.
மற்றவர்களுக்குக் கொடுக்கும்போது ஒழுகிய
சிர்திய — கஞ்சியைத்தான் குடித்தேன்.
எனக்கென்று தனியாகத் தரவில்லை என்ற
கருத்திலும் 'சிந்தாத கஞ்சி' என்ற சொல்
நயம்பட இருக்கிறது. கழுநீர் முதலிய சிந்
கிற கஞ்சி — காய்ச்சிய உண்மையான சிந்
தாத கஞ்சி என அக்குடிலிலே தண்ணீர்
தவிர்ந்த ஏனையவெல்லாம் கஞ்சியாகவே
பாவிக்கவும் பட்டிருக்கலாம். 'சிந்தாத
கஞ்சி' என்ற இத்தொடரின் பொருளை நோக்
குந்தோறும் அது பலவகைப்பட்ட கருத்துக்
களை நம் மனத்தகத்தே எழுப்பி பசியின்
கோரரூபத்தை அப்பையன் வாயிலாகத்
தெளிவாக்குகிறது.

அதன்பின் ஒருகாட்சி. ஒருபையன்
மிகுந்த ஆசையோடு கஞ்சியைக் குடிக்கத்
தொடங்கிவிட்டான். பசிஅடங்காத இன்
னெரு பையன் அவன் பாத்திரத்திலே
பிடித்து இழுக்கிருன். முன் குடிக்கத்தொடங்
கிய பையன், 'போனல் போகட்டும்' என்று
விட்டுவிட்டானு? அவன் பசி விட்டுவிடுமா?
அவன் பாத்திரத்தைத் தன் பக்கத்துக்கு
இழுக்கிருன். ஒருவன் ஒரு பக்கத்துக்கு இழுக்
இழுக்க—மற்றவன் மறு பக்கத்துக்கு இழுக்
கப் பாத்திரம், —அது மண்ணுற்செய்த சட்டி
யல்ல — ஏதோ ஓலையால் செய்த சட்டுவம்
போன்றதோ அல்லது இலைகளால் தைக்
கப்பட்ட தொன்னை போன்றதோ — நடுப்
பகுதியில் கிழிந்து கஞ்சி ஒழுகத் தொடங்கி
விட்டது. ஆனல் அதைக்கூட 'அவம்போக'
விடாமல் இன்னெருபையன் கீழேயிருந்து
ஏந்திக் குடிக்கிருனும். ஐயோ! பசி எதைத்
தான் செய்யத் தூண்டுகிறது. பசியின்
கோர தாண்டவத்தைத் தத்ருபமாகக் காட்
டிய கவிஞர். மீனுட்சிசுந்தரம்பிள்ளையைத்
தவிர வேறெவரைக் கூறமுடியும்?

**"முந்தார்வத் தொருசேய்**
**மிசையப் புகும்போதினில்**
**ஒருசேய் முடுகியீர்ப்ப**
**நந்தா மற்றச்சேயும்**
**எதிரீர்ப்பச் சிந்துதற்கு**
**நயக்கு மோர்சேய்"**



என்ற இந்த வரிகளில் "ஆசையோடு ஒரு
பையன் கஞ்சியைக் குடிக்கத் தொடங்கும்
போது இன்னெரு பையன் நெருங்கிவந்து
பாத்திரத்திலே பிடித்திழுக்க இருவருக்குமே
வேண்டாமென்று எண்ணிச் சிந்துவதற்கு
ஒரு பையன் நினைக்கின்ருன்' என்ற குழந்
தைகள் மனேபாவமும் நயம்பட அமைந்
திருப்பது சிந்தித்து இன்புறற்பாலதாகும்.

பசி ஓரளவில் அடங்கியதும் பிள்ளைக
ளுக்கு நகை ஆசை தொட்டுவிட்டது.

**'குண்டலம் மோதிரம் கடகம்சுட்டி**
**அயன்மனையார்தங் குழவிக்கிட்டார்**
**புண்டரிகக் கண் அன்ளுய்! எமக்குநீ**
**இடாதிருக்கும் பொருமை என்னே!**
**கண்டெடுத்துப் போடு"**

என அவர்கள் கேட்கிருர்கள்; அழுகிருர்கள்.
குண்டலமும் மோதிரமும் காப்பும் வழியிலே
கண்டெடுக்கும் பண்டங்கள் என்பது அவர்
கள் எண்ணம். 'கண்டெடுத்துப் போடு'
என்ற தொடரால் கவிஞர் பிள்ளைகளின் அறி
யாமை —வறுமை— ஒருவருக்கும் இல்லாமை
ஆகிய விடயங்களை ஆழமாகக் காட்டுகிருர்.

இன்னும் குசேலரின் பிள்ளைகள் 'கறி'
என்ற சொல்லின் பொருளையே அறியாதவர்
களாயும், அன்னப்பால் (கஞ்சி) தவிர வேறு
பால்களைத் தெரியாதவர்களாயும் இருந்த
னர் எனவும் அக்குடிசையிற் புகும் 'எறும்பி
னுக்கும் ஆங்குணவு கொடுத்தற்கில்லை' என
வும் கூறிக் கவிஞர் வறுமையின் எல்லை
யைக் காட்டுகிருர்.

காலச்சக்கரம் சுழன்றது. கண்ணன்
அருளினலே குசேலர் பெருஞ் செல்வரானர்.

கஞ்சிக்குத் துடியாய்த் துடித்த குழந்
தைகள் இப்போது எப்படி இருக்கிருர்கள்?

வறுமையின் கோரரூபத்தைக் காட்டிய
கவிஞர் செல்வத்தின் மிதப்பைக் காட்டுகிருர்.

**'குருமலர் செம்பொற் கலம்எதிர்**
**கோதறு வெள்ளிய மூரல் [வைத்துக்**
**பருகுதற் கமைநத இன்சுவைக் குழம்பும்**
**பால்விராய் உபசரித் தூட்டத்**
**திருகுபு வேண்டாம் என்மரும் அதனைத்**
**திருமிப்பா ராதுசெல் குநரும்**
**அருகிய பசியும் இல்லைஎன் மருமாய்**
**அணிமகார் செருக்குதல் கண்டான்"**

இவர்களா குசேலரின் குழந்தைகள்? குண்
டலம் மோதிரம் கடகம் என்பவற்றைக்
'கண்டெடுத்துப்போடு' என்று கேட்டபிள்ளை
களா இவர்கள்? எப்படித் தங்க விக்கிரகம்
போலச் சொலிக்கிருர்கள்? ஆகா! நெற்றி
யில் வயிரச் சுட்டியும், மார்பிலே ஐம்படைச்
சின்னமும் கையிலே காப்பும் காதிலே
பொற்குழையும் விளங்கக் கலகல என
ஓடும் அப்பிள்ளைகளைத் தாதிமார் வழி
மறித்து பொற்கிண்ணத்திலே உள்ள நறும்
பாலை உண்ணும்படி மன்ருடுகிருர்கள். கஞ்
சிக்கு 'மல்யுத்தம்' போட்ட இந்தக் குழந்தை
கள் இப்போது தலையைத்திருப்பி 'வேண்
டாம்' என 'அருக்கு'கிருர்கள் திரும்பியே
பாராது சென்றுவிடுகிருர்கள். எங்களுக்குப்
'பசியேஇல்லை' என்று சொல்கிருர்கள். அப்
படி 'அணிமகார் செருக்கி' த்திரிகிருர்களாம்.
இருளும் ஒளியும்போல வறுமையையும்
செல்வத்தையும் ஒரே கவிஞர் எதிரெதிராகக்
காட்டியுள்ளமை வாசிப்போர்க்கு இன்பம்
பயப்பதாகும்.

குசேலரின் பிள்ளைகளைப் பார்த்துவிட்டு
இந்தக் காலத்துக்கு வந்தால் **கவிமணி**
**தேசிகவிநாயகம்பிள்ளை அவர்கள்** காட்டும்
மாடிவீட்டு செல்வச் சிறுமியரின் உல்லாசத்
தையும் ஓலைக் குடிசையின் ஒளிஇழந்த
பரட்டைத் தலைச் சிறுமியின் ஏழ்மையையும்
சந்திக்கிருேம்.

செல்வச்சிறுமி குதூகலத்தோடு கூறு
கிருள்:

**[நன்ருய்**
**"பாகமாய்ச் செய்த பண்டம்உண்போம் -**
**பக்குவம்வந்த பழங்கள் உண்போம்**

தாகமானால் பல பானகமும் – தாயார்
தந்திட உண்டு மகிழ்ந்திடுவோம்''

உணவு மாத்திரமா? காலத்திற்கேற்ற உடையணிந்து, கோலமாய்ச் சீவிச் சீவிச் சினுக்கெடுத்து கூந்தலில் நல்ல மலர்சூட்டி உன்னிஎழும் ஊஞ்சல் ஆடி உல்லாசமாய்க் காலங் கழிப்பதாகவும் கூறுகிருள்.

பத்துப் பசுக்கள்எம்
வீட்டில்உண்டு—நல்ல
பாலுக்கு யாதொரு
பஞ்சமில்லே

நித்தம் சுகமாக
வாழ்ந்திடுவோம்—இந்த
நீணிலத் தெம்மையொப்
பாரு முண்டோ?

என்று அந்தச் செல்வச்சிறுமியின் பூரிப்பும் அகங்காரமும் நிறைந்த விஞவைக் கேட்டு நாம் வாயடைத்துப் போகிறோம்.

அப்புறம் ஓலைக் குடிசையில் ஏழைச் சிறுமியின் பரிதாபக்குரலைக் கேட்கிறோம்.

“நல்ல பண்டங்களைக்
கண்டறியோம்—ஒரு
நாளும் வயிறார
உண்டறியோம்

அல்லும் பகலும்
அலைந்திடுவோம்—பசி
ஆற வழியின்றி
வாடிடுவோம்.''

'பாகமாகச் செய்த பண்டம்உண்போம்' என்று கூறிய செல்வச் சிறுமிக்கு எதிர் நீச்சல் போடும் இவளின் கூற்று பரிதாபமாக இருக்கிறதல்லவா? பத்துப் பசுக்களின் பாலில் நீந்திய பணக்காரச் சிறுமிக்கு ஏழைச் சிறுமி தன் விட்டிலுள்ள பாலேப்பற்றிக் கூறுகிருள். அது 'அன்னப்பால்' (கஞ்சி) குசேலோபாக்கியானத்தில் மாபெருங்கவிஞர் மீனுட்சிசுந்தரப்பிள்ளை காட்டிய 'அன்னப் பாலே' கவிமணி தேசிகவிநாயகம்பிள்ளை சிறிது அழுத்தமாகக் காட்டுகிரு.

'அன்னப்பால்' காணுத
ஏழைகட்கு—நல்ல
ஆவின்பால் எங்கே
கிடைக்குமம்மா?
என்னப்பா யாம்படும்
பாட்டையெல்லாம்—சென்று
யாரிடம் சொல்லி
அழுவோம் அம்மா'

'கறி' என்ற சொல்லின் பொருளறியாத குசேலரின் குழந்தைகளுக்கு இந்த ஏழைச் சிறுமியும் 'வாரிசு' தான். 'இட்டலி'யை ஒரு பலகாரவகை என்று தெரியாமல் ஒரு வகை எலி என்றும், தேயிலே, காப்பி, சோப்பு என்பன வேறு ஏதோவகைப் பண்டங்களென்றும் அவள் நினைக்கிருள். இந்தச் 'செல்வமும் சிறுமையும்' என்ற பாடல்கள் ஒருவகையில் குசேலோபாக்கியானத்தை நினைவுக்குக் கொண்டுவருகின்றன. குழந்தைகளுக்கு ஏற்ற நல்ல பாடல்கள் இவை. 'இன்னுவிளமை வறுமை வர்தெய்தியக்கால்' என்ற கடுமையான பாடல்களில் சிறுவரின் மண்டைகளைப் போட்டு உருட்டும் ஆசிரியர் இவற்றை முன்னதாக — முகவுரையாகப் — படிப்பித்துப் பதம் பார்க்கலாம்.

கவிஞர் பெருமான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையின் 'குசேலர் குழந்தை'களையும், கவிமணி தேசிக விநாயகம்பிள்ளையினது ஏழைச்சிறுமியின் இரங்கலையும் பார்த்துவிட்டு அப்பால் 1958 க்கு நகர்ந்தால் ஒரு பெண் ஆசிரியை இன்னும் உருக்கமாக ஓர் ஏழைச் சிறுமியை நமக்குக் காட்டுகின்ருர். காமாட்சி ஸ்ரீநிவாசன் பாடிய குழந்தைப் பாடல்கள் என்ற கவிதைத் தொகுதியில் அருமையாக அப்பாடல்கள் காட்சி அளிக்கின்றன.

ஏழைக் குழந்தையொன்று கூலிவேலே செய்து பிழைக்கும் தன் தாயை நோக்கிக் கேள்விகளை அடுக்குகிறது.



“ஆணும் பெண்ணும் சிறுவருமாய்
அணி அணியாகச் செல்கின்ருர்
காண நல்ல உடையாடை
கவினுர் தோற்றம் கொள்கின்ருர்
என்னை ஏனே எவ்விடமும்
இனிதாய்அழைத்துச்செல்வதில்லே
தென்னை மரத்தின் நீழலிலே
சிறிதே சுற்றி வருவதல்லால்.

''தென்னை மரத்தின் நீழலிலே சிறிதேசுற்றி வருவதல்லால்'' என்ற வரிகளால் ஏழைச் சிறுமியின் மனேநிலையை ஆசிரியை எவ்வளவு துல்லியமாக-வியாக்கியானத்துக்கு அடங்காததாகப்-படம் பிடித்துக் காட்டுகிருர்.

பக்கத்து வீட்டுச் சிறுவரெல்லாம் பல வகைப் பலகாரங்கள் உண்கிருர்களே, அவைகள் எம்வீட்டில் ஏன் இல்லை என்று குழந்தை மறுபடியும் கேட்கிறது,

ஏன் எம்வீட்டில் பால்இல்லே?
இட்டலி தோசை வகையில்லே?
பானம்பருக ஒன்றும் இல்லே
பச்சைத் தண்ணீர் குடிப்பதல்லால்
கஞ்சி ஒருநாள் கூழொருநாள்
காய் கறியோடு சோருெருநாள்
மிஞ்சும் ஒருநாள் வெறுஞ்சோற்றை
மென்று தின்பதும் ஏனம்மா?

இன்னும் இப்படியான விஞக்கள் அப்பாடலிலே பல இருக்கின்றன. பச்சைத்தண்ணீரைக் குடித்தும், வெறும் சோற்றை உண்டும் வாழும் ஏழைக் குழந்தைக்குத் தாயார் சொன்னபதில் அருமையாக அப்பாடலிலே அமைந்திருக்கும் ஒரு பாடலோடு நிறுத்திக் கொள்ளுகிறேன் மிகுதியை நீங்களே வாங்கிப் படித்துப் பாருங்கள்.

கூலிவேலே செய்துனக்குக்
கூழும் சோறும் தருகின்றேன்
மேலோர் போல நாமிருக்க
விரும்ப லாமா கண்மணியே?

என்பது தாயின் பதில். திருவாவடுதுறை மடத்தில் சகலசெல்வங்களோடும் இருந்தவர் மீனுட்சிசுந்தரம்பிள்ளை; ஆதீன மகா வித்துவான். திருவிதாங்கூர் ஆசிரிய கலா சாலேயில் தமிழாசிரியராக இருந்து வறுமை தெரியாமல் வாழ்ந்தவர் தே. வி. மதுரை லேடிடோக்கல்லூரிப் பேராசிரியை காமாட்சி ஸ்ரீநிவாசன். தமிழ் ஆசிரியர்கள் (சட்டம்பிமார்) போயும் போயும் தமிழில் மேல்தட்டு இலக்கியம் சமைப்பவர்கள். தொழிலாளிகளாகப் பிறந்து - வாழ்க்கையுடன் போராடி-தொழிலாள எழுத்தாளராய் உள்ளவர்களால்தான் பசி, வறுமை, சமுதாய மாற்றம் முதலிய 'கரு'க்களை வைத்து, யதார்த்த — முற்போக்கு — இலக்கியம் சமைக்கமுடியும்' என்று ஓர் 'இலக்கியப் பரிசயம்' ஓர் எண்ணம இருக்கிறதே. அவர்கள் இந்தப் 'பசிப் பாடலைப்பற்றி என்ன நினைப்பார்களோ?



## சிறந்த இலக்கியம்

மக்களுக்குக் கவர்ச்சியாக இருப்பது எதுவோ அதையே சிறந்த
இலக்கியம் என்று கூறல் இயலாது. இலக்கியத்தை ஆயும்
போது அதன் விழுமிய உணர்ச்சி, சீரிய கற்பனை, அழகிய
வடிவம் ஆகியவைபற்றி ஆய்தல்வேண்டுமே அன்றி, மக்க
ளின் உள்ளத்தைக் கவரும் நூல் என்னும் காரணம்பற்றிப்
போற்றுதல் கூடாது.

—மு. வாதராசன்



கொழுத்த சீதனமற்ற இடங்களில் மணம்முடிக்க வாலிபர்கள் தயங்கும்போது, முருகப்பர்கள் பொய் சொல்லித்தான் ஆகவேண்டியிருக்கிறது! ஆயிர மாயிரம் 'அருளானந்தன்'கள் தோன்றுத வரை வாழத் துடிக்கும், "தங்கங்"கள் கண்ணீர் வடிப்பதைத் தவிர வேறு வழியில்லை!

திருமதி பத்மா - காந்தன் (புதுமைப்பிரியை) ஐந்து ஆண்டுகளுக்கு முன்னரே "சுதந்திரன்' நடத்திய சிறுகதைப் போட்டியில் முதற்பரிசு பெற்றவர். இவர் எழுதியுள்ள 'நல்லமுத்து'வும் 'பெருநெருப்பு'ம இந்த ஆண்டின் சிறந்த சிறு கதைகளின் வரிசையில் இடம்பெற வல்லன.

# போய்?

பத்மா - காந்தன்

"கத்தரிக்காய் ......! கத்தரிக்காய் ......!

"உம்புட்டு ...... உம்புட்டு ..."

தமிழிலும் சிங்களத்திலுமாக அந்த மரக்கறி வியாபாரி கத்திக்கொண்டிருந்தான். அவன் சத்தத்தைத் தொடர்ந்து மரக்கறி வண்டியின் சில்லுகள் 'கடமுட' ஓசை எழுப்பிக்கொண்டிருந்தன.

கூடைகளிலும் வண்டிகளிலுமாகக் கத்தரிக்காய் விற்பனைக்குப் போய்க்கொண்டிருந்தது.

காலைச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு பாத்திரங்களைச் சுத்தம் செய்வதில் ஈடுபட்டிருந்தனர் சில பெண்கள். அன்பைச் சேர்த்து வாழ்வை இன்பமயமாக்குவது போல நல்ல கறியைச் சேர்த்து உணவின் சுவையைக் கூட்டுவதற்காக — மரக்கறிக்காரனை எதிர்பார்த்தபடியேயிருந்தது ஒரு பெண்கள் கூட்டம்.

வழக்கமாக மரக்கறி வண்டிக்காரன் ஒவ்வொரு வீட்டு வாசலிலும் தனது 'வாழ்க்கைத் தேரை' உருட்டிச் செல்லும் அந்த வண்டியை நிறுத்துவான்; அதிலிருக்கும் காய்கறியைப்பற்றி விளம்பரம் செய்வான்.

அன்று எல்லா மரக்கறி வியாபாரிகளிடமும் கத்தரிக்காய்தான் மிகுந்து இருந்தது. ஆமாம் கத்தரிச்செடி சிலிர்த்துக் காய்த்துத் தூங்குகிற காலம். 'மார்க்கெட்'டிலும் கத்தரிக்காய் மலிந்து விட்டதுபோலும்!

கத்தரிக்காயை விரும்பிப் பெறுவோரைக் காணோம். குவியலாகக் கண்டதும் மலிந்த பொருளென்று



முகத்தைச் சுளித்தனர் சிலர். காயை எடுத்துப்பார்த்து விலையில் பேரம் பேசிவிட்டு வாங்காமல் சென்றனர் பலர்.

விதிச் சம்பவங்களைக் கண்கொட்டாமல் பார்த்தபடியே நின்றுள் தங்கம். 'மார்க்கெட்'டிலே மலிந்த பொருள் — பலதரப்பட்டவரும் விலைபேசி அதை இன்னும் இலகுவாகத் தட்டிக்கொண்டு போவது போலப் பேரம் பேசுவது கைக்கெட்டாவிட்டால் — சே! சூத்தைக்காய், வாடல் எனக் குத்தலாகச் சில வார்த்தைகளை உதிர்ப்பது இவையெல்லாம் இக்காலத்துத் திருமணப் பேச்சைப்போல, என்ற நினைப்பே தங்கத்தின் உள்ளத்தில் உதித்தது.

மலிந்த சரக்கு—அதுவும் மரக்கறி —என்றால் இன்றைய மணமாகாத பெண்களைப் போல, என்ற எண்ணம் அவளுடைய சிந்தையிலே ஊறிவிட்ட ஒன்று.

அது அவளுடைய தவறல்ல. அவள் வாழ்ந்துவந்த பாதை—அநுபவம் அறிவுறுத்திய படிப்பினை அது.

◆ ◆ ◆ ◆

தங்கம் — முருகப்பரதும் செல்லம்மாவதும் தாம்பத்தியச் செடியில் பூத்த ஒரு மலர் — ஒரே மலர். சீமெந்துத் தொழிற்சாலையில் காலைச்சங்கு ஊதி அதன் ஓசை மடிவதற்கு முன்பே முருகப்பர் குளித்துச் சாப்பிட்டுவிட்டுத் தன் சயிக்கிளில் ஏறி உட்கார்ந்துவிடுவார் தொழிற்சாலையை நோக்கி. பள்ளமும் குழியுமான அந்த மயிலிட்டித் தெருவில் சயிக்கிளை ஓட்டுவது அவருக்குப் புதிதல்ல. அவர் வாழ்க்கையோடு ஒட்டிவிட்ட அன்றுடைய நிகழ்ச்சிதான் அது. ஆம், அவர் காங்கேசந்துறை சீமெந்துத் தொழிற்சாலையில் ஒரு மூன்றுந்தரக் குமாஸ்தாவாகப் 'பாக்டரி' தொடங்கிய நாளிலிருந்து பணி புரிந்து வருகிறார். தமது 20 வயதில் தகப்பனுருடன் சண்டை பிடித்துக்கொண்டு எட்டாம் வகுப்புப் படிப்போடு மலைநாடு புறப்பட்டவர், அங்கு எப்படியோ ஒரு தோட்டத்தில் ஆசிரியராகச் சேர்ந்து விட்டார். அப்போதுதான் செல்லம்மாவைக் கைப்பிடித்தவர். பிள்ளைக்கலி தீர்க்கப் பிறந்தவள் தங்கம்!

தலைமயிர் நரை தட்டும்வரை அவர் ஊரைத் திரும்பியே பார்க்கவில்லை. இப்போதும் திரும்பிப் பார்த்திருக்க மாட்டார் — மனைவி செல்லத்துக்கு அந்தப் பாழாய்ப் போன வியாதி — கயரோகம் பிடிக்காவிட்டால் தமது கட்டையைக் கூட அந்த மலைநாட்டு மண்ணில்தான் போட்டிருப்பார்.

வேறு வழியில்லை; வேலையை உதறித் தள்ளிவிட்டுக் செல்லத்தோடும் தங்கத்தோடும் ஊருக்குத் திரும்பிவிட்டார். எட்டாம் வகுப்போடு தோட்டத்துச் சட்டம்பியாக இருந்தவர் மூட்டையாகக் கொண்டு வந்தவை ஏதோ உடைந்த பாத்திரங்களும், கிழிந்த கப்பளிகளும் தவிர — இரும்புச் சேமிப்புப் பெட்டியாகவா இருக்கும்? செல்லம் ஊர்வந்த கையோடு —மயிலிட்டி கயரோக ஆசுப்பத்திரியில் கண்ணை மூடிவிட்டாள்! உயி

ரோடு உயிராக, உணர்வோடு
உணர்வாக, உடலோடு உடலாக
ஒட்டி வாழ்ந்த அவள் பிரிந்தவுடன்
அவர்மட்டும் வாழ்ந்து பயனில்லை
என்ற முடிவுக்கு வந்திருப்பார் முரு
கப்பர் — ஆனுல் … … ?

செல்லம்மா சாகும்போது … …
தனது ஒட்டி உலர்ந்த சுள்ளித்தடி
போன்ற கைகளால் அவரது முகத்
தைத் தடவி, அருகில் நின்ற தங்
கத்தைக் காட்டி, 'தங்கத்தை நல்ல
படி வாழவையுங்கள். நானில்லாக்
குறை அவளுக்குத் தெரியவேண்
டாம். இது உங்கள் பொறுப்பு'எனக்
கேட்டுக்கொண்டதுதான் வாழ்க்
கை என்ற 'போரை' அவர் தொடர்
ந்து நடத்தக் கரரணமாயிருந்தது.
இல்லாவிடில் முருகப்பர், தோட்டத்
துச் சட்டம்பி முருகப்பராகவே
செத்திருப்பார் — தள்ளாடும் வயசி
லும் பாக்டரிக் குமாஸ்தாவாகவே
இருக்கவேண்டியதில்லை.

தங்கம் எஸ். எஸ். சி. பரீட்
சைக்குத் தயார் பண்ணிக்கொண்
டிருக்கும்போதே திடீரென ஒரு
நாள் பருவமெய்திவிட்டாள்! —
இவ்வளவுநாளும் தாமுண்டு, தம்
ஒட்டைச் சயிக்கிளுண்டு, சீமெந்து
பாக்டரியுண்டு எனத் திரிந்த முரு
கப்பர் அப்போதுதான் திகைத்துக்
கொண்டு விழிப்படைந்தார். தம்
மீது ஏதோ பெரிய பொறுப்பு
நெரிப்பது போலப் பிரமை! இனி
யென்ன, மகளுக்கு ஏற்ற ஒருவ
னைத் தேடி வாழவைப்பதுதானே?
—செல்லம் சாகும்போது கூறிய
படி செய்துவிட்டால் இந்தப் பாக்
டரித் தொழிலுக்கு முழுக்குப்
போட்டுவிட்டுத் தாமும் நிம்மதி
யாக … … …

"காட்டுக்குள் புகுந்தால்தான்
வேட்டை ஆடுவதின் சிரமம்
தெரியும். 'ல'கரத்தில் புரளும்
பணங்கொழித்த பேர்வழிகளே
முதிர்ந்த பெண்களை வீட்டுக்குள்
வைத்துக்கொண்டு மாப்பிள்ளை
தேடுவதில் சிரமப்பட்டுக் கொண்
டிருக்கும்போது, சாதாரண அன்
ருடக உழைப்பாளியான முருகப்ப
ருக்கு மருமகன் கிடைப்பதற்கு
அவரென்ன புராணகாலத்துப் புண்
ணியவானு? — அவர் யோசித்தார்.
வாழ்க்கையின் மேல்தட்டில் பவனி
வருபவர்களை விடுத்து, தம்மோடு
ஒத்த வர்க்க உறவுள்ளவர்களை
அண்டினுர் ஏதாவது உதவி பெற
லாமென்ற ஆவலோடு — பாவம்
இரண்டு மூன்று பெண்களைப்
பெற்று வைத்துக்கொண்டு கரை
சேர்க்க முடியாத சுமையை விதி
மீது இறக்கி வைத்துவிட்டு முழிசிக்
கொண்டிருக்கும் அவர்களால் மு
கப்பருக்கு உதவ முடியவில்லை —
இந்த உலகில் பாவம் செய்தவர்
ளெனுல் பெண்களைப் பெற்
பெற்றுரைவிட வேறு யாரா
இருக்க முடியும்?

தங்கம் — பெயரில் மட்டுமல்
தங்கம் — அழகு சுடர்விடும் த
கம் அவள். தாயை இடையில்
பறித்துக்கொண்ட குறைக்குப் பிர
யச்சித்தம் செய்து கொள்வ
போல இயற்கை வனப்பை அவ
மீது வாரி இறைத்திருந்தது.

முருகப்பர் பாக்டரித் தொ
லோடு மாப்பிள்ளை வேட்டைக்க



கப் பறந்து திரியாமல் அவள்
அழகு அவருக்கு உதவியது……

பெண்தேடிப் பல வாலிபர்கள்
அவர் வீடு வந்தார்கள்! முருகப்பர்
இதை விரும்பவில்லை. அவர் அடி
மனதுள் கிடக்கும் தன்மானம்
அடிக்கடி கொதிக்கும்தான்! வந்த
வாலிபர்களிற்பலர் பணக்காரர்கள்,
படித்தவர்கள். ஆனுல் பெரும்பா
லோர் வந்தது அவரை மாமனுராக்
கிக்கொள்ள அல்ல … … … வசதி
வாய்த்தால் தங்கத்தைத் தட்டிக்
கொண்டுபோய் சிலநாள் வைத்துக்
கொள்ள!

முருகப்பர் போன்ற அன்ருடம்
காய்ச்சிகளின் வாழ்க்கையில் இப்ப
டிப் பெரிய இடத்துப் பிள்ளைகள்
நுழைந்து கொள்வது சுலபம்.
ஆனுல் முடிவு……? எத்தனை முரு
கப்பர்கள்—இப்படி வந்தவர்களிடம்
— தம் பெண் குழந்தைகளை வீட்
டுக்கு உதவிசெய்யும் 'ஆயா' என்ற
போர்வையோடு கொடுத்திருக்கி
ருர்கள்? முருகப்பர் ஏமாறத் தயா
ராக இல்லை.

தோட்டத்து ஆசிரியர், பாக்ட
ரிக் குமாஸ்தா, ஒரே ஒரு பெண்
ணைப் பெற்றவர், ஏதாவது வைத்
திருப்பார்தானே, தங்கத்தோடு
சேர்த்து அத்தொகையைக் கொடுப்
பாரானுல் தங்கத்தையும் ஏற்றுக்
கொள்ளலாமென வந்த மத்திய
தரத்தைச் சேர்ந்த வாலிபர்களு
முண்டு.

மொத்தமாக, முருகப்பர் வீட்
டுக்குப் பெண் தேடி வந்தவர்களில்
முன்னவர்கள் தங்கத்துக்குத் தாலி
கட்டி ஏற்கத் தயாராக இல்லை.

மற்றவர்கள் சீதனமின்றித்
தங்கத்தைமட்டும் ஏற்கத் தயாராக
இல்லை.

முடிவில் … … …?

* * *

"பிள்ளை தங்கம்!… …" முருகப்
பர் அந்தச் சயிக்கிளைத் தள்ளிக்
கொண்டு வீட்டுக்குள் நுழையும்
போது அவசரமாகச் சொல்லுவார்.
"இண்டைக்கு ஒரு பகுதி வருகினம்.
அயல் வீட்டு ஆச்சியையும் துணைக்
குக் கூப்பிட்டு ஆயத்தப்படுத்து
பிள்ளை."—

சயிக்கிளிற் கட்டிக்கொண்டு
வந்த சீனி, கோப்பி, பலகா
ரச் சாமான்கள் முதலியவற்றைக்
கொடுத்துத் தங்கத்தை அவசரப்
படுத்துவார். நேரத்துக்கு எல்லாம்
அணிந்துகொண்டு அவளும் வந்த
வர்கள்முன் உட்காருவாள். அவள்
உள்ளே போனதும் வந்தவர்களுக்
கும் தகப்பனுருக்கும் பேரம் நடக்
கும்.

— 15 ஆயிரம் ரொக்கப் பணம்
— அல்லது வேண்டாம்!

— 10 ஆயிரம் காசும் 5 ஆயி
ரம் நகையும் — அல்லது சரிவராது!

— கல்வீடு ஒன்றும் 5 ஆயிரம்
காசும் 3 ஆயிரம் நகையும் — அல்
லது ஒத்துவராது!

* * *

"காய்கறி! … … … ஏய் காய்
கறி … …!!

இப்படிக் கொண்டா ... ...''

''கடக் ... ... முடக் ... கடக் ...'' வண்டிச் சில்லின் உருளல்.

''நல்லகாய் அம்மா ... ... எடுத் துங்கோ ... ...''.

''ஹும் ... ... சே ... ... ஒத்து வராது. கொண்டுபோ''

மாறி மாறி இதே குரல்கள்! அதே பதில்கள்!

கீழே நடக்கும் இந்த நிகழ்ச்சிக ளெதுவும் இப்போது அவள் புலனை எட்டவில்லை. தங்கம் இன்னமும் சிந்தனையிலிருந்து விடுபடவில்லை.

* * * * *

முருகப்பர் ஓரளவு சோர்ந்து போய்விட்டார்.

வழக்கம்போல அன்றும் பெண் பார்க்க ஒரு வாலிபரை அனுப்பி வைப்பதாக—முருகப்பரின் நண்பர் தெரிவித்திருந்தார்.

15 ஆயிரம்...! கல்வீடு...! 5 ஆயிரம் நகை...! மாறி மாறி அவர் மனக்கண்முன் விஸ்வரூபமெடுத்து நின்றன! இவை;— அவர் நெற்றி நரம்புகள் புடைத்து வியர்வை நெற்றியில் துளிர்த்து நின்றது. சாய்வு நாற்காலியில் படுத்து இடது கையால் நெற்றியைப் பிடித் துக் கொண்டு இருந்தார்.

கண்கள் கலங்கி இலேசாகக் கண்ணீர் துளித்து நின்றது......

ஒரு நெட்டுயிர்ப்பு!—திடீரென எழுந்து உட்கார்ந்தார். மனந் துணிந்துதான் அதைச் செய்யப் போகிருர்.

மாப்பிள்ளை வந்துவிட்டார்!

உபசரிப்புக்கள் — பெண்பார்த் தல் யாவும் முடிந்தன.

வழக்கத்துக்கதிகமாக முருகப் பர் உற்சாகமாகக் கலகலப்பாக இருந்தார்.

மாப்பிள்ளை பண்பும் குணமும் உடையவராகப் பார்க்கும்போது தெரிந்தது. அவர் பேச்சு, பழகிய முறை முருகப்பருக்கு மட்டுமல்ல, தங்கத்துக்கும் பிடித்தது.

தங்கம் உள்ளே போய்விட் டாள். முருகப்பர் கதையை நீட்டி வளைக்கவில்லை. ஒருமுறை செருமிக் கொண்டு நிதானமாகச் சொன்னுர்.

''தம்பி! உங்களுக்குள் இருக் கட்டும். இவள் எனது மகளல்ல; வளர்ப்புப்பெண்; குழந்தையி லிருந்து எடுத்து வளர்க்கிறேம். வளர்ப்புப் பெண்ணுக்குத் தொகை யாகச் சீதனம் கொடுக்க என் ஞல்.........?

''.................''

''.................''

உள்ளே நின்ற தங்கத்துக்கு மேற்கொண்டு எதுவும் கேட்க வில்லை! அவள் காதுகள் அடைத் துக் கொண்டுவிட்டன. உலகம் இருண்டுகொண்டு வருவதுபோல ......தலை சுற்றி......

தொண்டையுள் எதுவோ நெரிப் பது போன்ற உணர்வு...!

* * * * *

தங்கம் விழித்தபோது தகப்ப ஞர் விசிறிக்கொண்டு கண்ணீர் வழிந்தோட அருகிலிருந்தார்.





''அப்பா......!'' அவரைக் கட் டிக் கொண்டு கதறிவிட்டாள் அவள்.

''தங்கம்......!'' என்னருமை மக ளே!'' என்னை மன்னித்துவிடம்மா.

''பெற்ற மக... ...ளையே... ...'' அவர் வாய் அடைத்துக் கொண் டது. விம்மிவிம்மி அழத் தொடங்கி விட்டார். விம்மல் பொருமலிடை யேயும் முருகப்பர் கூறிஞர்.

''சீதனம் கொடுக்கப் பண மில்லையே அம்மா! எனது மகளென் ருல் நிறைய எதிர்பார்த்தார்கள். பெற்றவனிடம் பணமாகக் கறந்து விட வேண்டுமென எதிர்பார்க்கும் காலமிது. எப்படியோ உனக்குத் திருமணமாக வேண்டும் என்ற ஆவலில்தான்...... ''

எப்படியோ அந்தத் திருமணம் நிறைவேறிவிட்டது! தங்கத்துக்கும் அருளானந்தத்துக்கும் திருமண மாகியவுடன் கொழும்பில் புதுக் குடித்தனத்தை ஆரம்பிக்க அவர் கள் புறப்பட்டுவிட்டனர். அரு ளானந்தம் காட்டிய அன்பும் பரி வும் அவளுக்கு மிகவும் பிடித்து, வாழ்க்கை மகிழ்வாக அமைந்து விட்டது; தான் பாக்கியசாலிதான் என்ற பெருமை நினைப்பும், நிறை வும் அவளிடம் குடிகொண்டிருந் தன; தகப்பஞர்மீது அவள் சில வேளை அதூசைப்பட்டுக் கொண் டாலும், ஆழமாக இன்றைய சமு தாய நிகழ்ச்சிகளை நோக்கும் போது, ''பாவம்! அப்பா வேறு என்னதான் செய்யக்கூடும்?'' என் றெண்ணி அனுதாபப்பட்டுக் கொள்ளுவாள் தங்கம்.

அருளானந்தம் வெளியே யிருந்து திரும்பி வந்ததுகூட அவளுக்குத் தெரியாது—இன்ன மும் தங்கத்தின் சிந்தனை கலைய வில்லை!

அருளானந்தம் அவள் தோளைப் பிடித்து, முகத்தைத் திருப்பிய போது, தங்கத்தின் கண்களில் துளித்திருந்த நீரைக்கண்டு பத றிப்போய்விட்டான்!

''தங்கம்! ஏன்...? என்னத்துக் காகக் கலங்கியிருக்கிறது கண் கள்?'' அவன் துடித்தான்.

அவள் சுதாரித்துக்கொண்டு அவசரமாகக் கண்ணீரைத் துடை த்துவிட்டு, முறுவலித்தாள் அவ னைப் பார்த்து.

''ஏன் குஞ்சு அழுதனீ?'' தன் னுடன் அணைத்து, இதமாக அவள் முதுகில் தட்டிக் கொடுத்தபடி அருளானந்தம் கேட்டான்.

''அத்தான்!......அப்புவை நினை க்க...'' அவள் குரல் நெகிழ்ந்து கனிந்தது.

''சீ! குழந்தைப் பிள்ளைபோல, அழுகிறதைப் பார்! அழாதே கண்ணே! அவரை நம்மோடு அழைத்துவைத்துக்கொள்வோமே. வயதுபோன காலத்தில் பாவம்

ஏன் தனியாக அவர் கஷ்டப்பட வேண்டும்?" அவள் கண்களை அவன் துடைத்தபடி தேற்றினான்.

"அத்தான்! அப்புவையுமா!" அவள் ஆச்சரியத்திலும் மகிழ்ச்சியிலும் திகைத்தாள்.

"ஓம். அவர் நம்கூடவே இருக்கட்டும். அவர் உன் அப்பா; எனது மாமனார்தானே! ஆயிரம் பொய்யைச் சொல்லி ஒரு திருமணத்தை நிறைவேற்ற வேண்டுமென்பார்கள். உங்கள் அப்பா இந்த அருமைத் தங்கத்தை எனக்குத் தருவதற்காக ஒருபொய்யல்ல ஓராயிரம் பொய் சொல்லியிருக்கலாமே! இல்லையா?" அருளானந்தம் செல்லமாகத் தங்கத்தின் கன்னத்தில் தட்டினான்.

அவள் மகிழ்ச்சிக் கடலில் திளைத்து அவன்நெஞ்சில் சாய்ந்துவிட்டாள்!









சேர்ந்திருந்தோர் பாசம்விட்டு — சூறைக்காற்று சுற்றியடிக்க புகைப்பனியைத் தாண்டிக்கொண்டு அந்தத் தொழிலாளி "பட்டுடுத்த மலை இரண்டு பாதங்கொண்டு நடக்கும்" தன் மனைவியுடன் கண்டிச்சீமை நோக்கிக் கங்காணிப் பதவி ஏற்கச் செல்லுகிறான்.

வழிநடைச் சிந்தாக மீன்பாடும் கிழக்கிலங்கையின் தேன்பாடுங் கவிஞர் இராஜபாரதி யாத்துள்ள இக்கவிதை உள்ளத்தைத் தொடுகின்றது.

# காலெறிஞ்சே நடந்திடடி; கண்டிச்சீமை சேர்ந்திடுவோம்!

"இராஜபாரதி"

1

சிங்காரத் தோட்டம்விட்டுச்
சேர்ந்திருந்தோர் பாசம்விட்டுக்
"கங்காணி" வேலைஏற்கக் — குயிலி!
கண்டிச்சீமை சென்றிடுவோம்

2

ஆத்தோர மரக்கிளையை
ஆட்டுதடி சூறைக்காத்து
பார்த்திருந்த முயல்களெல்லாம் — குயிலி
பாய்ச்சலிட்டே ஓடுதடி,

3

பொல்லாத புகைப்பனியும்
பொருப்பில்விளை யாடுதடி;
நில்லாதே நீசுணங்கிக் — குயிலி!
நீலவானங் கொட்டுமடி.

4

கல்லுமலை நனையமுதல்
கங்கைத்தாய் சீறமுதல்
தங்கத்தமிழ்ச் சிந்துபாடிக் — குயிலி!
தாவுநடை போட்டிடுவாய்

5

பச்சைமலைக் காடிதிலே
பாம்பிருக்கும், வழிமறிக்கும்
மச்சவெறி மனுஷர்கூட்டம் — பறிக்கும்
'மாலை'முன்னே வழிதொலைப்போம்.

6

பட்டுடுத்த 'மலை'இரண்டு
பாதங்கொண்டு நடத்தல்கண்டு
வெட்டைவழி மலைகளெல்லாம் — குயிலி!
விரண்டே யுன்னை நோக்குதடி.

7

அரும்புமுகத் துளியதனை
அரவிந்தத் தேறலென்றே
சுரும்புவந்து மொய்க்குதடி — குயிலி!
சுந்தரக்கை வீசிநட.

8

மின்னலிடை தளர்வதுவும்
மீனிரண்டும் வாடுவதும்
கன்னல்தமிழ்ப் பாட்டுக்களைக் — குயிலி!
காதுகேட்டாற் பறந்துவிடும்.

9

வீரப் புலிச்சோழன்
வெற்றியுலாப் போந்தநாட்டில்
மாரடித்துக் கூலிகேட்க — குயிலி!
மானங்கெட்டு வந்தோமடி,

10

கால்நடையுந் தொலையும்நம்ம
காலமுந்தான் மாறுமடி
தாழ்வறவே உயர்வடைவோம் — குயிலி
தயங்காமல் முன்னேசெல்லு!





ஈழகேசரி வெள்ளிவிழா மலர்

## மட்டுநகர்ச் சிவாலயம்

மட்டக்களப்பிலே கொக்கட்டிச்சோலையூரில் உள்ள தான்றோன்றீசுவரர் ஆலயம். மிகச் சிறந்த வேலைப்பாடுள்ள தேர்கள் இரண்டு இங்குள.

● சந்திரமண்டலத்திலே குடியேறத் தயாராகும் உருசியாவின் 3 கோடி மாணவர் எவ்வாறு கல்விக்கடலைக் கடக்கின்றனர் என்று தாம் நேரிற் கண்டதைத் தக்க புள்ளிவிபரங்களுடன் கருத்தும் சுவையும் கலந்த கட்டுரையாக்கியிருக்கிறார் இலங்கைத் தமிழ் ஆராய்ச்சிததுறை அதிபர்; தமிழ்மறைக்கழகத் தலைவர்; பண்டிதர் இரத்தினம்.



# உருசியாவின் கல்வித்திட்டம்

வித்துவான், பண்டிதர் கா. பொ. இரத்தினம்

கீழை நாட்டியல் ஆராய்ச்சிப் புலவர்களின் இருபத்தைந்தாவது உலகமாநாட்டிற் பங்குகொள்ள மொசுக்கோவுக்குச் சென்றிருந்தபொழுது அங்குள்ள உருசிய - இலங்கை நட்புறவுக் கழகத்தினர் எனக்கொரு தேநீர் விருந்தளித்தனர். இந்த விருந்தில் அக்கழகத்தின் தலைமையுறுப்பினர் பலர் கலந்துகொண்டனர். இவர்கள் இலங்கையைப்பற்றி நன்கு அறிந்திருந்தனர் என்னுடன் கலந்துரையாடினபொழுது அரசியற்றுறையில இவர்கள் தெரிவித்த செய்திகளையும் புள்ளி விபரங்களையும் கேட்டு யான் வியப்படைந்தேன். இலங்கையிலுள்ள அரசியற் கட்சிகள் யாவற்றையும் அவற்றின் கொள்கைகளையும் அவை மக்களிடையே பெற்றுள்ள செல்வாக்கையும் அவர்கள் நன்கு அறிந்திருக்கின்றனர்.

இக்கழகத்தின் உறுப்பினர்களிற் பல பெண்களுமுளர். இவர்களில் சிக்கோரு ஜரீன் என்பவரும் ஒருவர். இவர் ஓர் ஆசிரியை; சில ஆண்டுகளுக்கு முன் இலங்கைக்கு வந்த உருசிய ஆசிரியர் குழுவின தலைமை உறுப்பினரில் ஒருவராகக் கடமையாற்றியவர். இவர் கண்டி நுவரெலியா, யாழ்ப்பாணம் முதலிய இடங்களுக்குத் தாம் சென்று கண்டவற்றை விரிவாக எடுத்துரைதததார். "இந்த ஆசிரியர் குழுவினருக்குக் கொழும்பிலே தமிழ்ப் பல்கலைக் கழகத்தினர் ஒரு விருந்தளித்தனர். அது நினைவிருக்கிறதா என்று கேட்டேன். உடனே அவர் தமிழ்ப் பல்கலைக் கழக இயக்கத்தைப்பற்றியும் விருந்து நடந்த நாவலர்கழகத்தைப்பற்றியும், அருகிலுள்ள கடலைப்பற்றியும் கூறினர். இவையெல்லாம் வியப்புக்குரியனவென்று கூற முடியாது. இலங்கையிலுள்ள பாடசாலைகளின் வகை, ஆசிரியர்கள் பெறும் ஊதியம், கல்வித்திட்டம் முதலியனபற்றி அவர் கூறியன என்னைத் திகைக்கச் செய்துவிட்டன. இங்கு, கல்வித்துறையில் ஈடுபட்டுப் பல

ஆண்டுகள் ஆசிரியர்களாகக் கடமையாற்றியவர்கள்கூட அவரைப்போலப் பரந்த அறிவுடையவர்களா என்பது ஐயத்துக்கிடமானது. அவரிடம் சோவியத்து உருசியாவின் கல்வி முறை; கல்வி நிலையங்கள் முதலியனபற்றிப் பல செய்திகளை உசாவி அறியும் நல்வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. வாழ்வின் பெரும்பகுதியினைக் கல்வி நிலையங்ளிற கடமையாற்றுவதிற் கழித்தேனாகலின், உருசியாவின் கல்வித் துறையினை ஆராய்ந்தறியவேண்டும் எனும் ஆர்வம் எனக்கு இயல்பாகவே இருந்தது.

அவர் என்னைச் சில பாடசாலைகளுக்கு அழைத்துச் செல்வதாகக் கூறினார். ஆனால் நான் சென்றகாலம் பாடசாலைகள் யாவற்றுக்கும் விடுமுறை காலமாகையால் பாடசாலைகள் பணியாற்றுவதைப் பார்க்க முடியாமற் போய்விட்டது.

உருசியாவிலுள்ள கல்வி நிலையங்கள் யாவும் அரசாங்கத்துக்கே உரியன. எனினும் எல்லாக் கல்வி நிலையங்களும் பெரும்பாலும் உள்ளூர்ச் சங்கங்களின் மேற்பார்வையில் நடைபெறுகின்றன. இச்சங்கங்களிற் பற்பல அமைப்புக்களின் பிரதிநிதிகள் உறுப்பினராயிருக்கின்றனர் பெற்றோர்களின் பிரதிநிதிகள் மட்டுமன்றி ஆசிரியர்களின் பிரதிநிதிகளும் தொழிற் சங்கங்கள், உள்ளூர் ஆட்சி மன்றங்கள் முதலியவற்றின் பிரதிநிதிகளும் உளர்.

எல்லாக் கல்வி நிலையங்களிலும் இலவசக் கல்வி அளிக்கப்படுகிறது. கிராமங்களில் ஏழாண்டும் நகரங்களில் பத்து ஆண்டும் கட்டாயக் கல்விக்காலமாகும். எனினும் இப்பொழுது கிராமங்களிலும் 10 ஆண்டுக் கட்டாயக் கல்வித்திட்டம் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டுளது. ஆரம்ப பாடசாலைக் கல்வி ஏழு வயதில் தொடங்குகிறது. பல குடும்பங்களில் ஏழு வயதுக்கு மேற்பட்டோர் யாவருமே கல்வி நிலையங்களிற் கற்போராக இருப்பர். சிறுவர்கள் ஆரம்ப பாடசாலைகளிலும், இளைஞர்கள் கல்லூரிகளிலும், பெற்றோர் மாலைப் பாடசாலைகள், கடிதமுறைப் பயிற்சி நிலையங்கள் என்பவற்றிலும் கற்பவர்களாயிருப்பர்.

“யாதானு நாடாமால்
ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாதவாறு”

எனும் தமிழ் மறைக்கு இன்று உருசியா எடுத்துக்காட்டாக விளங்குகிறது. எத்தொழிலில் ஈடுபட்டிருந்தாலும், எந்த வயதினராயிருந்தாலும் படித்தற்கு அங்கு பல நிலையங்கள் உண்டு. படிப்பதைத் தூண்டும் சூழ்நிலையும், படிப்பினால் பயன்பெறும் வாய்ப்புகளும் அங்கு உள. சோவியத்து ஒன்றியத்திலுள்ள 20 கோடி மக்களில் 5 கோடி மக்கள் - காற்பங்கினர் - கல்வி கற்பதில் ஈடுபட்டுள்ளனர். எழுத்தறிவில்லாதவர் இப்பொழுது உருசியாவில் இல்லை எனலாம்.

ஏறக்குறைய மூன்றுகோடி மாணவர்கள் அங்கு உளர். ஆசிரியர்களைப் பயிற்றும் பயிற்சிக் கல்லூரிகள் பல்கலைக் கழகங்கள் முதலியன நாட்டின் பல பகுதிகளிலுமுள. அங்கே இருபதுலட்சம் ஆசிரியர்கள் இருக்கின்றனர். இவர்களில் 70 நூற்றுவீதத்தினர் பெண்கள் என்பது குறிப்பிடத்தக்கது அங்கே பதினேழு மாணவருக்கு ஓர் ஆசிரியர் உளர். பெரிய பிரித்தானியாவில் 30 மாணவர்களுக்கு ஓர் ஆசிரியரும், அமெரிக்க ஐக்கிய இராச்சியங்களில் 82 மாணவர்களுக்கு ஓர் ஆசிரியருமேயுளர்.

சார் மன்னர் காலத்திற் பாடசாலைப் பாடங்கள் பெரும்பாலும் உருசிய மொழியிலேயே கற்பிக்கப்பட்டன. ஆனால் இப்பொழுது அறுபத்தாறு மொழிகளிற் கற்பிக்கப்படுகின்றன. எல்லாருக்கும் எல்லாப் பாடங்களையும் தத்தம் தாய்மொழியிலாகக் கற்கும் உரிமையுண்டு. மேல்வகுப்புகளில் தாய்மொழியுடன் பிறமொழியொன்றும் கற்பிக்கப்படுகின்றது.

மாணவர்களுக்குத் தொழினுட்பக் கல்வியினை அளிப்பதில் உருசியா உலகத்தின்



முன்னணியில் நிற்கிறது. மொசுக்கோ நகரத்தில் மின்னியல், தச்சுவேலை, பொறியியல் என்பவற்றோடு தொடர்புடைய 500 வேலைக்களங்கள் உள. 1957-இல் முப்பத்தையாயிரம் மாணவர்கள் பயிற்றப்பட்டனர். ஏறக்குறைய 200 உயர்தர பாடசாலைகளில் மாணவர்கள் உயர்தரக் கல்வியையும், தாம் தாம் விரும்புந் தொழில் ஒன்றையுங் கற்கின்றனர். கிழமையிற் பாடசாலை நடக்கும் ஆறு நாட்களில் மூன்று நாட்களை அவர்கள் கைத்தொழிற்சாலைகளிற் றொழில் பயில்வோராகக் கழிக்கின்றனர். கிராமங்களிலுள்ள உயர்தர வகுப்பு மாணவர்கள் மாரிக்காலத்தில் கிழமைக்கு இருநாள்கள் கம விளைபொருள் உற்பத்தியினைப் பற்றிக் கற்கின்றனர்; ஆண்டின் ஏனைய காலப்பகுதிகளிற் பெரும்பாலும் கமப் பண்ணைகளிலும், வயல்களிலும் வேலை செய்து பழகுகின்றனர்.

மாணவர்கள் எட்டுக் கல்வியுடன் தம் வாழ்வுக்கேற்றதொரு தொழிலைப் பயில்வதற்கு வாய்ப்பளிக்கும் முறையில் கல்வி நிலையங்கள் அமைதல் வேண்டும். எட்டுக் கல்வியில்லாத தொழிற்பயிற்சியும், தொழிற் பயிற்சியில்லாத எட்டுக்கல்வியும் நற்பயனை விளைப்பதில்லை. இந்த உண்மையினை உணர்ந்து உருசிய அரசாங்கம் எட்டுக் கல்வியினையும் தொழிற்கல்வியினையும் இணைத்து ஒரு முழுமையான கல்வி முறையினை வகுக்கும் பணியில் முனைந்துள்ளது.

உயர்தரக் கல்வியினைப் பெறமுடியாது, பல்வகைத் தொழிலிலீடுபடுவோர் ஓய்வு நேரத்திற் படித்துப் பயன்பெறுதற்கு உருசியாவில் மாலைப் பாடசாலைகள் நிறுவப்பட்டுள்ளன. இப்பாடசாலைகளின் உதவியாலும், கடிதமுறைப் பயிற்சி நெறிகளாலும் பல்லாயிரக்கணக்கான தொழிலாளிகள் உயர்தரக் கல்வியைப் பயிலுகிறார்கள். பாடசாலைப் படிப்பை முடித்துத் தொழில்களிலீடுபட்ட எவரும் இப்பாடசாலைகளிற் சேர்ந்து கற்கலாம். ஏறக்குறைய இருபது லட்சம் தொழிலாளிகள் இவ்வாறு கற்கின்றனர். இவர்கள் தொழிற்சாலைகள், கூட்டுக் கமப் பண்ணைகள், அலுவலகங்கள் முதலியவற்றைச் சேர்ந்தவர்களாவர். இப்பாடசாலைகளிற் சேர்ந்து கற்போர் ஏழாண்டுப் படிப்பினையோ, பத்தாண்டுப் படிப்பினையோ முடித்துச் சான்றிதழ்கள் பெறுகின்றனர். இவர்கள் படிப்பதற்கு வேண்டிய எல்லா வாய்ப்புக்களையும் அரசாங்கம் அளிக்கிறது. 18 வயதுக்குட்பட்டோருக்கு நாடோறும் வேலை செய்யும் நேரம் குறைக்கப்பட்டுளது. இரவில் வேலை செய்யாமற் பகலில் மட்டுமே இவர்கள் வேலை செய்வர். பரீட்சைக்காலங்களில் ஆண்டுக்குரிய ஓய்வு விடுதலையை இவர்கள் பெற்றுப் பாடங்களைப் படிக்கலாம். கடைசிப் பரீட்சைக்குத் தோற்றும்பொழுது மேலதிக விடுதலை சம்பளத்துடன் கொடுக்கப்படுகின்றது.

தொழிலாளர்களை நுட்பத் தொழிலாளராக்குவதற்கும் தொழிலொதுக்கப் பாடசாலைகள் பல நிறுவப்பட்டுள. சில தொழிற்சாலைகளில் உள்ள தொழிலாளிகளில் அரைப்பங்குக்கு மேற்பட்டோர் இப்பாடசாலைகளிற் கற்றுநுண்ணறிவு பெறுகின்றனர். இப்பாடசாலைகளில் 500 வகையான தொழில்கள் கற்பிக்கப்படுகின்றன. அரசாங்கம் தொழிலாளரைத் திறமையுள்ளவர்களாக ஆக்குதற்கு ஆண்டொன்றுக்கு 200 கோடி உருபிள்களைச் செலவிடுகிறது. (இரண்டு உருபிள் = ஒருருபா).

விஞ்ஞானத்துறையில் நிபுணர்களைப் பெருக்குவதில் உலகநாடுகளில் உருசியா முதலிடம் பெற்றுள்ளது. 1957 இல் இரண்டிலட்சம் இளைஞர்கள் விஞ்ஞான நிபுணர்களாகப் பயிற்றப்பட்டனர். இவர்களுள் எண்பதாயிரம் பேர் எந்திரிகளாவர். உலகிலே மிகத் தொகையான எந்திரிகளை உருசியா பயிற்றுகிறது.

இப்பொழுது உருசியாவில் 39 பல்கலைக் கழகங்கள் உள. இவற்றிலே இரண்டிலட்சம் மாணவர்கள் பயில்கின்றனர். பல்கலைக் கழகக்கல்வி தாய்மொழிகளிலும் உருசிய மொழியிலும் போதிக்கப்படுகிறது. மொசுக்கோப் பல்கலைக் கழகமே மிகப

பெரியது. 15000 மாணவர்களும் 2450 ஆசிரியர்களும் இங்கே உளர். பன்னிரு கல்வித்துறைகள் இங்குண்டு. இலெனின் கிருத்து பல்கலைக் கழகத்தில் பதினுயிரம் மாணவர்களுளர்.

மாணவர்களிற் பெரும்பான்மையினர் அரசாங்கத்திடமிருந்து பணஉதவி பெறுகின்றனர். வெளிக்கள வேலை செய்யும் பொழுது மாணவர்களுக்குச் சம்பளம் கொடுக்கப்படுகிறது. அரைப்பங்குக்கு மேற்பட்ட மாணவர்கள் விடுதிகளில் வசிக்கின்றனர்.

தொழிலாளிகளுக்கும் கல்லூரிப் படிப்பினைப்பெற நல்ல வாய்ப்புண்டு. ஒன்பது மாலைக் கல்லூரிகளும் 24 கடித முறைப் பயிற்சிக் கல்லூரிகளும் அங்குள இவற்றை விடக் கல்லூரிகளில் மாலையிற் கற்பிக்கும் 240 நிலையங்களும், 430 கடித முறைப் பயிற்சி நிலையங்களுமுள. பலதிறப்பட்ட கடிதமுறைப் பயிற்சிக் கல்லூரிகள் உருசியாவிலுண்டு. கல்லூரிகள், பல்கலைக் கழகங்களிலுள்ள மாணவர்களில் 43 நூற்றுவீதமானோர் தொழில் நேரத்தின் பின்னரே கல்வி கற்கின்றனர். இவ்வாறு கற்கும் மாணவர்களுக்கு ஓய்வு வசதியும், பண உதவியும், பிறவாய்ப்புக்களும் அரசாங்கத்தால் அளிக்கப்படுகின்றன.

உருசியாவில் இப்பொழுது மிகவும் விருத்தியடைந்து வருவன விடுதிப் பாடசாலைகளாகும். 1956 இல் உயர்தரக் கல்வித்துறையிற் பரிசோதனைக்காக இவை நிறுவப்பட்டன. பெற்றேர் விரும்பினல் இப்பாடசாலைகளுக்குத் தங்கள் பிள்ளைகளை அனுப்பலாம். இங்கே பல தொழில்நுட்பக் கல்வியினைப் படிக்கவும் வாய்ப்புண்டு. மாணவர்களுடைய உடல், உளம் என்பனவற்றை நன்முறையில் ஓம்பும் சூழ்நிலையினை இவை உடையனவாக அமைக்கப்பட்டுள. இப்பாடசாலைகளிற் பயிலும் மாணவர்களின் பெற்றேர் படிப்புச் செலவினைக் கொடுக்க வேண்டும். குறைவான வரும்படியுள்ள பெற்றேர் பணங்கட்ட வேண்டியதில்லை. ஏனையோர் தம்வரும்படிக்கேற்பச் செலுத்த வேண்டும். உயர்வருமானம் உள்ளவர்கள் முழுச்செலவையும் கொடுக்கவேண்டும். இப்பொழுது இத்தகைய பாடசாலைகளில் 500 உள. இவற்றில், 18,000 மாணவர்கள் உளர். ஏழாண்டுத்திட்டம் 1965 இல் முடியும்பொழுது 25 இலட்சம் மாணவர்கள் படிப்பதற்கு வேண்டிய விடுதிப் பாடசாலைகள் நிறுவுதற்கு அரசாங்கம் திட்டமிட்டுளது. 1965 இல ஆரம்ப பாடசாலைகளிலும் உயர்தரப் பாடசாலைகளிலுமுள்ள மாணவர்களின் தொகை 4 கோடியாகும் எனவுங் கணித்துளர். இந்த ஏழாண்டுத் திட்டக் காலப்பகுதியில் 23 இலட்சம் விஞ்ஞான நிபுணர்கள் கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் பயிற்சியினை முடிப்பர். விசேட உயர்தரப் பாடசாலைகளில் முழுநேரத் தொழிலாளிகள் உட்பட 40 இலட்சம் மாணவர்கள் பயிலுவார்கள்.

கல்வியே ஒருநாட்டின் முன்னேற்றத்துக்கு வித்தாக உளது என்ருர் கம்பர். இக்கல்வியினைத் திட்டமிட்டு வளர்ப்பதில் உருசியா உலகநாடுகளின் முன்னணியில் விளங்குகிறது. உருசியாவின் கல்வித் திட்டங்களில் உலகத்தவர் கருத்துக்கொள்ளத்தக்க பல உண்மைகள் இருக்கின்றன. ஏட்டுக் கல்வியையும் தொழிற்பயிற்சியையும் நன்கு பிணைத்தார் உலகநாடுகள் யாவும் பலதுறைகளில் வளம் பெறலாம்







''கலைகள் மனிதனைத் தேவனுக்கும் அமுதசஞ்சீவி'' என்று திருக்குறள்வடிவிலே சுருக்கமாக விளக்கும் ''மகரம்''—திரு கே. ஆர். கலியாண ராமன் தமிழகத்தேடுகளில் நிறைய எழுதுபவரெனினும் தினகரன்' முதலிய ஈழத்திதழ்களிலும் அடிக்கடி அவரது கைவண்ணம் காணலாம். சிந்திக்கவைக்கும் சீரியதோர் பண்பமைந்த எழுத்தாளர்.

# கலை

'' மகரம் ''

மனிதனுக்கும் மிருகத்துக்கும் எத்தனையோ ஒற்றுமைகள்! வேற்றுமைகள் மிகச் சிலவே. அந்த வெகுசில வேற்றுமைகளில் ஒன்றுதான் கலையறிவு. பாம்பும் பசுமாடும் ஓரளவு இசையில் ஈடுபடும் குணம் பெற்றிருந்தால் அதற்குக் காரணம் பரமசிவனேடும், பரந்தாமனேடும் அவைகளுக்குள்ள தெய்விகத் தொடர்பே காரணம். சித்திரத்தைக்கண்டு சிங்கம் சிரிக்காது. பெண்களின் நடைக்கும், விழிக்கும் சாயலுக்கும் உபமானமாகும் அன்னமும், மானும், மயிலும் ஆடலழகி ஒருத்தியின் பாதத்தைக் கண்டு 'இதோ நம்போன்ற தன்மைகள் பெற்ற கலைமங்கை', என்று நினைத்து மகிழத்தெரியாதவை! குயிலைக் கேட்டு நாம் குதூகலமடையலாம். நம்மில் தேவகான மெழுப்பும் தேர்ந்த இசைக் கலைஞர்களின் சாரீரத்துக்கு முன் குயில்கள் சரணுகதி யடைந்ததாக நாம் கதைகளில் கூடக் கேட்டதில்லை. மனிதனின் கற்பனை-அதுதானே கலைஞனின் சொற்களுக்கு ஒரு சொக்கும் தன்மையை ஊட்டுகிறது? அவ்வப்போது மற்ற ஜீவராசிகளை மனிதரோடு சேர்த்திருக்கலாம். ஆனல் கலைகளை உணர்ந்தனுபவிக்கும் மனிதன் தேவனுகிவிடும் போது மீண்டும் இடைவெளி பெரிதாகி விடுகிறது.

## அட்டைப்பட விளக்கம்

''அண்டிப் பிழைக்கும் நம்மைஆடு—இவை
ஆதரிக்க வேணுமடி பாப்பா''
கண்டும் கனியும் மலர்க்கள்ளும்—இந்தக்
கவியினிற் கண்டுணர்ந்த ''சர்மா''
ஆயனின் வேய்ங்குழலி னூடே—அந்த
அமுதக் கவியினிமை பெய்தான்
தோயுமொரு தூரிகையின் வண்ணம்—உயிர்
துள்ளும் அழகொளிரச் செய்தான்.

பகுத்தறிவில் முதிர்ந்த ஒழுக்கத்துக்கும், சமயத் தடிப்பில் எழுந்த ஒழுக்கத்துக்கும் உள்ள வேறுபாட்டை இக்கதையிலே ஆராய்கிறார் புதுமைப் புரட்சிக் கருத்துக்களைத் துணிகரமாக வெளியிடும் சிறந்த சிறுகதை எழுத்தாளர் வரதர். அண்மையில் வெளிவந்து பாராட்டுதல்பெற்ற இவரது "கற்பு" என்னும் சிறு கதையினது புதுமைக் கருத்தின் தொடர்பாகவும் அக்கருத்தையும் மிஞ்சிய புரட்சிகரமாகவும் "கதையின் கதை" எழுகின்றது. விவாதத்துக்குரிய நல்ல கருத்து!



# கதையின் கதை

— வரதர் —

எழுத்தாளர்கள் தங்கள் சிறு கதைகளைப் படைப்பதற்குப் பொதுவாக இரண்டு காரணங்கள் உண்டு. பத்திரிகை ஆசிரியர்களின் கட்டளையைத் தட்டமுடியாமல் நிர்ப்பந்தத்தின் பேரிலோ, ஏதாவது ஒன்றை எழுதவேண்டுமென்ற ஆசையினாலோ எழுதுவது ஒரு வகை. ஏதாவது ஒரு நிகழ்ச்சியை அனுபவித்தோ, பார்த்தோ, கேட்டோ— அதனால் ஏற்படும் மன உறுத்தலினால் எழுதுவது மற்றொரு வகை. இந்த இரண்டாவது வகைக் கதைகள் எப்பொழுதும் நன்றாகவே அமைந்து விடுகின்றன.

என்னுடைய அனுபவம் இது; சிலவருடங்களுக்கு முன்னால் 'கற்பு' என்ற பெயரில் நான் ஒரு சிறு கதை எழுதினேன். 'உள்ளத்தால் விரும்பாத ஒரு பெண்ணின் உடலை, முரடர்கள் பலாத்காரம் செய்துவிட்டதனால் அவளுடைய கற்பு அழிந்து போகவில்லை' என்ற கருத்தை வைத்துக்கொண்டு அந்தக் கதையை எழுதினேன். அதற்குத்தான் எவ்வளவு பாராட்டுக்கள் கிடைத்தன! வாசகர்கள் ஒருபுறமிருக்க, பல எழுத்தாள நண்பர்களே அந்தக் கதையைப் பாராட்டி எழுதினார்கள்.

ஆனால் —

இந்தப் பாராட்டுக்கள் எல்லாவற்றையும்விட, மாதரசி என் தோழி — தோழிகளான பெண்களைச் 'சகோதரி' என்று எழுதுகிற ஒரு போலிக் கௌரவம் எதற்கு?— அவள் எழுதிய பாராட்டுக் கடிதம் தான் எனக்கு மிகவும் பிடித்தது; மிகவும் திருப்தியளித்தது; மிகவும் பெருமையளித்தது. ஏனென்றால்—

அந்தப் பிரச்னையையே என் உள்ளத்தில் ஏற்றி வைத்தவள் அவள்தான்!



அது மட்டுமல்ல மற்றவர்களெல்லாம் அந்தக் கதையைவாசித்து அதிலுள்ள இலக்கிய நயத்தைச் சுவைத்துப் பாராட்டுரை தந்தார்கள். ஆனால் மாதரசியோ —

அவளுக்கு அந்தக் கதை வாழ்வையே அளித்தது!

* * * *

1954-ம் ஆண்டு ஆவணி மாதத்தில் ஒருநாள் நான் என்னுடைய வேலைகளெல்லாவற்றையும் தொப்பென்று போட்டுவிட்டுக் கொழும்புக்கு ஓடினேன். ஏனென்றால் சிங்கப்பூரிலிருந்து 'காதேச்' என்ற கப்பல் வருகிறது. அதில் என்னுடைய மைத்துனர் ஒருவர் வருகிறார். வருகிறவர் சும்மா மைத்துனராக இருக்கக்கூடாதா, என்னுடைய 'வீட்டுக்காரி'யின் கூடப் பிறந்த அதிர்ஷ்டசாலி அவர். ஆகவே அவரைக் கப்பலிலிருந்து கவனமாக இறக்கிப் பத்திரமாக வீட்டுக்குக் கொண்டுவந்து சேர்க்க வேண்டுமென்று அவருடைய சகோதரி என்னுடைய பாயை விரித்துவிட, நான் பறந்துபோய்ச் சேர்ந்தேன்.

கொழும்பிலே, கப்பலுக்குப் போவதற்கு வேண்டிய அனுமதிச் சீட்டுக்களையெல்லாம் வாங்கிக்கொண்டு அதிகாலை 7 மணிக்கே 'லோஞ்'சில் ஏறிக் கப்பலுக்குப் போய்ச்சேர்ந்தேன்.

சேர்ந்தேனா —

வாசலில் நின்ற யாரோ ஒரு பெண் — தமிழ்ப்பெண் என்னையே கூர்ந்து கவனிப்பதைக் கண்டேன்.

'எங்கேயோ பார்த்தமாதிரியிருக்கிறதே' என்று நான் ஒரு கணத்துக்குள் சுழியோடிக்கொண்டிருக்கையில் அவள் கண்டுபிடித்துவிட்டவள்போல மெல்லச் சிரித்து 'நீங்கள் ... ... என்றாள்.

எனக்கும் வந்துவிட்டது.

"ஓமோம். நான்தான் ... நீங்கள் மாதரசிதானே?" என்றேன்.

அவளுடைய முகத்தில் தோன்றிய மெல்லிய மலர்ச்சியும் தலையசைப்பும் அவளை அவள்தான் என்று எனக்குத் தெரிவித்த போதிலும், என்னுடைய மனத்திலே ஒரு அனுதாப — ஏமாற்ற — ஏக்க உணர்ச்சி நிறைந்து கனத்தது.

பத்து வருடங்களுக்கு முன்னால் சிங்கப்பூர் மாப்பிள்ளையைத் திருமணம் செய்துகொண்டு இவள் அங்கே போனபோது, இவளிடமிருந்த செழிப்பும், குறுகுறுப்பும், கலகலப்பும் இப்போது எங்கே போய்விட்டன? பத்து வருடங்களும் இவள் வாழ்க்கையை அனுபவிக்கவில்லையா? அந்த வாழ்க்கையே இவளை உமிழ்ந்துவிட்டதா?

வாழ்க்கையின் இன்பங்களையெல்லாம் அள்ளி அனுபவித்துவிட வேண்டுமென்ற இவளுடைய 'அந்த' முகத்தின் தோற்றம், இப்போது ஏக்கத்தையும், துயரத்தையும், துறவு மனப்பான்மையையும் பிரதிபலிப்பதேன்?

ஓர் இமைப்பொழுதில் என்னுடைய நெஞ்சிலே தோன்றிய

உணர்ச்சிகளை மறைப்பதற்காக என் உதடுதளைச் சிரிப்பதுபோல நெளித்துக்கொண்டு, "தனியாகத்தான் வந்திருக்கிறிரா?" என்று கேட்டேன்.

"ஓமோம்; ...... இவளை மட்டும் கூட்டிக்கொண்டு வந்தேன்"என்று பக்கத்திலிருந்த சீனச் சிறுமியைக் காட்டினாள் மாதரசி.

மலாயாவிலிருந்து வந்த சில யாழ்ப்பாணத்தவர் வீடுகளில் சீனப் பிள்ளைகள் இருப்பதை நான் கண்டிருக்கிறேன். அந்தப் பிள்ளைகளிற்சில, அந்தக் குடும்பத் தலைவருக்கும் யாரோ ஒரு சீனப் பெண்ணுக்கும் பிறந்தனவென்றும் கேள்விப்பட்டிருக்கிறேன்.

ஒருவேளை —

மாதரசியின் கணவருடைய வாழ்க்கையில் ஏற்பட்ட இத்தகைய ஒரு களங்கந்தான் — இவளுடைய இப்போதைய பொலிவிழந்த தோற்றத்துக்கும் காரணமாக இருக்குமோ—இவற்றை இவளிடமே எப்படிக் கேட்பது?

"நல்லது, நான் என்னுடைய மைத்துனர் ஒருவரைச் சந்திக்க வேண்டும் ... ... உங்களைக் கூட்டிக்கொண்டுபோக யாராவது வந்திருக்கிறார்களா?".

"ஓமோம். மாமா வந்திருக்கிறார். உள்ளே 'கபி'னிலிருந்து பெட்டிகளை எடுத்துக் கூலியாளிடம் கொடுத்துக்கொண்டிருக்கிறார்".

"அப்படியானால் சரி; ஊரிலே சந்தித்து ஆறுதலாகக் கதைப்போம்" என்று நான் சொல்லிவிட்டு என்னுடைய மைத்துனரைத் தேடிக் கொண்டு போனேன்.

* * * * *

மாதரசி எங்களூர்ப் பெண்தான். எனக்கு மிகவும் பழக்கமானவள்; என்னுடைய தோழி. இன்று எனக்கு மனைவியாக வந்துவிட்டவளை நான் காதலிக்கத் தொடங்கு முன்னரே, மாதரசி என்னுடைய தோழியாக இருந்தாள், சிறுவயது முதலே பழகியதாலோ, அல்லது வேறு எந்தக் காரணத்தாலோ எங்களுக்குள் 'காதல்' வரவில்லை. சாதாரண 'சிநேகிதன்—சிநேகிதி'யாக இருந்தோம். அவளுடைய குடும்பத்துக்கும் என்னுடைய குடும்பத்துக்கும் சமூகத்தில் நிறைய ஏற்றத்தாழ்வுகள் உண்டு. அந்த ஒரு காரணந்தான் எங்களுடைய மனத்திலே காதலை விதைக்காமல் இருந்திருக்கக் கூடுமென்று எனக்குத் தோன்றுகிறது. பள்ளிக்கூடத்தில் படிக்ரும்போது எங்களுக்குள் தோன்றிய நட்பு, வளர்ந்து பெரியவர்களாக — பருவமடைந்தவர்களாக மாறியபோதும் தொடர்ந்தது. சிறுவயதில் மற்றவர்களுடைய பரிகாசங்களுக்காகச் சிறிது வெட்கப்பட்டதுண்டு. பெரியவர்களானபின் சிலருடைய நச்சுக் கதைகளுக்காக ஒளிந்து மறைந்து நடந்ததுண்டு. இதெல்லாம் பழங்கதைகளாகிவிட்டன.

அவளுடைய சொந்தத்துக்குள் மலாயாவில் உத்தியோகம் பார்த்துக்கொண்டிருந்த கனகசபை ஒரு நாள் திடீரென்று ஊருக்கு வந்தார். அவர் வருவதற்கு முன்பே



பெரியவர்களுள் பேச்சு வார்த்தைகள் நடந்திருக்க வேண்டும். வந்து ஒருவாரங்கூட ஆகவில்லை. பொன்னுருக்கு, நொத்தீசு என்று தொடங்கி, ஒரு மாதத்துக்குள் திருமணமே நடந்துவிட்டது! அதன் பிறகு நான் அவளோடு அதிகம் வைத்துக் கொள்ளவில்லை. என்னதான் நல்ல நண்பர்களாக நாங்கள் இருந்தபோதிலும், தன்னுடைய 'மனைவியின் நண்ப'னை எந்த ஒரு வாலிபனும் உள்ளத்தால் வரவேற்கமாட்டானென்று எனக்குத் தெரியும். இருந்தாலும் கனகசபையைக் கொஞ்சம் அவதானித்தேன். நான் பார்த்தமட்டில் மிக நல்லவர்; பண்புள்ளவர்என்று தோன்றிற்று. அதுவே என் மனத்துக்கு மிகவும் ஆறுதலாக இருந்தது.

இதன்பிறகு அவள் மலாயாவுக்குப் போய்விட்டாள். என்னுடைய உள்ளத்திலும் ஒருத்தி ஒண்ட இடம் கேட்டு, பிறகு அதையே தன்னுடைய சர்வாதிகாரபீடமாக அமைத்துக் கொண்டாள்.

மாதரசி அங்கேதான்.

நான் இங்கேதான்.

இப்போது சுமார் பன்னிரண்டு வருடங்களுக்குப் பிறகு அவளை மீண்டும் சந்தித்திருக்கிறேன் — இந்தமாதிரியான தோற்றத்தில்.

* * * * *

என்னுடைய மைத்துனரை அழைத்துக்கொண்டு நான் ஊருக்கு வந்துவிட்டேன். மாதரசியும் வந்துவிட்டாள். இரண்டு நாட்கள் ஆவலோடு போய் அவளைப் பார்த்தேன். ஆனால் மனம் விட்டுக் கதைக்க முடியவில்லை. என்னிடம் கொட்டித் தீர்ப்பதற்கு அவளுடைய நெஞ்சில் ஏதோ இருக்கிறதென்பதை உணர முடிந்தது. மூன்றாவது தரம் போனபோதுதான் அவளை 'விசாரிக்க' வந்தவர்களின் வேலை முடிந்திருத்தது. தனியாக அவளோடு கதைக்கும் சந்தர்ப்பம் வாய்த்தது.

அவள் சொன்னது —

அவளுடைய நெஞ்சின் கலக்கத்தை என்னுடைய நெஞ்சு உணர்ந்தது. உணர்ந்து அதுவும் கலங்கிற்று. அவளுக்கு ஏற்பட்ட நிலையை விட மோசமான வேறு ஒரு நிலை பெண்களுக்கு ஏற்பட்டு விட முடியாது.

அவளுடைய கதை இது.

மாதரசிக்கு வாய்த்த கனகசபை பெரும்பாலும் என்னைப் போலவே இருப்பாராம். — அதாவது அவளுடைய அபிப்பிராயப்படி மிக நல்லவராம். ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் எனக்கும் அவருக்கும் வேறுபாடு உண்டு. நான் ஒழுக்கத்துக்கும் பகுத்தறிவுக்கும் மதிப்புக் கொடுப்பவன். அவரோ ஒழுக்கத்துக்கும் மதத்துக்கும் மதிப்பளிப்பவர். பிறநாடுகளிற் போய் நீண்டகாலம் வாழ்பவர்களில் இரண்டு விதமானவர்கள் உண்டு. தாங்கள் சென்று வாழும் நாட்டினரோடு பழக்க வழக்கப் பண்பாடுகளால் ஒன்றிக் கலந்து விடுகிறவர்கள் ஒருவகை. அப்படியின்றித் தங்கள் தாய் நாட்டின் பண்

பாட்டை இன்னும் இறுக்கமாகப் பிடித்து வைத்துக்கொண்டிருப்பவர்கள் இன்னொரு வகை. இவர்களுடைய தாய்நாடு இவர்களை விட்டுப் பிரிந்த இருபது வருடங்களுக்குப் பின்னால் எவ்வளவோ மாறுதல்களை யடைந்திருக்கும். ஆனால் இவர்களோ அந்த இருபது வருடங்களுக்கு முந்திய நிலையிலேயே புது நாட்டில் வாழ்ந்துகொண்டிருப்பார்கள்.

கனகசபையைப் போன்ற ஒரு இளைஞன் ஒழுங்காகக் கோயிலுக்குப் போவதையும், ஆசார அனுட்டானங்களைக் கிரமமாக அனுட்டிப்பதையும் இன்றைய யாழ்ப்பாணத்தில் காண்பது மிக அரிது. ஆனால் கனகசபை காலையில் எழுந்து குளித்துவிட்டு பூசை அறையில் (பூசை அறை ஒன்று அவர்கள் வீட்டில் இருக்கிறது!) தியானிப்பதும், வெள்ளிக்கிழமைகளில் அங்கேயுள்ள சுப்பிரமணியர் கோயிலுக்குப் போவதும், மற்ற விரதங்களை அனுட்டிப்பதும்—இப்படி மிக ஒழுங்கான கடவுள் பக்தராக இருந்தார்.

மாதரசிக்கு முதலில் இதெல்லாம் 'கட்டுப்பெட்டி'த் தனமாகத் தோன்றிற்று. ஆனால் அவற்றின் மூலம் அவர் மனத்திலே சாந்தி நிலவுவதையும், மனத்திலே துன்பம் சூழ்ந்த வேளைகளி லெல்லாம் பூசையறையில் சிறிதுநேரம் தியானிப்பதன்மூலம் அவர் மன ஆறுதல் அடைவதையும் கவனித்த பிறகு, அவளும் அந்தப்பூசையறைக்கு மதிப்பளிக்கப் பழகிக் கொண்டாள்.

மலாயாவில் 'சுங்காய் சிப்புட்' என்ற இடத்தில் புகைவண்டி நிலையத்தில் கனகசபைக்குவேலை. நல்ல ஊதியம் கிடைத்தது. வசிப்பதற்கு எல்லா வசதிகளும் பொருந்திய வீடு. நல்ல சுற்றுடல். இங்கே—யாழ்ப்பாணத்தில்—எங்கள் கிராமத்தில் ஆழக்கிணற்றிலே தண்ணீர் அள்ளிக்களைத்த மாதரசிக்கு அங்கே வீட்டுக்குள் குழாயைத் திறந்தால் தண்ணீரும் வெந்நீரும் கொட்டிக்கொண்டிருந்தன. 'சுவிச்'சைப் போட்டால் மின்சார தீபங்கள் பிரகாசித்தன; விசிறிகள் சுழன்றன. —இவை யெல்லாவற்றையும்விட, கனகசபை அவள் மீது உயிராக இருந்தார். பெற்றோரையும் உற்றோரையும் வெகு தூரத்தில் விட்டுவந்திருக்கிறோமென்ற ஒரு நினைப்பைத்தவிர மற்றெல்லா வகையாலும் மாதரசி மிக்க மகிழ்ச்சியோடு வாழ்வை ஆரம்பித்தாள்.

சுமார் இரண்டு வருடங்கள் இன்பமாகக் கழிந்துவிட்டன.

ஒருமுறை ஊருக்குவந்து பெற்றோரைப் பார்த்துக்கொண்டு போகலாமென்று மாதரசி நினைத்தாள். கனகசபை அப்போது தமக்கு லீவு கிடைக்காதாகையால் மாதரசியை மட்டும் தனியாக அனுப்பிவைக்க எண்ணினார். ஆனால் அவள் தனியாகப் போவதற்கு விரும்பாமலிருக்கவே, இன்னும் ஆறு மாதங்கள் கழித்து இருவருமே புறப்படலாமென்று நினைத்தார்கள்.

பேதை, அவள் தனியாகவேனும் உடனே புறப்பட்டிருக்கக்கூடாதா?



ஆறுமாதங்களுக்கிடையில்—

எவ்வளவோ மாற்றங்கள்! மலாயாவுக்கும் இலங்கைக்கும் தொடர்பே அறுந்துவிட்டது. யப்பானியர் மலாயாவில் அகலக் காலை வைத்துவிட்டனர்.

இராணுவ ஆட்சியின் கொடுரங்கள் மலாயா எங்கும் தலைவிரித்தாடின. கீழ்ப்படியாமை, உளவு சொல்லல் என்ற குற்றங்களின் பெயரால் அநேக அப்பாவிக் குடிமக்கள் மிகமோசமான முறையில் தண்டிக்கப்பட்டனர்.

'மனிதன் ஆறறிவு படைத்தவன்—மிருகங்களைவிட ஓரறிவு கூடியவன்' என்கிறார்களே, கூடுதலாகக் கிடைத்த அந்த ஓரறிவை வைத்துக்கொண்டு எவ்வளவு படுமோசமான செயல்களை யெல்லாம் மனிதனால் செய்ய முடிகிறது!... ஐயோ..., ஐயோ,...அந்தக் கொடுமைகளை நினைத்தால் நெஞ்சு சூனியமாகிவிடுகிறது.

'நான் சொன்னபடி அப்போதே நீ தனியாகப் புறப்பட்டிருந்தால் இப்போது பத்திரமாக இருக்கலாமே!' என்று கனகசபை சொன்னார். 'நன்றாயிருக்கிறது. என்னுடைய அதிர்ஷ்டந்தான் நான் மறுத்தது. இல்லாவிட்டால் உங்களை இங்கே விட்டு விட்டு—ஒருமுற்றும் தெரியாமல் எப்படி நான் அங்கே இருப்பேன்?... என்ன நடந்தாலும் இங்கேஇரண்டு பேருக்கும் ஒன்றாகவே நடக்கட்டும்' என்றாள் மாதரசி.

பேதை!—இரண்டு பேருக்கும் ஒன்றாகவா நடந்தது?

ஒரு நாள்—

கனகசபை வேலைக்குப் போயிருந்தபோது—

மாதரசி வீட்டில் தனியாக இருக்க —

ஒரு யப்பானிய இராணுவ வீரன்—

வீரனா அவன்?

மிருகம்!

மிருகமா? — மிருகங்களுக்கே அவமானம்!

எவ்வளவெல்லாம் அவள் கெஞ்சினாள், அழுதாள்; கதறினாள். தன்னுடைய நகைநட்டு பணம் எல்லாவற்றையும் அவனுடைய காலடியில் போட்டுக் 'கற்புப்பிச்சை' கேட்டாள். —எல்லாம்வீண்; எல்லாமே வீணாகிவிட்டன!

* * *

கனகசபை வீட்டுக்கு வந்தபோது, மாதரசி அழுது அழுது மரத்துப்போய் வெறும் மரக்கட்டையாகக் கிடந்தாள். அவரிடம் சொன்னாள். —எல்லாம் விபரமாகச் சொல்லவில்லை. எப்படிச் சொல்வது? நெஞ்சுக்குள்ளே எத்தனை உணர்ச்சிகள் கிடந்து அடைக்கின்றன!

கனகசபை அவளுக்காக இரங்கினார். ஆறுதல் கூறினார். யப்பானியரின் கொடுமையை நினைத்து வெகுண்டார். என்னசெய்ய முடியும்? பிறகு அவள்மீதே திரும்பி 'முன்னே நான் சொன்னபோதே நீ ஊருக்குப் போயிருந்தால்...''

என்று குதித்தினார். அவள் எதுவுமே பேசவில்லை.

நடந்த அலுவல் கனகசபைக்கு எந்த அளவுக்கு அப்போது தெரிந்ததோ? — அவரும் விபரித்துக் கேட்கவில்லை.

இரண்டு வருடங்களாக மகப்பேறு இல்லாமலிருந்த மாதரசி சூல்கொண்டாள். அவளுடைய வயிறு மட்டுமல்ல, நெஞ்சிலும் பாரம் ஏறிக்கொண்டே வந்தது. கனகசபைக்கும் ஏதோ 'விளங்கி' விட்டது. மெல்ல மெல்ல அவர் அவளைவிட்டுத் தூர விலகிக் கொண்டு வந்தார். எட்டாவது மாதத்தில் கோலாலம்பூரி லிருந்த அவருடைய சிறியதாயார் வீட்டில் அவளைக் கொண்டுபோய்ச் சேர்த்து விட்டதோடு அவர் முற்றிலும் அந்நிய மனிதராகிவிட்டார்.

பத்தாவது மாதத்தில் குழந்தை பிறந்தது, பெண்குழந்தை.

கடவுளே! அது அதனுடைய தந்தையைப் போலவே இருந்தது.

முதலில் சில நாட்கள் அதன் மீது அவளுக்குப் பாசமே ஏற்படவில்லை. அதைக்கண்டாலே எரிச்சலாக இருந்தது. ஆனாலும் அதைத் 'தொலைத்து'விடக்கூடிய அளவுக்கு அவள் மனம்இல்லை. அத்தகைய பண்பாட்டில் அவள் வளரவில்லை.

மிகச் சிலநாட்களிலேயே அவளுடைய தாய்மை வெற்றிகண்டு விட்டது.

பிறகு—

அவளுடைய வாழ்வுக்கு அந்தக் குழந்தைதான் ஆதாரமாக இருந்தது.

இடையில் கனகசபையோடு தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள முயன்ற முயற்சிகளெல்லாம் வீணாகிவிட்டன. உலக யுத்தமும் ஓய்ந்து மலாயா மக்களுக்கும் விடிவு பிறந்தது. ஆனால் மாதரசியின் வாழ்க்கையில ஏற்பட்ட இருள் அகலவேயில்லை!

இனியும் அங்கேயிருந்து சிற்றன்னைக்குப் பாரமாயிருக்க விரும்பாமல் எட்டுவயதாகிவிட்ட 'தன்னுடைய' பெண் குழந்தையையும் கூட்டிக்கொண்டு மாதரசி ஊருக்கு வந்துவிட்டாள். அவளைக் கப்பலில் கண்டபோது அவளுக்குப் பக்கத்தில் சீனச்சிறுமி நின்றதாக நான் நினைத்தேன். அவள் சீனச் சிறுமியல்ல? யப்பானியச் சிறுமி; மாதரசியின் மகள்!

* * *

ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால் சீதாதேவி செய்யாத ஒரு குற்றத்திற்காக அவளை நெருப்பில் இறங்கும்படி இராமர் கேட்டாராம், அதற்குப் பிறகு மனித சமுதாயத்தில் எவ்வளவோ முன்னேற்றங்கள் ஏற்பட்டுவிட்டன! பகுத்தறிவு எவ்வளவோ வளர்ந்துவிட்டது! சமுதாயச் சட்டங்கள் எவ்வளவோ மாற்றமடைந்துவிட்டன.

ஆனால்,

மனிதனுடைய மனம் அன்றிருந்த நிலையில்தானா இன்றும் இருக்கிறது? அது வளரவில்லையா?



வளருவதற்கு எங்கள் சமூகத்தின் பண்பாடுகள் விடவில்லையா?

அப்படியானால்—

அத்தகைய எங்கள் பண்பாட்டை இனியும் நாற்றமடிக்க விடக்கூடாது. 'நானும் ஒரு எழுத்தாளன்' என்று பெருமைப்பட்டுக் கொண்டால் போதுமா? மனிதருடைய மனதிலே படிந்துபோயிருக்கும் இத்தகைய அழுக்குகளை நீக்குவதற்கு என்னுடைய கைகளை உபயோகிக்க வேண்டாமா? —அதனால் என்னுடைய கைகளிற் படிகிற அழுக்குத்தான் உண்மையில் எனக்குக் கிடைக்கும் புகழென்று நினைத்து நான் பெருமைப்பட வேண்டும்.

மாதரசி—

அவளுக்கு ஏற்பட்ட கொடுமையைக் கேட்டபின்னர் என்னால் சும்மாயிருக்க முடியவில்லை!

இந்தச் சமயத்தில்தான் 'மத்திய தீபம்' என்ற பத்திரிகையின் ஆசிரியர் தமது ஆண்டுமலருக்கு ஒரு சிறுகதை வேண்டுமென்று என்னைக் கேட்டார்.

'கற்பு' என்ற அந்தக் கதையிலே மாதரசியை வேறு பெயரில் வேறு சூழ்நிலையில் வாசகர்களுக்கு முன்னே நிறுத்தி நான் நியாயம் கேட்டேன்.

'மத்தியதீப'த்தின் ஆண்டு மலர் ஒன்றை நானே மலாயாவுக்கு—கனகசபைக்கு அனுப்பி வைத்தேன்.

நான் மலர் அனுப்பி ஒரு மாதத்திற்குள்ளாகவே கனகசபையின் கடிதம் மாதரசிக்கு வந்தது.

அவள் திரும்ப அவரிடம் புறப்பட்டபோது, என்னிடம் 'சொல்லிக்கொண்டு' போகவந்து, என்னைக் கண்டதும் அழுதகண்ணீர்—

அந்த ஆனந்தக் கண்ணீர் தான் என்னுடைய எழுத்துக்கு வாழ்வைத் தருகிறது.

---

## தமிழ் மன்னனின் தாழ்மை

காட்டிலே ஓர் அதிசய வேடனைக்கண்டேன். அவன் எய்த அம்பொன்று யானையை விழுத்தி ஒரு புலியையும் கொன்று அப்பாலும் சென்று நீண்ட கொம்புள்ள மானொன்றையும் வீழ்த்தி அதன்பின் உரல்போன்ற தலையை உடைய ஒரு பன்றியையும் மாய்த்து ஈற்றில் புற்றுக்குள் பதுங்கிய ஓர் உடும்பின் தலையையும் துளைத்துச் சென்றது. இந்த வில் வித்தையின் நுட்பத்தைக் கண்டு வியந்தபோது அவன் கிட்ட வந்தான். அரசன் போலவும் அவன் காணப்பட்டபடியால் அரசனே என்று நான் பாடத் தொடங்கினேன். அதற்கு அவன் நாணப்பட்டு என்னைப்பாடாது தடுத்து மானிறைச்சியும் தெளிந்த தேனும் உண்ணத்தந்து பொன்னும் மணியும் அள்ளிச் சுமத்தினான். அவனை வாழ்த்தத் தொடங்க ஓடி மறைந்துவிட்டான். அவன் யாரென விசாரித்தோம். அவன் வேடனல்லனென்றும் வேட்டையாட வந்த வல்வில் ஓரி என்னும் கொல்லிமலை அரசனென்றும் பின்பு அறிந்தபோது அதிர்ச்சி அடைந்தோம்.

— புறநானூற்றிலே பரணர்



"சொந்த விருப்பு வெறுப்புகளுக்காகவும் மன உளைச்சலைத் தீர்க்கவும் செய்யும் சிறுபிள்ளை விளையாட்டல்ல இலக்கியம். அது மக்கள் நலனுக்காகவே படைக்கப்படவேண்டும்"

முற்போக்கு இலக்கியம் என்பதென்றால் என்ன என்று விளக்குகிறார் விறுவிறுப்பான கருத்துக்களை வேகத் துடிப்பு நடையிலே எழுதிவரும் சிறுகதை எழுத்தாளர் ரகுநாதன்.

# முற்போக்கும் பிற்போக்கும்

என். கே. ரகுநாதன்

1955 அல்லது 1956 என்று ஞாபகம். கிழக்கிலங்கையைச் சேர்ந்த பிரபல எழுத்தாளர் ஒருவர் ஈழகேசரி அலுவலகத்துக்கு வந்திருந்தார். இலங்கை முற்போக்கு எழுத்தாளர்சங்கம் ஆரம்பிக்கப்பட்டு, எழுத்தாளர் மத்தியில் அதைப் பற்றிய அபிப்பிராயங்கள் நிலவிக்கொண்டிருந்த காலம் அது. நானும் நண்பர் ஒருவரும் அந்த எழுத்தாளரைச் சந்தித்த அந்தச் சந்தர்ப்பத்திலும் முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தைப்பற்றிய பிரஸ்தாபம் வந்தது.

"என்ன முற்போக்கு அது? அந்த எழுத்தாளர் சங்கத்தில் சேராதவர்கள் பிற்போக்கு எழுத்தாளர்களா?" என்று கேட்டார் அவர்.

"எதிலும் இருப்பதுபோல இலக்கியத்திலும் நல்லது, கெட்டது என்று இருக்கிறது. மக்கள் வாழ்வைச் செம்மைப்படுத்தி மேலோங்கச் செய்யவேண்டுமென்ற இலட்சியத்துக்காகவும் இலக்கியம் படைக்கப்படுகிறது. வெறும்பொழுது போக்குக்காக, சொந்த விருப்பு வெறுப்புக்களுக்காக, புகழுக்காகவும் இலக்கியம் படைக்கப்படுகிறது. இலட்சியத்தைக் குறிக்கோளாகக் கொண்டு எழுதுபவர்கள் ஒன்றுசேர்ந்து ஓர் அணியில் திரள்வதனால் அந்த அணியில்சேராதவர்கள், தாங்கள் பிற்போக்கு எழுத்தாளர் என்று கருதிக்கொள்ள வேண்டியதில்லை; அது அர்த்தமுமாகாது" என்று பதில் சொன்னேன். இதற்குமேல் விளக்கமாக எதையும் சொல்லவில்லை. அவரும் விரிவாக அறிய முற்பட்டதாகத் தெரியவில்லை. இருவருக்குமே தெளிவின்மைதான் காரணம்போலும்.

அப்புறம் பேச்சு வேறுதிசையில் திரும்பியது. எதைப்பற்றியோ வெல்லாம் சுற்றி வந்து, கடைசியில், இலங்கையில் உள்ள பத்திரிகைகளைப்பற்றி விரிந்தது

இன்று குறிப்பிடக்கூடிய அளவு இலக்கிய முயற்சிகளும், சோதனைகளும் செய்துவரும் முதலாளித்துவ தினசரிப் பத்திரிகையொன்று அப்போது இலங்கையில் எழுத்தாளர்களே இல்லையென்ற அட துடித்தமான கருத்துடன் தென்னிந்தியாவிலுள்ள இரண்டாம், மூன்றுந்தர எழுத்தாளர் சிலர்தான் இலக்கிய மேதைகள் என் கருத்தும் கொண்டிருந்தது. திருச்சியும் சென்னையும், மதுரையும்தான் அப்போது



அப்பத்திரிகையில் வெளிவந்த கதைகளின் சூழல். பத்தாம்பசலிக் கதைகள்; தென்னிந்தியாவில் நடைபெறும் அம்மாமிப் பத்திரிகைகளில் எடுபடாத சரக்குகள். இலங்கையிலிருந்து பண்டிதர், வித்துவான்கள் சிலர்மட்டும் எழுதினார்கள். படுமோசமான முறையில் இலக்கிய வியாபாரம் செய்து வந்த அந்தத் தினசரியின்—வாரப்பதிப்பைப் பற்றிய பேச்சு வந்தது.

"இந்தப் பத்திரிகைக்கு இதுகால வரை ஒருசிறு துணுக்குக்கூட நான் எழுதி அனுப்பவில்லை!" என்று மிகப்பெருமையுடன் கூறினார் அவர்.

"என்?" என்று கேட்டேன் நான்.

"அதன் கொள்கை எனக்குப் பிடிக்கவில்லை. இலக்கியத்துறையில் மட்டுமல்ல— ஒரு செய்திப் பத்திரிகை என்றஅளவில் கூட அது கையாண்டுவரும் கொள்கை படுமோசம்!" பேச்சில் மட்டுமல்ல, முக பாவத்திலும் தன் வெறுப்பைத் தெரிவித்துக் கொண்டார்.

"முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தைப் பற்றி நீங்கள் முதலில் கேட்ட கேள்விக்கு, இப்போது நீங்களே பதில்சொல்லிவிட்டீர்கள்." என்று சிரித்துக்கொண்டு பதில் சொன்னேன்.

அதை அவர் ஒப்புக்கொண்டதாகக் காட்டிக்கொள்ளவில்லை என்பது உண்மைதான். ஆனால், மறுக்கவுமில்லை. பொதுவில் சிரித்துக்கொண்டார். இப்போது, அவரால் வெறுக்கப்பட்ட அதே பத்திரிகையில் அவரது நல்ல கதைகள் அடிக்கடி வெளிவருவது நமக்குப் புறம்பான விஷயமாதலால் விட்டுவிடுவோம்.

* * *

மேலே குறிப்பிடப்பட்ட பத்திரிகையில் சில மாதங்களுக்கு முன்பு சுருட்டுத் தொழிலாளியைப் பற்றிய அழகான கதையொன்று வெளிவந்தது. காலங் காலமாக, சுருட்டுக் கொட்டில்களில் அடைந்துகிடந்து, புகையிலைச் சருகோடும் கோடாத் தண்ணீரோடும் ஒன்றி அவிந்து சுருட்டும் தொழிலாளர்கள், பற்றுக்குறைச் சம்பளத்தினாலும், முதலாளிமாரின் கெடுபிடிக்கொள்கைகளினாலும் பசி, பட்டினி, பிணி, முதலிய கொடுமைகளை வெல்ல முடியாமல் அவஸ்தைப்படுவதை, நெஞ்சை உருக்கும் வண்ணம் தன் பாத்திரத்தின்மூலம் வெகு அழகாகச் சித்திரித்திருந்தார், அதன் ஆசிரியர். ஆயினும் தொழிலாளி தன்தொழிலை அடிக்கடி இகழ்வதையும், தன்நம்பிக்கையையே இழந்து தவிப்பதையும் ஆசிரியரால் தவிர்க்க முடியவில்லை. இந்தச் சந்தர்ப்பத்தில், காலனை நினைவுபடுத்தி எதிரே, மங்கிய நிலவில் அசைந்தாடும் மரக்கிளையைக் காட்டி—அவன் அதை வெறித்துப் பார்ப்பது மாதிரிக் கதையை முடிக்கிறார். காலன், அழைப்பு விடுவதாகவே படுகிறது மனதில், பாத்திரத்துக்கும் வாசகனுக்கும்.

முடிவைத்தவிர ஒரு சிறந்த கதை என்பதில் சந்தேகமே இல்லை. சுருட்டுத் தொழிலாளர்களைப்பற்றி-அவர்களின் வாழ்க்கையை இப்படி அற்புதமாகவும், உருக்கமாகவும் சித்திரித்து இதுகாலவரை எந்தக் கதையுமே வரவில்லை எனலாம். இந்தக் கதைக்கு **புதுமை இலக்கியம்** இதழில் நான் விமர்சனம் எழுதியிருந்தேன். கதையை வெகுவாகப் பாராட்டி, வாழத்துடித்த தொழிலாளிக்கு ஆசிரியர் சாவைக்காட்டிய பரிதாபத்தைக் குறிப்பிட்டிருந்தேன்.

சில நாட்களின்பின், தற் செயலாக அந்தக் கதாசிரியரும் நானும் நேரில் சந்தித்த போது, அந்த விமர்சனத்தைப்பற்றிய பேச்சுவந்தது, வாழ வழி காட்டவில்லை என்று நான் எழுதியிருந்ததைக் குறிப்பிட்டு, "ஏன் அப்படி எழுதினீர்கள்?" என்று கேட்டார் அவர்.

நான் பதிலாக, கதை எழுதப்பட்ட காலத்தில், யாழ்ப்பாணத்தில் சுருட்டுத் தொழிலாளர் சங்கம் நியாயமான அளவுக்கு

வளர்ந்து தொழிலாளர் நலனுக்காக உழைத்து வருவதைச் சுட்டிக்காட்டி "தொழிற் சங்கத்தின் வாடைகூட உங்கள் கதையில் வீசவில்லையே!" என்று சொன்னேன்.

அவர் சிரித்துவிட்டு, யாழ்ப்பாணத்தில் சுருட்டுத் தொழிலாளர் சங்க மொன்றின் காரியதரிசியாய் இருக்கும் ஒருவரின் பெயரைக் குறிப்பிட்டு "அதை அவர் பார்க்கட்டும், நான் பொழுது போக்குக்காகக் கதை எழுதுபவன். எனக்கு அதைப்பற்றி எதுவும் முக்கியமில்லை!" என்று பதில் சொன்னார்,

நான் பதில் பேசவில்லை!

* * *

'முற்போக்கு இலக்கியம் என்பது என்ன? அது எங்கிருந்து முளைத்தது?' என்று கேட்பவர்கள் நம்மிடையே இருக்கிறார்கள். கலை, கலைக்காகவே என்ற கொள்கை செத்துக்கொண்டு வருகிறது. கலை மக்களுக்காகவே என்ற கொள்கை வலுப்பெற்று விட்டது. இலக்கியமும் மக்களுக்காகவேதான். மக்களது சமூக, அரசியல் வளர்ச்சியில் மக்களுக்காகவே இலக்கியம் படைக்கப்பட வேண்டும் என்ற தவிர்க்க முடியாத கால கட்டத்தில் பிறந்ததுதான் முற்போக்கு இலக்கியம். இது எந்த நாட்டிலிருந்தும் இறக்குமதி செய்யப்பட்ட சரக்கல்ல.

நம் நாட்டிலிருந்து வெளியாகும் பத்திரிகை யொன்று, நம் நாட்டு மக்களின் பிரச்சினைகளை எழுதாமல், நம்நாட்டு எழுத்தாளர்களைப் புறக்கணித்தால் அந்தப் பத்திரிகையைப் பற்றி மனதில் என்ன அபிப்பிராயம் உண்டாகிறது? அதைப்போல, தொழிலாளி ஒருவனின் அல்லல்களையும் அவஸ்தைகளையும் மட்டும் அழகாகச் சித்திரித்து விட்டால் அதனுல் அவனுக்கு என்ன நன்மையைச் செய்துவிட்டோம்! சோகரசத்துக்காக மட்டும் இலக்கியம் இருக்க முடியுமா? என்ற கேள்வி எழுகிறது. மேலே குறிப்பிடப்பட்ட இரு சம்பவங்களையும் படிக்கும்போது இந்த உண்மை புலப்படுவதை உணரலாம்.

சொந்த விருப்பு வெறுப்புக்களுக்காகவும், மன உளைச்சல்களைத் தீர்க்கவும், செய்யும் சிறுபிள்ளை விளையாட்டல்ல இலக்கியம், அது மக்கள் நலனுக்காகவே படைக்கப்பட வேண்டும் என்ற கொள்கைதான் முற்போக்கு இலக்கியம். முற்போக்கு இலக்கியம் என்ருல் என்ன என்பதற்கு திரு. கனக செந்திநாதன் விடை தருகிருர்:

"முற்போக்கு இலக்கியம் ஒரு கட்சிக்கு மட்டும் சொந்தமானதன்று. **சிந்தனு சக்தியுள்ள** எந்த எழுத்தாளருக்கும் பொதுவானது. அவ்வகை முற்போற்கு இலக்கியம் மனிதப் பணபின் உயர்வை, உழைப்பின் பெருமையை, நாட்டுப்பற்றை, சொந்தமண் வாசனையை, சமாதான இலட்சியத்தைக் குறிக்கோளாகக்கொண்டுஇயங்கவேண்டும்."



## உண்மைக் கவிதை

உண்மையான அருட்கவிதை வாழ்வை உயர்த்தும் புனிதமுடையது; ஆழ்ந்த கருத்துடையது; காலை ஊற்றைப் போலத் தெளிந்த சொல்லுடையது; கரடு முரடில்லாமல் ஆற்றொழுக்கான நடையுடையது; கலையில் கடவுளை விளக்குவது. அழகால் அருளை விளக்குவது.

— சுத்தானந்த பாரதியார்





※ உலகிற்கு உயிர்கொடுத்தாள்தமை மதிற்கோவிலின் உள் அடைத்து வைத்துவிட்டு உலகத்தார் போடும் ஆட்டம்தா னென்ன?......... கொடுப்புட் சிரிக்கும் அவள் நம் கும்மாளம் மிஞ்சில் முடிப்பாள்: வைப்பாள் ஓர் முற்று! அப்பாடா! ஈழத்தின் இயற்கைக் கவிஞன் எனப் பாராட்டப்பெறும் 'மகாகவி'யின் வார்த்தையில் தெறிக்கும் உறுதிதா னென்னே!

# இயற்கைப் பெருந்தாய் இதயம்

மகாகவி

இல்லா வெறும்பாழ் இடையே உளதாக்க
வல்லாள் ஒருத்தி மனங்கொண்டாள்;—பல்கோடி
அண்டங்கள் ஓட அளித்தாள், அவற்றைஎழில்
கொண்டு நிறைத்தாள் குனிந்து.

நீரால் நெடுந்தீ அணைத்தாள்; நிலமுழுதும்
சீராக்கித் தென்றற் சிறுகாற்ருல்—ஓராட்டி
மெல்ல விசிறி உயிர்விளைத்தாள்; மந்திகளை
நில்லென்ருள் கூன்நிமிர்ந்தோம் நாம்!

வண்டல் வயலும் தொழிலும் வளர்கலையும்
உண்டாக்கி வையத் துயர்தலைமை—கொண்டோமே;
கோயில் எடுத்தவனைக் கும்பிட் டிருத்திமதில்
வாயிலுக்கு மாட்டினேம் பூட்டு!

'போதும் இனிஇப் புதுஉலகை நாம்ஆள
ஏது தடை!'யென் றிறுமாந்து—மீது
கிடக்கும் சிலபொருட்கள் கிட்டுதற்காய் நம்முள்
சுடக்கொல்லச் செய்தோம் துவக்கு!

வையம் கொடுத்துயிரும் வாழ்வும் கொடுத்தவளின்
தெய்வக் கருணைத் திறம்கண்டே—உய்யும்
வழிவகுக்க மட்டும் மறந்தோம்நாள் முற்றும்
பழிவளர்த்து மாய்க்கின்றோம் பண்பு!

பேயாட்டம் காட்டும் பிரளயங்கள் மத்தியிலும்
ஈயாட்டம் காட்டா தெமைக்காத்த—தாயோ
கொடுப்புட் சிரிப்பாள்;எம் கும்மாளம் மிஞ்சில்
முடிப்பாள்,ஆம், வைப்பாள்ஓர் முற்று.

பூமி கொழுத்திப் புலமை புரிந்தால்,என்
சாமீ, அவளும் சகிப்பாளோ?—நாமே
நமைஒழிக்கச் செய்கை நடத்துவாள், மூடி
இமைதிறக்கும் முன்னர் எளிது!

மண்ணைப் பிசைந்து மனிதரைச் செய்தாள்,தம்
கண்ணைத் திறந்தும் கதிகெட்டுப்—பண்ணியஅப்
பாவைகள் பொய்த்தால் பழையபடி மண்ணாக்கிச்
சாவைத் தருவாள் சலித்து.

பெற்றாள்,தன் அன்பைப் பெறத்தந்தாள், நாம்நிறை
கற்றோம் அறிவின் கடல்தாண்ட—சற்றேனும் [யக்
ஓயா துழைத்தோம், எனினும் உளத்தேவெம்
நோயுற்றால் வீழாமோ நூர்ந்து?

வான வெளியில் வழிதிறந்து மேலேவிண்
மீனை அடைந்தால் விடிந்திடுமோ?—மோனத்
தியற்கைப் பெருந்தாய் இதயத்தைக் காணா
மயக்கத்தால் ஆகுமோ மாண்பு?







ஜ யப்பானில் உருமாற்றம் ஒரு கலையாக வளரத் தொடங்கியது. ஆண்களாக இருந்து பெண்களாக உரு மாறியவர்களுக்கு யப்பானிய மொழியில் 'ஒன்னகதா' என்று பெயர்.

பைந்தமிழ் வளர்த்த பாரதி பணித்தபடி பிறர்நாட்டு நல்லறிஞர் "சாத்திரங்கள் தமிழ் மொழியிற் பெயர்க்கும்" திறமை வாய்ந்தவர்,—புதுமைக் கருத்துக்களைச் செம்மையும் செழுமையும் ததும்பப் படைக்கும் எழுத்தாளர்.—சென்னை எழுத்தாளர் சங்கச் செயலாளராகிப் பணி புரிந்தவர்,—பகவதி ஜயராமன் யப்பான்நாட்டிலே ஆண்கள் பெண்களாக மாறி நாடகக்கலை வளர்க்குஞ் சிறப்பைச் சுவைததும்ப விளக்குகிறார்.



# ஆண் நடிகைகள்

மூலம்: தோஷியோ இகேதா; தமிழாக்கம்: பகவதி ஜயராமன்

யப்பான் தேசத்தில் கபுகி நாடக அரங்கு (Kabuki Theatre) என்று ஒரு புகழ்மையான நாடகக்குழு இருந்துவருகிறது. இந்நாடகக் குழுவிற்கு யப்பானில் மட்டுமல்லாமல் அமெரிக்காவிலும் நல்ல மதிப்பு உண்டு. அமெரிக்காவில் உள்ள தலைசிறந்த கலைஞர்கள் அனைவரும் இக்கபுகி அரங்கைப் போற்றாமலிருப்பதில்லை. இவ்வரங்கில் நடைபெறும் நாடக வடிவம் சுமார் 350 ஆண்டுகாலம் பழைமையுடையதாகும். இவ்வளவு இருந்தும் இவ்வடிவம் மற்றவற்றைப்போல் அமெரிக்க நாடக மேடையை இன்னும் ஆட்கொள்ளவில்லை, கபுகி நாடகத்தைச் சரியாகப் பார்க்காமலே அமெரிக்கர்கள் அதனைப் புகழ்ந்து வருகிறார்கள் என்றால், அதில் ஏதோ ஒரு கவர்ச்சி இருக்கவேண்டும் என்று நமக்குத் தோன்றவில்லையா?

சென்ற காலம்வரை கபுகியைப்பற்றி ஏராளமான கருத்துக்கள் அமெரிக்காவில் வெளிவந்திருக்கின்றன. எண்ணிறந்த அமெரிக்க இலக்கிய வல்லுநர்களும் தோக்கியோவில் கபுகிசா (Kabukiza) என்னும் இடத்தில் அமைந்துள்ள கபுகி அரங்கைப் பார்த்துச் சென்றுள்ளனர். அவர்களுடைய பார்வையின் விளைவு அமெரிக்கப் பத்திரிகைகளிலும், சஞ்சிகைகளிலும் கபுகி மந்திர மயக்கின் புகழ்மாலைகளாகப் பரிணமித்துள்ளது. ஆனால் இவையனைத்தும் கபுகியை நன்றாகப் புரிந்துகொண்டு சூட்டப்பட்ட புகழ்மாலைகளா என்பது சிந்திக்கவேண்டிய செய்தியாகும்.

கபுகி நாடகம் இன்று முழுவதும் ஆண்களாலேயே நடிக்கப்படுகிறது. இதனால் பெண்மைப் பாத்திரங்களே அந்நாடகத்தில் இல்லை என்று கூறிவிடக்கூடாது. கபுகியில் பெண்பாத்திரங்கள் முக்கியமாகவும், மிகுதியாகவும் இருக்கின்றன. அப்படியிருக்கப் பெண்கள் ஏன் கபுகி அரங்கில் தலையே காட்டுவதில்லை என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா நமக்கு? ஆம், அதற்கு நாம் அளிக்கக்கூடிய விடையில்தான் கபுகி அரங்கின் சரித்திரமே அடங்கி யிருக்கிறது.

கபுகி நாடகம் சுமார் கி. பி, 1600.ல் பிறந்தது என்று சொல்லலாம். அப்போது இது நாடகத்தைவிட நடனக் கூறுகளையே மிகுதியாகக்கொண்டு விளங்கியது. நடனம் முழுவதிலும் பெண்களே 'பங்கு கொண்டனர். நடனத்தின் சிறுபான்மை ஆண் பாகத்தையும் பெண்களே ஏற்று வெற்றிகரமாக நடத்தினர். இதனால் கபுகி நடனத்திற்குமே 'மங்கையர் ஆட்டம்' என்றும் பெயர் வந்தது. இக்கபுகி கேளிக்கை இப்படியே சென்றிருந்தால் பெண்களுக்கு அதில் இருந்த தனியுரிமை சிதைந்திருக்காது; அங்கிலேயே ஒரு நிலைவரமான மரபாகவும் ஆகியிருக்கும். ஆனால் நடனத்தில் கலந்துகொண்ட தொடக்ககால நடிகைகள் மேடையின்மீது கலைஞர்களாகவும்; வெளியுலகில் விலைஞர்களாகவும் நடந்துகொண்டனர். கலை—நிகழ்ச்சிகள் நடக்காத சமையங்களில் அவர்கள் பரத்தமைத் தொழில் புரிந்தே வாழவேண்டியிருந்தது.

பரத்தமைத் தொழிலும், நடனத்தொழிலும் அக்காலத்தில் ஒன்றுக்கொன்று வெளிப்படையாகப் பொருந்தி வரவில்லை. அக்காலத் துரைத்தனம் நடிகையர் பரத்தையராகவும் இருப்பதை ஒப்பவில்லை. எனவே அது ஒரு மிகைப்பாடான சட்டத்தைக் கொண்டுவந்து மேடையில் எவ்வகையான பெண்களும் நடிக்கக்கூடாது என்று விதித்துவிட்டது. இப்பெண்களில் நெகிழ்ச்சியுள்ளவர்களும், உறுதியானவர்களும் ஒருசேர அடங்கினர். இந்நிலை கபுகி அரங்குக்குப் பேரதிர்ச்சியைக் கொடுத்தது; என்றாலும் அரங்கு மரித்துவிடவில்லை. கபுகி தன்தோற்றம் முழுவதையும் கலைத்து ஒரு முழுஆண் கலைக்காட்சியாக மாற்றிக் கொண்டது. இதனால் நடனக் காட்சியும் நாடகக் காட்சியாக உருமாற வேண்டியதாயிற்று. இப்போது நாடகத்தில் வந்த பெண்பாகங்களை ஆண்களே ஏற்று நடித்தனர். பிறகு 18-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் ஏற்பட்ட இன்னொரு மாற்றம் பொதுமக்களின் வேண்டுகோளுக் கிசையப் பெண்பாகத்தை மிகுதிப்படுத்தி ஆண்களுக்குச் சிறப்பான பெண்மைப் பயிற்சியை அளித்தது.

காலஞ் செல்லச் செல்லக் கபுகியின் ஆண்நடிகைகள் தம்திறமையில் மேம்பட்டு நிறைவுற்று விளங்கினர். அப்போதிருந்து யப்பானில் உருமாற்றம் (Impersonation) ஒருகலையாக வளரத் தொடங்கியது. பெண்களாக நடித்த ஆண் நடிகர்களுக்கு ஒரு சீரியமதிப்பும் ஏற்பட்டது. இப்படி ஆண்களாக இருந்து பெண்களாக உருமாறியவர்களுக்கு யப்பானிய மொழியில் 'ஓயாமா' அல்லது 'ஒன்னகதா' என்று பெயர். யப்பானிய நாடக அரங்கு வரலாற்றில் 'ஒன்னகதா' நடிகர்களுக்கு ஒரு முக்கிய இடம் உண்டு. சில தலைசிறந்த யப்பானிய நடிகர்கள் 'ஒன்னகதா' நடிகர்களாகவே உள்ளனர். அவர்களுள் யோஷிஜாவா அயாமை, ருகினே சவானேஜோ, மிசூகி தத்சுனேசுகே என்போர் குறிப்பிடத்தக்கோராவர்.

50 ஆண்டுகளுக்கு முன்வரை நாடகத்துக்காக உருமாற்றம்புரியும் காரியம் நடிகர்களின் தனிவாழ்க்கையிலும் இடம்பெற்றிருந்தது. நாடகத்தில் வேடப்பொருத்தம் சிறக்கவேண்டும் என்றகாரணத்தால் சொந்த வாழ்விலும் அவர்கள் பெண்களாகவே உலவி வந்தனர், அக்காலத்துப் பெண்கள் யாவரும் புருவமயிரை வழித்துக்கொள்வது மரபாயிருந்ததால். இவ்வாண் நடிகையரும் அதனையே பின்பற்றினர். ஏதாவது சமுதாயச் சிறப்புக்களுக்குச் செல்லும்போதும் அவர்கள் முகத்தைக்கழுவி வண்ணப் பொடியும் பசையும்பூசி, தலைமுடியைச் சீவி அலங்காரமாக உச்சிக்கொண்டை இட்டு, பெண்ணுடை அணிந்து முதன்மையான மாதரசிகளாக விளங்கினர். அவர்களால் பெண்களைப்போலக் குழந்தைகளை ஈன முடியாவிட்டாலும், 'கிமனோ' என்னும் பெண்ணுடையில் அவர்கள் உலவிவந்த போதெல்லாம் அவர்கள் உண்மையான நங்கையராகவே கருதப்பட்டனர்.



வாசேதா பல்கலைக் கழக நாடகப் பொருட்காட்சிச்சாலையின் பொறுப்பாளரான பேராசிரியர் சிகதோஷி காவாசுகே என்பவர் ஒரு தேர்ச்சி வாய்ந்த 'ஒன்னகதா' நடிகரைப்பற்றி ஒரு சுவையான நிகழ்ச்சியைக் கூறியுள்ளார். ஒரு சமயம் 'ஒன்னகதா' நடிகர் ஒருவர் தன்நண்பர் ஒருவரைப் பார்க்கப்போய்க்கொண்டிருந்தார்- அவர் வழியில் உடல்நலிவு ஏற்பட்டு விழுந்துவிட்டார். பெண்ணுடையில் ஒரு நங்கையை ஒத்து அவர் விளங்கியதால் வழிப்போக்கர்கள் அவர்மீது பரிவுகொண்டு அருகாமையில் உள்ள ஒருவீட்டுக்கு முதலுதவிக்காக அவரைத் தூக்கிச் சென்றனர். வீட்டுமங்கை அவருக்குப் பணிவிடை புரிந்தார். நடிகருடைய மார்பில் ஒத்தடம் கொடுக்கும்வரை அம்மங்கைக்கு விருந்தினரைப்பற்றிய ஐயம் ஒன்றும் ஏற்படவில்லை. பிறகு அவருக்குத் திடீரென்று ஓர் அதிர்ச்சி உண்டாகி வந்தவர் ஆண்மகன் என்று தெரிந்துவிட்டது. அதோடு அவருடைய பணிவிடை முடிவுற்றது. நடிகரும் மெல்ல நகரத் தொடங்கினர் என்பது கதை.

இன்றைய கபுகி அரங்கு எவ்வளவோ மாற்றமடைந்திருக்கிறது. தற்போதைய ஆண்நடிகைகள் தம்முடைய பெண்ணுடைகளையும், பெண்ணியல்புகளையும், பெண்மரபுகளையும், பெண்குரலையும் நாடக மேடையோடு விட்டுவிடுகின்றனர். இப்போது அவர்கள் வெளியில் நடமாடினால் அவர்களை நங்கைமார் என்று யாரும் ஐயுறுவதில்லை. என்றாலும் அவர்களுடைய நேர்த்தியாக வழிக்கப்பட்ட புருவம் அவர்களுக்கு இன்னமும் பெண்மையை ஊட்டிக்கொண்டுதான் இருக்கிறது. இன்றைய 'ஒன்னகதா' முதல்வர்கள் நாடகமேடையில் தோன்றும்போது ஒவ்வோர் இம்மியினும் பழைய நடிகர்களுக்கு எந்தவிதத்திலும் குறையாத பெண்ணுருவங்களாகவே ஒளிர்கின்றனர். அவர்களைப்பற்றி என்ன கூறப்பட்டாலும், அவர்கள் கபுகி அரங்கின் கலைவளர்ச்சிக்கு மலையத்தனை புகழைச் சேர்த்திருக்கிறார்கள் என்பதைமட்டும் யாரும் மறுக்க முடியாது. கபுகி நிகழ்ச்சிகளுக்கு வேகத்தையும், சுழற்சியையும் கொடுப்பவர்கள் அவர்களே யாவர்.

தம்முடைய இயற்கையான ஆண்மைக் கூறுகளை மறைத்து அழகுநிறைந்த பெண்மைக் கூறுகளைச் சரியான முறையில் வெளிப்படுத்த கபுகி நடிகர்கள் மிகுதியும் துன்பப்பட்டுத் தம்முடைய பாகங்களைப் பெண்களைவிடச் சிறப்பாக நடத்திக் காட்டுகிறார்கள். இதனால் வேறு நாடக அரங்குகளில் இயல்பான பாத்திரங்களில் நடிப்போரும் தம்முடைய நடிப்புக்கு ஒரு புதிய திணிவை (Intensity)க் கொடுக்க வேண்டியவர்களாயினர். நாடகாசிரியர்களும் புதிய சூழ்நிலைக்கு ஏற்பத் தங்களைச் சரிப்படுத்திக்கொண்டனர். இங்ஙனம் கபுகி ஆண்நடிகையர்மூலம் ஒரு நல்ல கலையுரத்தைப்பெற்று இன்றும் ஒரு சீரிய அரங்காகத் திகழ்ந்து வருகிறது.

உ

## பிரார்த்தனை

உடலுக்கு உணவு எவ்வளவு அவசியமோ
அதுபோல
ஆத்மாவுககும் பிரார்த்தனை மிகவும் அவசியம்.

—மகாத்மா காந்தி.



"பழைய சமுதாயத்தின் வாரிசான சிதம்பரியார் பூத்துவரும் புதிய சமுதாயத்தின் போக்குகளைக் கண்டு திகைத்தார். ஆனாலும் காலம் மாறி வருவதை அவரால் தடுக்க முடியவில்லையே!"

சிறுகதை இலக்கியத்துறையில் தமக்கென ஒரு ஸ்தானத்தை ஏற்படுத்திக்கொண்டுள்ள திரு. வ. அ. இராசரத்தினத்தின் படைப்புக்களில் கிழக்கிலங்கை மண்ணின் மணம் வீசும்!

# தந்தையும் மகனும்

வ. அ. இராசரத்தினம்

தன்னைச் சுற்றியுள்ள வாழ்க்கையை ஒரு போராட்டம் என்று உருவகப்படுத்திக்கொள்ளும் அளவிற்குத் திருக்கொட்டியாபுரப்பற்று மல்லிகைத்தீவைச் சேர்ந்த சிதம்பரப்பிள்ளை என்ற சிதம்பரியின் சிந்தனைகள் ஓடவில்லை. ஏனென்றால் நினையாப்பிரகாரமாய் வரும் மாவலியின் வெள்ளப் பெருக்கு, பெய்தும், பெய்யாமற் பொய்த்தும் விடுகின்ற மாரி, வட்டிக்குப் பணம் விடுப்பவர்களின் கருணையற்ற பிடுங்கல், தன் கையைக் காத்து நிற்கும் ஐந்தாறு சீவன்களின் கவந்தப் பசி, கல்யாணம், சீதனம், திருவிழாச் செலவு என்ற வல்லடி வழக்குகள், இத்தகைய எல்லாப் படைக்கலங்கட்கும் உழைப்பு என்ற ஒரே கவசம் பூண்டு எதிர்த்து நிமிர்ந்து நிற்கையில், அது 'பெருமானின் திருவருள் என்றே அவர் எண்ணினார். தோற்றுப்போனால் என்ன? மனப் பழுவை இறக்கி வைக்கத்தான் விதி என்ற சுமைதாங்கி இருக்கிறதே!

ஆகவே சிதம்பரி வாழ்க்கையைப் பயங்கரமான கிருஷ்ண சர்ப்பமாகக் கருதி, அதன் விஷப்பல்லிற்கும் பயப்படாத தைரியத்தோடு எக்காளமிட்டுக் கேலிச் சிரிப்புச் சிரித்ததும் இல்லை. வாழமுடியாதே என்ற ஏக்கத்தில் உலகைத் துறந்து காஷாயம் வாங்கிக் கொண்டு வெளிக்கிளம்பவும் இல்லை. வாழ்கின்றோம் என்ற பிரமையே இல்லாமல் ஐம்பதாண்டுகட்கு மேல் வாழ்ந்தேவிட்டார்.

தன் தந்தையின் கண்காணிப்பிலிருந்து விலகிப் புதுமண வாழ்வைத் தொடங்கி, மாமனார்வீ... மகாசௌக்கியமாக இருந்து, அந்...



இரவற் சோற்றிற் சோர்வு தட்டு முன்பே சிதம்பரி தனியாகத் தொழிலில் இறங்கிவிட்டார். அதாவது வாழத் தொடங்கிவிட்டார். தடம் விழுந்து சென்றிருக்கும் காட்டுப் பாதையிலே, வண்டிக்காரனைத் தூங்க வைத்துத் தன்பாட்டிற்கு வண்டியை இழுத்துச் செல்லும் கிராமத்துக் காளையைப் போலவே, சிதம்பரியும் தன் முன்னோர் சென்ற பழகிய வழியிற் சென்றார். காட்டுப் பாதைகள் எனினும் கள்ளர் பயம் இல்லை. வழியிலே தன் முதுகை நிமிர்த்திக்கொண்டு ஆமையாய்ப் படுத்திருக்கும் மரவேரிலோ, பூமிக்குமேலே பிறிக்கொண்டு நிற்கும் கருங்கல்லிலோ, பள்ளம் படு குழியிலோ வண்டி ஏறிவிழுகையில் விழித்துக்கொள்ளும் வண்டிக்காரனைப்போலவே அவரும் இடையிடையே விழித்துக் கொண்டார். பெரு வெள்ளம், மழையின்மை, பிள்ளைப்பிறப்பு, — ஏன் இறப்புங்கூட — மகளின் கல்யாணம், கடன் தொல்லை, என்றெல்லாம் வாழ்க்கை வண்டி இடறிவிழ்ந்து அவர் விழித்துக் கொள்கையில், வண்டிக்காரனைப் போலவே 'தா; ஹைய்' என்று காளைகளை நிமிண்டிவிட்டு மறுபடியும் தூங்கத்தான் செய்தார். கிராமத்திலே எல்லோரும் தூங்கும் போது சிதம்பரிமட்டும் தூங்காமல் இருக்க முடியுமா?

எப்படியோ அவர் வாழ்க்கை வண்டி, மரவேரில் தடுக்கிக், கல்லில் இடறிக், குழியில் வீழ்ந்து மேட்டிற் சரிந்து தன் பிரயாணத்தின் அந்தத்திற்கே வந்து விட்டது. தான் வந்த பாதையை ஓரோர் வேளை சிதம்பரி பின்னால் திரும்பிப் பார்த்தே இருக்கிறார். அவர் பார்வையில், தான் பிரயாணம் பண்ணிய பாதையின் வேரும், கல்லும் குழியும் தென்பட்டாலும், ஏதோ வந்து சேர்ந்து விட்டோம் என்ற திருப்திதான் மனதில் மிஞ்சியிருந்தது. அந்தத் திருப்தியில் தான் வந்தவழியில் அவருக்கு ஒரு நம்பிக்கை. அசைக்க முடியாத நம்பிக்கை; தன் மைந்தன் அருணாசலமும் அவ்வழியிலேயே வரவேண்டும் என்ற தவிர்க்க முடியாத ஆசை ... ... அவன் புதுவழியிற் பிரவேசித்து விடுவானோ என்ற பயம் ... ...

இந்த நம்பிக்கையும், ஆசையும், பயமும் சேர்ந்த ஒரு விசித்திரமான மனிதராகத்தான் சிதம்பரி, அவர் சிரேஷ்ட புதல்வன் அருணாசலத்தின் கண்களில் தென்பட்டார்.

தந்தையின் நம்பிக்கைகளும், மனப் போக்குகளும், அருணாசலத்திற்குப் பிடிக்கவில்லை. மைந்தனின் பேச்சும் செயலும் தந்தைக்குப் பிடிக்கவில்லை

அருணாசலம் அவருக்கு விளங்காத என்னென்னவோ எல்லாம் பேசினான். அவனுடைய பேச்சிலே ஒரு புதிய சமுதாயத்தின் குரல் கேட்டது. அவன் தீட்சண்யமான கண்களில், எத்தனையோ பழைய நம்பிக்கைகளைச் சுட்டெரிக்கும் புதிய ஒளி ஒன்று மின்னிற்று!

ஆனால் அவன் தந்தையாருக்கு விளங்கியதெல்லாம் 'இந்தப் பயல் வில்லங்கத்தை விலைக்கு வாங்கிக் கொள்வான்' என்ற ஆற்றாமை தான்!

ஏனென்றால் அருணாசலம் "காற்றும் நீரும் வான்வெளியும் எல்லாருக்கும் பொதுவானதைப் போலவே நிலமும் பொதுவானது, நிலத்தில் நெற்றிவேர்வை சிந்த உழைக்கும் கமக்காரனுக்கே நிலம் சொந்தமாக இருக்க முடியுமே தவிர, காணியையே கண்ணாற் பார்த்தறியாத காணிச் சொந்தக்காரனுக்குச் சொந்தமாக இருக்க முடியாது" என்று எந்தப் புத்தகத்திலேயோ படித்ததை அசாத்திய நம்பிக்கையோடு ஊருக்கெல்லாம் எடுத்துச் சொன்னான்.

சிதம்பரிக்குப் பயமாக இருந்தது. முப்பது ஆண்டுகளாகத் தன் வாழ்க்கையோடு கலந்து, தன் இன்பத்திற்கும், துன்பத்திற்கும் எதற்கும் எல்லாவற்றிற்கும் ஈடு கொடுத்து நின்ற பத்து ஏக்கர் குத்தகை வயலையும், காணிச்சொந்தக்காரன் தன்னிடமிருந்து பறித்து வேறு யாருக்கும் கொடுத்து விடுவானோ என்று அவர் ஏங்கினார்.

'கடும் வட்டி, பணமுட்டைகள்' என்ற ஊர்ப் பெரிய புள்ளிகளைத் திட்டினான் அருணாசலம்.

நொந்து கெட்ட வேளைகளில் இவனுக்கு எவருமேகடன் கொடுத்து உதவமாட்டார்களே என்று பயந்தார் சிதம்பரி.

மத நம்பிக்கைகளையும், கோட்பாடுகளையும், தேவையற்ற சம்பிரதாயங்களையும் சாக்கிய நாயனாராக நின்று கல்லாலடித்தான் அருணாசலம்.

'இவனுக்குத் தெய்வம் கருணை காட்டாதோ' என்று திகிலுற்றார் சிதம்பரி.

தந்தை வந்த பாதையில் ஆமையாய் முதுகை நிமிர்த்திக்கொண்டு படுத்திருக்கும் மரவேரைக் களைந்தெறிந்து, பூமியைப்பிறிக்கொண்டு நிற்கும் கல்லைப் புரட்டிவிட்டு, குண்டு குழிகளை நிரவிச் சௌகரியமாக வண்டி ஓட்டுவோம் என்று நம்பிக்கையோடு எதிர்பார்த்தான் அருணாசலம்.

'ஏதோ இருப்பது இருக்கிறபடியே இருக்கட்டும். நாம் வாழும் வரை வாழ்ந்துவிட்டுப் போவோம்' என்று அவநம்பிக்கைப்பட்டார் சிதம்பரி.

இருவரும் இரண்டு சமுதாயத்தின் பிரதிநிதிகள். மூத்தவர் மாற்றம் வேண்டாம் என்றெண்ணும் பழைமையின் வாரிசு. இளையவன் 'மாற்றமில்லாத ஏதுமே வளர்ச்சியடைய முடியாது' என்றெண்ணும் இளைய சமுதாயத்தின் பிரதிநிதி.

இருவரும் இரண்டு முனைகளை எதிர்நோக்கி நின்றனர்!

என்மகன் என்ற இரத்தபாசம், மகனைக் கிட்ட அணைப்பதற்குப் பதிலாகத் தூரவே பிரித்து வைத்தது.

'தந்தையாரை அல்ல; அவரின் மூட நம்பிக்கைகளை எதிர்க்கிறேன்' என்ற அருணாசலத்தின் சித்தாந்தம் இந்த இடைவெளியை இன்னமும் அதிகப்படுத்திற்று.

இரண்டு மூன்று வருடங்களாகத் தொடர்ந்து யுத்தம் நடத்திய



சிதம்பரி இப்போதெல்லாம் ஓய்ந்து போய்விட்டார்.

'இவங்களால்தானே மழை பொய்க்குது. வெள்ளம் வருகுது' என்று தன்னைப்போன்ற நரைத்த தலைகளிடம் தன்மகனையும் அவன் கூட்டத்தினரையும் திட்டுவதிலேயே தன் ஆத்திரத்தையும், ஆற்றாமையையும் தீர்த்துக்கொண்டிருக்கிறார் சிதம்பரி.

* * * * *

இன்றைக்கும் அப்படித்தான். சிதம்பரி வீட்டு முற்றத்தில், விரித்த பாயில் இருக்கிறார். அவர் முன்னால் ஒரு நரைத்த தலை' இருக்கிறது,

பகல் முழுதும் சுழன்றடித்த கச்சான் காற்றுச் சற்று வேகந் தணிந்து உயர்ந்த மரத்து இலைகளை மெதுவாக அசைத்துக்கொண்டிருக்கிறது.

இருவரும் இதமாக வெற்றிலையைச் சப்பித் துப்பிக்கொண்டிருக்கிறார்கள். முன்னால் இருந்த அரிக்கன் விளக்கு அவ்விருவர் சம்பாஷணையையும் ஆடாமல் அசையாமல் கேட்டுக்கொண்டிருக்கிறது.

"என்ன பாருங்க செய்றது? வயல் வெளைஞ்சாப் போதுமா? களம் விளைய வேணுமே. காலங் கெட்டுப்போச்சு. இந்த வருஷம் சூட்டுக் களத்துக்கே நான் போகல்லை. நம்ம காலத்திலே இப்படியா? களத்திலே பூசைபண்ணிக், காவற்கட்டுப் போடாமல் சூட்டைத் தள்ளி மாடேத்தமாட்டோம். சூடடிக்க என்று போனால் வீட்டுக்கே வாறதில்லை. பெண்கள் முகத்திலேயே விழிக்கிறதில்லை. சூட்டுக் களத்திலே மச்சம் மாமிசமே எடுக்க மாட்டோம். இப்ப என்னடா எண்டால் ஒரு ஆசாரமுங் கிடையாது. பூசையும் இல்லை, மண்ணாங்கட்டியும் இல்லை. நல்லநாள்கூடப் பார்க்காமல் நெனைச்ச நேரத்திலே சூட்டைத்தள்ளிஅடிச்சா வாரிகாணுமா? பாருங்க பத்து ஏக்கர் வயலும் இருபது அவணங்கூட அடிக்க இல்லையே ... ... உன்ரை அனுச்சாரத்தினால்தான் களம் விளையவில்லை என்று நான் சொன்னால், "களம் ஒண்ணும் விளைகிறதல்லப்பா, வயல்தான் விளையவேணும். நீங்க முப்பது வருஷத்துக்கு முதல் வயலைச் செய்கை பண்ணும்போது வயல் புதிதாக இருந்தது. அதிலே பயளையும்இருந்தது. அதனால்நன்றா விளைஞ்சுது. இப்ப வயல்ல பயளையில்லை. புதுப்புதுப்பயளைபோடுவம் என்றால், லட்சுமி விளையிற இடத்தில் எலும்புத்தூளையும் உப்பையும் போடுகிறதா என்பீர்களே "என்று அந்தப் பயல் நையாண்டிபண்றான். காலங் கெட்டுப்போச்சு ஐயா" என்று சிதம்பரி ஒப்பாரி வைக்கிறார்.

"காலங் கெட்டுப் போகவில்லையப்பா, மாறிக்கொண்டு வருகிறது" என்கிறான் அப்போதுதான் வெளியிலிருந்து வந்த அருணாசலம்.

பெரிய மனிதரோடு பேசுகையில் இடைமறித்த அருணாசலத்தைச் சிதம்பரி முறைத்துப் பார்க்கிறார்.

விதைப்புக் காலத்தில் தான் கடனாகக் கொடுத்த மூன்று அவ

ணம் நெல்லிலேயே ஏகாக்கிர சிங்தையனுக இருந்த விருந்தாளி "என்ர நெல்ல நாளைக்குக் கொண்டு வருவியா தம்பி" என்று இதமாகக் கேட்கிருர். தந்தையும் மகனும் எக்கேடு கெட்டாலும் அவருக்கென்ன?

எவ்வளவு என்று சொல்லுங்களேன், "நாளைக்கே கொண்டு வருகிறேன்" என்கிருன் அருணுசலம்.

"இதென்ன தம்பி புதுக் கேள்வி கேட்கிருய்! மூணு அவணம் தந்தனுன். வட்டியும் சேர்த்து நாலரை அவணந்தானே வழக்கம்." என்கிருர் வட்டிக்குக் கொடுத்த நரைத்ததலை.

"வழமை ஒன்றும் வேண்டாம், நியாயப்படி, சட்டப்படி, எவ்வளவு என்று சொல்லுங்கள்" என்கிருன் அருணுசலம்.

அவனை இன்னமும் பேசவிட்டால் நிலைமை எக்கச் சக்கமாகப் போய்விடும் என்று எண்ணமிட்ட சிதம்பரி, "என்னை நம்பித்தானே அவனுக்குக் கடன் கொடுத்தீங்க, அவனிடம் என்ன கேள்வி, நீங்க போங்க, நாளைக்கே நான் நாலரை அவணத்தையும் கொண்டு வந்து தருகிறேன்" என்கிருர்.

"முடியாது, நாலரை அவணம் கொடுக்க முடியாது, நாலுமாசத்துக்கு முன்புதான் மூன்று அவணம் வாங்கினேம்; இப்போ நாலரை அவணம் கொடுப்பதாக இருந்தால் வருடத்திற்கு நூற்றைம்பது வீதம் வட்டியா? சட்டப்படி வருட வட்டி பன்னிரண்டு வீதந்தான். வட்டியாக ஒரு சாக்கு நெல்லுக்குமேல் ஒரு சுண்டும் தர மாட்டேன்" என்று குமுறுகிருன் அருணுசலம்.

சரேலென்று பாயை விட்டு எழுந்த வட்டிக்காரர், அருணுசலத்தை எரித்து விடுபவர்போல முறைத்துப் பார்த்துவிட்டு "போக்கிலிப் பயலே, உன்னை நான் கோட்டிலே பார்த்துக் கொள்கிறேன்" என்று உறுமிவிட்டுத் தெருப்படலையைத் திறந்து வெளியேறுகிருர்.

"நல்லாப் பாருங்க, அங்கே போனுல்தான் எனக்கு மட்டுமல்ல, என்னைப் போன்ற எல்லா உழைப்பாளிகட்குமே நியாயம் பிறக்கும்" என்கிருன் அருணுசலம்.

ஆம், அவன் பேச்சிலே ஒரு புதிய சமுதாயத்தின் குரல் கேட்டது. அவனுடைய தீட்சண்யமான கண்களிற் பழைய வழமைகளைச் சுட்டெரிக்கும் புதிய ஒளி ஒன்று மினனிற்று.

ஆனுல் சிதம்பரியின் நெஞ்சத்தில் அந்தக் குரல் எட்டவில்லை. புதிய ஒளி அவர் இதயத்தைத் தீண்டவும் இல்லை. அவர் இன்னேர் சமுதாயத்தின் வாரிசு. அருணுசலம் புதிய சமுதாயத்தின் பிரதிநிதி!





சிலாபம் முன்னீசுவர ஆலயம்

முன்னீசுவரம், இராமேசுவரம், கோணேசுவரம், கேதீசுவரம், நகுலேசுவரம் எனப்படும் பஞ்சேசுவரங்களுள் முன்னீசுவரமே முதற்றோன்றியதென்பது சரித்திரம். தக்ஷிணகைலாசபுராணம் இத் தலப் பெருமையை விபரிக்கிறது. இராமபிரான் தொழுத தலமிது.

"உள்ளத்துக்கு இன்பத்தையும், உடலுக்கு உறுதியையும், உழைப்புக்கு ஓய்வையும், ஊருக்கு உல்லாசத்தையும் அளிக்கும் மட்டக்களப்பு நாட்டுக் கூத்து தனிச்சிறப் புடையதாகும்.

தனது கணவன் ஆடலிலே வல்லான் எனக் கேள்விப்படும்போது மட்டக்களப்புக் கிராமிய மங்கை பெருமிதங் கொள்ளுகிருள்!''

தமிழக ஏடுகளிலும் ஈழத் திதழ்களிலும் சிறந்த சரித்திரக் கதைகள் எழுதி வரும் கிழக்கிலங்கை எழுத்தாளர் அருள்-செல்வநாயகம் கிராமிய இலக்கியம்மூலம் பல்லாண்டாகத் தொண்டனுடன் தொடர்பு கொண்டுள்ளார்.



# நாட்டுக்கூத்து

அருள் - செல்வநாயகம்

நூல்களைப் படித்துச் சுவைத்து இன் புறுவதற்குப் பொழுது கிடைக்காதவர்களுக்கும், எழுதப் படிக்கத் தெரியாதவர்களுக்குமாக வகுக்கப் பட்டதே நாடகத்தமிழ்.

உலக இயல்பினை. வாழ்க்கை நியதியினை எடுத்துக் காட்டுகிறது நாடகம். ஆமாம், காட்சி இன்பமும், உடல் இன்பமும் ஒருங்கே பயக்கும் நாடகத்தமிழ் எல்லாரையும் எப்பொழுதும் கவரவே செய்கிறது.

பண்டைக்காலத்திலே நாடகங்கள் மதத்தைப் பரப்பும் நோக்கத்தினுக்காகவே நடத்தப் பெற்றன. கோயில் திருவிழாவின் போது நாடகங்கள் நடிக்கப்பெற்றன.

ஆடலையும், பாடலையும் கொண்டு அன்று விளங்கிய நாடகம் காலவரையில் உரையாடலையும் தன்னகத்தே சேர்த்துக் கொண்டிருந்தது. ஆகவே கி. பி. மூன்றும், நான்காம் நூற்றுண்டுகளிலே நாடகத்தமிழ் வேத்தியல், பொதுவியல் என இரு வேறு வகைப் படுத்தப்பட்டு முடியுடை மன்னவர்களால் வளர்க்கப்பட்டது.

மன்னவர்களால் வளர்க்கப்பெற்று வந்த நாடகத்தமிழ், இயல், இசை நூல்களின் தனிப்பெருக்கால் கைநெகிழ விடப் படலாயிற்று.

படித்தவர்களால் நாடகத்தமிழ் கை நெகிழவிடப்பட, அது பாமர மக்கள் கைப்பட்டு நாடகம் என்ற பெயரை விடுத்து, கூத்து என்று வழங்கப் பெறலாயிற்று.

பாமரமக்கள் கைக்கொண்ட கூத்து கிராமங்கள் தோறும் வளரத் தொடங்கிற்று. கிராமங்கள் தோறும் கொலுவீற்றிருக்கும் கூத்தினுக்கு கி. பி. பதினேழாம் நூற்றுண் டிற்றுன் நூல்கள் தோன்றின.

கூத்துநூல்கள் எழுந்ததின் பயனுக கிராமங்களிலே தனியோர் மறுமலர்ச்சி ஏற் பட்டது. உழைப்பின் உன்னத பயன்கண்ட கிராமமக்கள் அனைவரும் தங்களது ஓய்வு

நேர, உல்லாசப் பொழுதுபோக்காகக் கூத் தாடத் தொடங்கினுர்கள்.

கிராமங்கள்தோறும் எழுந்த கூத்துக் களிலே, எத்தனையோ விதங்கள் தெருக் கூத்து, களைக்கூத்து, மேடைக்கூத்து. இவ்வாருக இன்னும் பல விதங்களாகக் கூத்துக்கள் தோன்றின. வளர்ந்தன. அவைகளுள் மட்டக்களப்பு நாட்டுக்கூத்தும் தனியொரு வகையாகும்.

உள்ளத்துக்கு இன்பத்தையும், உட லுக்கு உறுதியையும், உழைப்புக்கு ஓய் வையும், ஊருக்கு உல்லாசத்தையும் தரும் மட்டக்களப்பு நாட்டுக்கூத்து தனிச்சிறப் புடையதாகும்.

மட்டக்களப்பு நன்னுட்டிலே, கிராமங் கள்தோறும் கூத்துக்கொட்டகைகள் துலங்கு வது கண்கொளாக் காட்சியே. மத்தளத் தின் இன்னெலியும், சல்லரியின் இசை ஒலியும், சதங்கையின் நாதமும், பண்ணின் பரவசமும் மட்டக்களப்புக் கிராமங்கள் தோறும் எழுந்துகொணடேயிருக்கின்றன.

மட்டக்களப்பு நாட்டுக்கூத்துக்கள் வட மோடி, தென்மோடி என இருபிரிவினைக் கொண்டது. வடமோடி, தென்மோடியென இருவேறு கூத்துக்களும் எத்தனையோ வகைகளில் வேறுபட்டிருக்கின்றன, தாளம், உடை, ஆடல் என்பன முதன்மை யான வேறுபாடுகளாகும்.

வடநாட்டிலிருந்து வந்து, தமிழகத்திலே புகுந்ததைத்தான் வடமோடி எனலாம். தமிழகத்தினுக்கே சொந்தமானதுதான் தென்மோடி.

வடக்கே இருந்து வந்தவர்கள் தெற்கை ஆக்கிரமித்துக்கொண்டார்கள், ஆதலினுற் றுன் வடமோடிக் கூத்துக்கள் பெரும்பாலும் வீரக்கதைகளாக இருக்கமுடிந்தன, பெருமை பேசிய ஆரியர்கள் வீரத்தைத்தானே மதிப்பார்கள்.

தென்மோடியோ, காதற் கதைகளாக வும், வாழ்க்கைக் கதைகளாகவும் அமைந்து விட்டன. தெற்கிலே வாழ்ந்த தமிழர்கள் காதலை மதித்தார்கள்; [illegible]ந்தார்கள். மனித இனத்தின் இலட்சியங்களைப் போற்றி ஞர்கள். பெருமைப்படுத்தினுர்கள். ஆதலி னுற்றுன் அவர்களது கதைகள் துன்பத் திலே தோய்ந்து இன்பமதத்தும்பி நிறைந்த காக அமைந்தன.

வடமோடிக் கூத்துக்கழும், தென் மோடிக் கூத்துக்களும் மட்டக்களப்புப் பகுதியில் அதிகமாக ஆடப்பெற்று வரு கின்றன.

பதினெட்டாம்போர், குருக்கேத்திரன் போர், சூரன்போர், வீரகுமாரன், குசலவன் என்பன வடமோடிக் கூத்துக்களாகும். இந்த வகையிலே இன்னும் அதிகமான வடமோடிக் கூத்துக்கள ஆடப்பெற்று வருகின்றன.

அலங்காரருபன், பாமாவிசயம், பவள வல்லி, சராசந்தன், அல்லிராணி, நல்லதங் காள் என்பவைகள் தென்மோடிக் கூத்துக் களாகும்- இவ்வாறே இன்னும் ஏராளமான தென்மோடிக் கூத்துக்கள் ஆடப்பெற்று வருகின்றன.

கூத்துக்கள் சுருங்கி விலாசமாகின. விலாசத்தின் சுருக்கமே இன்றைய நாடக மாக வளர்ந்து நிற்கிறது.

இன்றைய நாடகத் தோற்றத்தினுக்குக் காரணம் கூத்தேயாகும். ஆதலினுற்றுன் எமது பண்டைத் தமிழர்கள் அன்றும் கூத்து என்றே கூறினுர்கள். ஆடினுர்கள். அகம் மகிழ்ந்தார்கள்.

மட்டக்களப்பு நன்னுடு இயற்கைவளம் கொழித்த ஓர் பொன்னுடு. நீர்வளம் சிறந்த இனிய நன்னுடு ஆகவே மட்டக்களப்பு மக்கள் இயற்கையை வளம்படுத்தி வாழ்க் கையை அமைத்து வாழ்கிருர்கள், ஆமாம்! மட்டக்களப்பிலே எங்கு பார்த்தாலும் ஒரே



பசுமை! பரந்த வயல்வெளிகள்! பசுமை யிலே உழுதுணடு இன்பம்காணும் மட்டக் களப்பு மக்கள் உழைப்பது மூன்று திங் களே! பாடுபட்டுப் பயன்பெறுவது மூன்று திங்களேதான். ஓய்வு பெறுவது ஒன்பது திங்கள். ஆதலினுல் ஒன்பது திங்கள் ஓய்வை உல்லாசமாகப் பயன்படுத்தக் கூத்தினை மேற்கொண்டார்கள்- அன்று தமது உல்லாசப் பொழுதுபோக்காகக் கூத்தினைக் கொண்டமக்கள் இன்றும் கொண்டுள்ளார்கள். ஆதலினுற்றுன் கிரா மங்கள்தோறும் சதங்கையின் இன்னெலி எழுந்துகொண்டிருக்கின்றது.

கூத்தினைப் பழக்கும் ஆசிரியரை 'அண்ணுவியார்' என்றழைப்பார்கள்; தாளத் திலே கைதேர்ந்தவராக இருப்பார்.

கூத்துநடைபெறும் இடம் ''கூத்துக் களரி'' எனப்படும். பழகும் காலங்களிலே சிறுகொட்டகைகள்போற் கட்டிக்கொள்வார் கள். அரங்கேற்றம் நடைபெறும்போது வட் டமான பெரிய உயர்ந்தமேடை அமைக்கப் படும். சூழவரமக்கள் இருந்து பார்ப்பதற் காகவே வட்டமாக, உயரத்திலே அமைக் கப்படுகிறது.

பலதிங்கள் ஆடிப்பழகியபின்னர் சலங்கை கட்டுதல் என்னும் வைபவம் நடைபெறும். சலங்கை கட்டும் வைபவம் பழகிய கொட்ட கையிலே பகல் வேளையில் நடைபெறும். சலங்கை முதன்முதலாகக் கட்டி ஆடுவ தனுற்றுன் ''சலங்கை கட்டுதல்'' எனபபடு கிறது. இதற்குப் பின்னர் சலங்கைகட்டிக் கொண்டுதான் ஆடிப்பழகுவார்கள், பல திங்கள் சலங்கைகட்டி ஆடிப்பழகிக்கொணட பின்னர்தான், இரவிலே 'அரங்கேற்றம்' நடைபெறும். அரங்கேற்றத்தின்போது எல் லாரும் தங்களது பாத்திரங்களுக்கேற்ப ஆடைகள் அணிந்துகொள்ளுவார்கள், மன் னவனென்ருல், ஆடை அலங்காரம் முழு வதும் சரியாக மன்னவனுகவே இருக்கும்.

அரங்கேற்றம் பெரும்பாலும் கோயில் வீதியிற்றுன் நடைபெறும். சிலவேளை பரந்த



வெளியிலே ஆயிரக்கணக்கான மக்கள் பார்த்து மகிழக்கூடிய இடத்திலேயும் அரங் கேற்றம் நடைபெறும்.

கூத்து ஆரம்பமாகுவதற்கு முன்னர் கட்டியகாரன் தோன்றுவான். அரங்கேற் றத்தின்போது கோமாளிவேடம் புனைந்து ஒருவர்தோன்றி முதலில் நகைச்சுவை யூட்டுவார். பின்னர் அரங்கேற்றம் முடியும் வரை இடையிடையே தோன்றிப் பொது மக்களைச் சிரிப்பினுள் ஆழ்த்துவார். கட்டிய காரன் கூத்தின் கதாநாயகனுடைய வர வினை எடுத்துச் சொல்லுவான். கட்டிய காரன் மன்னவனது அல்லது கதாநாயக னது ஏவலைச் செய்பவனுக அமைவான். கட்டியகாரன் தோன்றிய பின்னர்தான் கூத்து ஆரம்பமாகும். கூத்தின் கதையும் தொடங்கும்.

கதாபாத்திரங்கள் மேடையில் தோன்று வதற்கு முன்னர், மேடையிலே அண்ணுவி யார் சல்லரியுடன் நிற்பார். பக்கலிலே மத் தளம் அடிப்பவர் நிற்பார். பிற்பாட்டுப் பாடுவதற்காக வேறு சிலரும் நிற்பார்கள். அவர்களுடன் கூத்து ஏடுபார்ப்பதற்காகவும் ஒருவர் ஏட்டுடன்நிற்பார். கூத்தாடுபவர்கள் தடுமாறும் இடங்களில் ஏடு பார்ப்பவர் உதவுவார். இவர்கள் அனைவரும் கூத்து ஆரம்பமாகி முடிவுறும்வரை களரியிலே அல்லது மேடையிலே நிற்பார்கள்.

ஒவ்வொரு பாத்திரமும் முதலில் களரி யில் தோன்றும்போது ஒரு வரவு வைக்கப் படும். இந்த வரவிலே கூத்தின் உன்னத ஆட்டங்களெல்லாம் தாளக்கட்டினுக்கேற்ப நடைபெறும்.

வரவு ஆட்டங்களும், தாளக்கட்டுகளும் கதாபாத்திரங்களுக் கேற்ப வேறுபட்டவை களாக இருக்கும். கூத்தின் முக்கியத்துவத் துக்கேற்பப் பாத்திரங்களுக்கேற்ப வரவு தாளக்கட்டுகள் அமையும். பெண் கதாபாத் திரங்களுக்கேற்ப மென்மையான தாளக் கட்டுகள் அமையும். மத்தளமும், சல்லரியும் தாளக்கட்டுகளை அப்படியே சொல்லும்,

“தகதிகதா தெய்யத் தெய்தெய்
தாத்தெய்யத்தோம் தகதிகதா”

என்று தாளக்கட்டு தொடங்கும். வடமோடி தென்மோடிக் கேற்ப இந்தத் தாளக் கட்டுகள் வேறுபட்டதாக இருக்கும். தாளக் கட்டினுக்கேற்ப எத்தனையோ வகைவகை யான ஆட்டங்கள் இருக்கின்றன. ஏலவே தொடங்கிய தாளக்கட்டு,

“தகதத் தகதத் தகதத் தகத
தந்தரி நாதரி தகுந்தரி குகுந்தரி
தந்தரி நாதரி தகுந்தரி குகுந்தரி
சணுத்தச் சணுத்தச் சணு தகத்திங்
கணத் தோம்

சணுத்தச் சணுத்தச் சணு தகத்திங்
தகத்திங்கணத் தோம். [கணத்தோம்
தாம் தாம்தக தந்தரிகிடதக
தீந்தாரத் தில்லானு தந்தரி
தகணக சுந்தரி ததிமிர்த்தகிட தெய்
தகணக சுந்தரி ததிமிர்த்தகிட தெய்
தளங்கு தித்திக தகத்திங்கணத் தோம்
தகத்திங் கணத்தோம்
தகத்திங்கணத் தோம்”

என்றுமுடியும். இந்தத் தாளக்கட்டு ஆட்டம், அபிநயம் வரவினபோது தொடங்கி நடு அரங்கில் ஆடி களரி சுற்றிவர ஆடி வருவார்கள். தாளக்கட்டு ஆட்டம்முடிய வேட தாரி பாடுவார். அவரது பாட்டினைக் களரி யில நிற்போர்கள் இரட்டிப்பார்கள். பின்னர் திரும்பப்படித்துமுடிய அதற்கேற்ப ஆட்டம் நடைபெறும்.

வடமோடித் தாளக்கட்டுகளும் ஆட்டங் களும் சிறிது இலகுவானவைகள். தென் மோடித் தாளக்கட்டுகளும், ஆட்டங்களும் மிகவும் கஷ்டமானவைகள். தமிழர்கள் பாலை வனத்தைச் சோலை வனமாக்குகிறவர்களா யிற்றே. ஆகவே கஷ்டம்என்று தென்னகத் தார் சிறிதும் மனங்கலங்கமாட்டார்களென் பதை அவர்களது கூத்துக்களே எடுத்துக் காட்டுகின்றன.

கூத்து ஆடுகிறவர்கள் படிக்கும் பாட் டுக்கள் இரட்டித்த பின்னர் தாளம் தீர்க்கப் படும். ஒவ்வொரு பாட்டினுக்கும் அண் ணாவியார் தாளம் தீர்ப்பார்.

“தகத்திங்கணத்தோம்” என்றே தாளம் தீர்க்கப்படும்- ஆட்டத்தில் நாலடி, எட்டடி என்றெல்லாம் ஆட்டங்கள் வகுக் கப்பட்டிருக்கின்றன. பாட்டுகளுக் கெல் லாம் நடிகர்கள் அபிநயமும் பிடிபபார்கள். அபிநயம் பிடிப்பதோடு சுற்றியும் ஆடு வார்கள். வடமோடியிலே வலப்பக்கமாகவும், தென்மோடியிலே இடப்பககமாகவும் திரும் புதலும், சுற்றி ஆடுதலும் விசேஷமாகக் கவனிக்கப்படும்,

ஆட்டங்களுக்கும், மோடிகளுக்கும் ஏற்ப உடை அலங்காரத்திலும் பேதங்கள் இருக் கின்றன. வடமோடி கூத்து உடைகள் பாரங்கூடியவைகளாகவும், பகட்டானவை களாகவும் இருக்கும். தென்மோடிக்கூத்து உடைகள் பாரமற்றவைகளாகவும், இயற்கை யாக அமைந்தவைகளாகவும் இருக்கும்.

வடமோடிக்கூத்திலே மன்னவன் முடி புனைவான். இந்தமுடி உயர்ந்ததாகவும், கண்ணுடிகள் பொருந்தியதாகவும் இருக்கும். தென்மோடிக்கூத்திலே மன்னவனது முடி பூமுடியாக இருக்கும். இதேபோற்ருன் ஏனைய ஆடை அணிகளும் அமைந் திருக்கும்.

தென்மோடி ஆடைகள் பட்டாலும் மணியாலும் வேட்டி சேலைபோன்றே இருக் கும். வடமோடியிலோ கர உடுப்புக்களை அணிவார்கள். இடையிருந்து கால்வரையும் படிப்படியாக அகன்றுகொண்டே செல்லும் இந்த உடைகள் வட்டமாக இடையைச் சுற்றிக் கட்டப்படும்.

காளையர்களுக்கு தேகப்பயிற்சி அளிப் பதுபோல், உடலுறுதியைக் கொடுக்கும் மட்டக்களப்பு நாட்டுக்கூத்து, நமது புரா தனக்கலை அழிந்து போகாவண்ணம் காப் பாற்றப்பட்டு வருகிறது ஒரு வரப்பிரசாதமே!

கூத்தாடுவதில் திறமை பெற்றவர் களைக் கன்னிப்பெண்கள் போட்டாபோட்டி



யாகக் காதலிப்பார்கள். அழகிகளை மணக்கக் காளையர்கள் அதிகமாகக் கூத்தில் முக்கிய பாத்திரங்களை விரும்பி ஏற்பார்கள்.

தனது கணவன் ஆடலிலே வல்லான் எனச் சொல்லக்கேட்டால் மட்டக்களப்புக் கிராமிய மங்கை பெருமிதங் கொள்கிருள்.

காதலிகளைப்பெறும் மட்டக்களப்பு நாட் டுக்கூத்து தனியொரு கவர்ச்சியானதே யாகும். கதாபாத்திரத்தின் பெயரே நடிகர் களுக்குக் கிராமத்தில் பெருவழக்காகியும் விடுகிறது. சூரனுக்கு முருகன் ஆடினுல், அவனைச்சூரன் முருகன் என்றழைப்பார்கள். இந்தவகையிலே தர்மன் சின்னத்தம்பி; அருச்சுனன் கணபதி என்ற பெயர்களும் நிரந்தரமாகக் கிராமங்களிலே நிலைத்து விடுகின்றன.

மட்டக்களப்பு நாட்டுக்கூத்து கிராம மக்களின் வாழ்க்கையிலே இரண்டறக் கலந்துகிடக்கிறது. எல்லாரது பாராட்டு தலுக்கும் உரித்தான கூத்து அலங்கார ரூபனுகும்.

அழகான பாடல்களாலும், அற்புதமான ஆடலாலும் சிறந்த அலங்காரரூபன் கூத் துப்போல் இன்னும் எத்தனையோ கூத் துக்கள் மட்டக்களப்புப் பகுதியில் ஆடப் பெற்று வருகின்றன. இருந்தாலும் அன்று கூத்தாடுவதில் மக்களுக்கு இருந்த ஆர்வம் போல் இன்றில்லை.

காலநீரோட்டத்தின் நாகரிகப் பயனுய்க் கிராமியக் கலைகள் கைநெகிழ விடப்பட்டு வருகின்றன. கிராமங்கள்தோறுங் கூத்து மேடைகள் இருக்கவேண்டிய இடங்களில் சினிமாக் கொட்டகைகள் இருக்கின்றன. கூத்தாடுவது அநாகரிகம் என்ற எண்ணப் பாங்கு இன்றைய வாலிபர்களிடம் மெது வாகப் பரவிக்கொண்டு வருகின்றது. இந்த நிலை நீடித்தால் இன்னுமோர் தலைமுறை யிலே மட்டக்களப்பு நாட்டுக் கூத்து அழிந்துவிடும். இந்நிலைமை ஏற்படா வண்ணம் காக்கவேண்டியது தமிழர்க ளுடைய தலையாய கடமையாகும்.





இன்று புகழெனும் எவரெஸ்ரில் ஏறிநிற்கும் மூவருள் ஒருவரான எழுத்தாளனின் மூன்று அவதாரங்களையும், அந்த எழுத்தாளனின் உதரத்திலிருந்து 'கரு' உடலும் 'கருத்து' உயிரும் கொண்டு பிறக்கும் சிறு கதைக் குழந்தையின் சாமுத்திரிகா லட்சணத்தையும் விளக்குகிறார் சிறந்த மாத இதழ் "கலைச்செல்வி" யின் ஆசிரியர்—கருத்துச்சிற்பி—எழுத்தாளர் சிற்பி.

# நல்ல சிறுகதை எழுதுவது எப்படி?

— சிற்பி —

**பு**கழ் பெற்று வாழவேண்டும் என்ற ஆசை எல்லாரிடமும் இருக்கின்றது. "தோன்றிற் புகழொடு தோன்றுக" என்று வள்ளுவருந்தான்கூறியிருக்கின்றாரே! மூன்று வகையான மனிதர்கள் இன்று புகழுடன் வாழ்வதைக் காண்கின்றோம்: சினிமா நடிகர், அரசியல்வாதி, எழுத்தாளன்.

இம்மூவகை மனிதர்களுள் எழுத்தாளனுக்கு ஒரு முக்கிய இடம் இருக்கின்றது. எழுத்தாளனின் புகழ் தூய்மை நிரம்பியது; நிரந்தரமானது.

இதனாற்றானே என்னவோ இன்றைய இளைஞர்கள் பலர் எழுத்தாளராவதற்கு விரும்புகின்றார்கள்; மற்றைய எழுத்தாளர்களைப் பற்றி அறிய ஆவல் கொள்கின்றார்கள்; தலைசிறந்த எழுத்தாளராகித் தாரணியெங்கும் புகழ்பரப்பி வாழ்வதைத் தம் இலட்சியமாகக் கொண்டுள்ளார்கள். சிறுகதைத் துறையில் இறங்கி, நல்ல சிறுகதை எழுத்தாளராக வரவேண்டும் என்ற ஆசை நம் நாட்டு இளைஞர்களிடம் அதிகமாகக் காணப்படுகின்றது.

ஆசையும் இலட்சியமும் மனதில் இருந்தால்மட்டும் போதுமா? இவற்றை அடைவது எப்படி?

இந்தக் கேள்விகள் வேறொரு முக்கிய கேள்வியைப் பிறப்பிக்கின்றன. நல்ல சிறுகதை எழுதுவது எப்படி?

முதலிற் சில நல்ல சிறு கதைகளைப் பார்ப்போம். 'பவானி' யின் **"காப்பு"** (கலைச் செல்வி), 'புதுமைப் பிரியை'யின் **"நல்ல முத்து"**, (கலைச்செல்வி) 'சு. வே.' யின் **"வெறி"** **(தினகரன்)** ஆகிய கதைகளைப் படித்திருக்கின்றீர்களா? சமீப காலத்தில் நான் படித்து ரசித்த மிகநல்ல சிறுகதைகள் இவை.

குரூபியாகப் பிறந்து பிறரின் கேலிக்கும் பழிப்பிற்கும் ஆளாவது ஒருவருக்கு எவ்வளவு வருத்தத்தைத் தரும்? நாம் தெரிந்து கொண்டு செய்யாத ஒரு பிழைக்காக, நமது சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு விஷயத்திற்காக, வாழ்நாள் முழுவதும் வாடிக் கலங்க வேண்டியிருக்கின்றதே! ஆனால், சில சந்தர்ப்பங்களில், அழகற்ற அவலட்சணத் தோற்றமும், எவருமே எதிர்பார்க்காத பெரிய நன்மைகளைச் செய்துவிடுகின்றது என்பதைக் காட்டி, புற அழகின் அபாயத்தையும், உள் அழகின் அனுகூலத்தையும் தெளிய வைக்கின்றது "காப்பு".



முதலில் ஒரு பெண்ணைக் காதலித்த ஆசிரியர் ஏதோ காரணத்தினால் அவளை மறந்துவிட்டு வேறொரு பெண்ணைக் கல்யாணஞ் செய்துகொள்கின்றார். வஞ்சிக்கப் பட்டவளின் தாய் தன் ஆத்திரமனைத்தையும் கொட்டுவதற்கு—இரகசியத்தைச் சொல்லிப் புதுப் பெண்ணின் வாழ்க்கையையும் முட் படுக்கையாக்குவதற்கு—பழிக்குப் பழி வாங்குவதற்கு — அவளைத் தேடிச் செல்கின்றாள். ஆனால் அந்தப் புதியவளின் களங்கமற்ற முகம், கனிவான பேச்சு, கழுத்தில் மின்னிய தாலி — தமிழ்த்தாய்மையின் பரம்பரைச் சின்னம் — கிழவியின் மனத்தில் ஒரு தெய்வீக உணர்ச்சியை ஏற்படுத்துகின்றன. வைவதற்கு வந்த "நல்ல முத்து" வாயார வாழ்த்திவிட்டுத் திரும்புகிறாள்.

பிறருக்குத் தொண்டு செய்யவேண்டும் என்ற ஆர்வம் சிலருக்கு "வெறி"யாக மாறி விடுகின்றது. தம் சிந்தனையையும் செயலையும் மற்றையோரின் மேன்மைக்காகவே செலவு செய்கின்றனர். இப்படியான தொண்டு 'வெறி' கொண்டவன்தான், யாருமற்ற, எதுவுமற்ற அனாதை முத்து. வாழ்நாள் முழுவதுமே மற்றையோருக்கு உதவி செய்வதிலேயே கழிகின்றது. கடைசியில், காரிலடிபட்டு இறக்கும்போதும், காரிலடி படவிருந்த வேறொருவரைக் காப்பாற்றி விட்டோமே என்ற நிறைவுடன்தான் இறக்கின்றான், அனாதை முத்துவின் அவலச் சாவிற்காக ஆயிரமாயிரம் பேர் கண்ணீர் வடித்திருப்பார்களே!

ஒன்றுக்கொன்று முற்றிலும் முரண்பட்ட இரண்டு வேலைகளை நல்ல சிறுகதைகள் செய்கின்றன. முதலில் நமது சிந்தனையைக் கட்டுப் படுத்தி, மனத்தை உணர்ச்சிமயமாக்குகின்றன. முடிவில், உணர்ச்சியைக் கட்டுப் படுத்தி எம்மைச் சிந்திக்க வைக்கின்றன. நல்ல கதைகளைப் படிக்கும் போது நமது புறச் சூழ்நிலை மறைகின்றது, நம்மை நாமே மறந்து கதா பாத்திரங்களுடன் கலந்து விடுகின்றோம். பாத்திரங்களின் தன்மைக் கேற்ப அழுகின்றோம், சிரிக்கின்றோம், ஆத்திரப்படுகின்றோம், அனுதாபப் படுகின்றோம். கதையைப் படித்து முடித்ததும் மனதில் நிறைவு ஏற்படுகின்றது. இதுவரை எழுத்தாளரின் சொற்களுக்குக் கட்டுப்பட்டிருந்த சிந்தனை, இப்போது விடுதலை பெற்று, மேற்கொண்டு சிந்திக்கத் தொடங்குகின்றது. கதை முடிந்ததன்பிறகு நடைபெறக்கூடிய, நடைபெற வேண்டிய நிகழ்ச்சிகளைப் பற்றிச் சிந்திக்கின்றது.

இத்தனை சக்தி படைத்த நல்ல சிறு கதைகளை எழுதுவது எப்படி?

காளி கனவில் தோன்றிக் 'கவி பாடு' என்று கட்டளை இடுவதும், இறைவனே முதலடி எடுத்துக் கொடுப்பதும் இந்தக் காலத்தில் நடக்க முடியாத நிகழ்ச்சிகள். நம்மைப் போன்ற சாதாரண மனிதர்கள், சுய முயற்சியினால் கற்றுத் தேர்ந்து கையாள வேண்டிய கலை இது!

எழுத்தாளராக வர விரும்புபவர்கள் சில முக்கிய விஷயங்களைக் கவனிக்க வேண்டும்.

ஏதாவதொரு நல்ல கருத்தை—சிறந்த இலட்சியத்தை மக்களின் மனத்தில் பதிக்க வேண்டும் என்றஆசை மனத்தில் அரும்பி, மெல்ல மெல்ல வளர்ந்து பெரிதாகி, அடக்க முடியாத வெறியாகி வெடித்துக் கிளம்பும் நிலை ஏற்படும் வரைக்கும் கதை எழுதுவதற்கு எழுதுகோலை எடுக்கவே கூடாது. நல்ல கருத்து ஒரு கதையின் உயிர்.

உயிரை வெறுமனே உலாவ விட முடியாது. உயிர் தங்குவதற்கு ஓர் உடல் தேவை. கற்பனையும் உண்மையும் கலந்த —மனிதனின் நம்பும் சக்தியை அளவிற்கு மீறிச் சோதிக்காத—சில சம்பவங்களைக்

கோத்து, அவற்றினிடையே "கருத்தை"க் கொலுவீற்றிருக்கச் செய்தல் வேண்டும். இந்தச் சம்பவங்கள்தான் கதையின் "கரு".

உடலும் உயிரும்—கருவும் கருத்தும் ஒன்று சேர்ந்து விட்டன. குழந்தை பிறந்து விட்டது. ஆடையும் ஆபரணங்களும் அணிந்து குழந்தையை அழகுபடுத்த வேண்டாமா? அழகு படுத்தும் வேலையில் நமக்குக் கை கொடுப்பதுதான் நமது மொழி வளம். இனிமையான, எளிமையான, அழகான சொற்களைக் கையாண்டு கதையை அழகுபடுத்த வேண்டும்.

நாம் பெற்ற செல்வத்தை நன்முக வளர்ப்பதற்கு வேறும் சில விஷயங்களில் கவனம் செலுத்த வேண்டும்.

மற்றைய எழுத்தாளர்களின் சிறுகதைகளையும், பிறநாட்டுச் சிறுகதைகளிற் சிறந்தவற்றையும் படிக்க வேண்டும். நம் நாட்டு மக்களின் வாழ்க்கை முறை, பழக்க வழக்கங்கள், பண்பாட்டு வளர்ச்சி, அவர்களுடைய ஏக்கம், நோக்கம்—ஆகியவற்றை ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

ஒருவர், தனக்குப் பிடித்த வேறொரு எழுத்தாளரின் கதைகளைத் திரும்பத் திரும்பப் படிப்பதால் பல நன்மைகள் ஏற்படுகின்றன. தன் அபிமான எழுத்தாளரைப் பின்பற்றி ஆரம்பத்தில் கதைகள் எழுதுவதில் தவறில்லை. ஒரு கதையைப் படித்து முடித்தவுடன் அதே கதையை ஞாபகத்திலிருந்து எழுத முயல்வதோ அல்லது அதே சம்பவங்களைத் தன் சொந்த நடையில் எழுதிப் பார்ப்பதோ நல்ல பயிற்சிதான். ஆனால் காலம் செல்லச் செல்ல இவற்றைக் கைவிட்டுவிட வேண்டும். "தனித்தன்மை"யை வளர்க்க வேண்டும்.

நல்ல சிறுகதை எழுதுபவன் ஒரே சமையத்தில் மூன்று "அவதாரங்கள்" எடுக்கின்முன்: படைப்பாளி (எழுத்தாளன்); படிப்பாளி (வாசகன்)! பகுத்தறிவாளி (விமர்சகன்). இந்த அவதாரங்கள் எழுதுபவனின் மனத்திலே விநாடிக்கு விநாடி, நிமிடத்திற்கு நிமிடம் மாறி மாறி நிகழவேண்டியவை. கருவையும் கருத்தையும் உற்பத்தி செய்து உருவம் கொடுக்கும்போது அவன் எழுத்தாளனுக இருக்கின்முன். அடுத்த விநாடி, தான் எழுத்தாளன் என்பதை மறந்து, முன் பின் பரிச்சயமில்லாத ஒரு வாசகனின் நிலையிலிருந்து அவற்றைப் படித்துப் பார்க்கின்முன். படித்துவிட்டால், பின் விமர்சகனுக மாறி, தயவு தாட்சணியமின்றி குறைவு நிறைவுகளை, நன்மை தீமைகளை ஆராய்கின்முன். சம்பவங்கள் சரியான முறையில் பின்னப் பட்டிருக் கின்றனவா? சொல்ல விரும்பிய கருத்து, சொல்ல வேண்டிய முறையில் சொல்லப்பட்டிருக்கின்றதா! என்பவற்றைக் கவனித்து வெட்ட வேண்டியவற்றை வெட்டி, ஒட்ட வேண்டியவற்றை ஒட்டுகின்முன். இத்தகைய அவதார மாற்றங்களின்பின், எழுதப்பட்ட கதை எழுத்தாளனுகிய வாசகனுக்கும், வாசகனுகிய விமர்சகனுக்கும், விமர்சகனுகிய எழுத்தாளனுக்கும் பரிபூரண திருப்தியைத் தந்தால் அந்தக் கதை நல்ல சிறுகதையாகின்றது.

நல்ல சிறுகதைகள் இப்படித்தான் எழுதப்பட்டிருக்கும் என நான் நினைக்கின்றேன்.

"கற்பனை"த் தந்தைக்கும் "உண்மை"த் தாய்க்கும் பிறந்து "மொழியினல்" அழகூட்டப்பெற்ற "கரு" என்னும் உடலில் கம்பீரமாகக் கொலு வீற்றிருக்கும் "கருத்து" என்னும் உயிருடன் இயங்குவதுதான் நல்ல சிறுகதை!







xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

✷ சிரிப்பு: அவசியமானதுதான்... ஆனல் பறவைகள், மிருகங்கள், மீன்கள் கூடச் சிரிக்கின்றனவே—நம்மைப்பார்த்து! "வண்டைத் தூது" விட்டு வானெலிப்பரிசு பெற்ற கவிஞர் வகையாகச் சாடுகிருர்!

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

# சிரிக்கின்றன!

அல்வாயூர்: கவிஞர் மு. செல்லையா

[ பறவைகள் ]

1. எங்களைப் போலவே வானிற் பறந்திட
ஏற்றவி மானம் படைத்தவர்தாம்
தங்களை மானிட ராக்குங் கருவிகள்
தாரணி மீதினிற் செய்திலரே

[ மீன்கள் ]

2. ஆழக் கடலினுள் மூழ்க எமைநிகர்
அரிய கருவிகள் செய்தவர்கள்
வாழப் பிறந்தஅம் மாந்தர் சிறப்புற
மன்னு மியந்திரம் கண்டிலரே

[ மாடு குதிரைகள் ]

3. நாங்கள்செய் வேலைக்கு "மோட்டா" ரியற்றினேர்
நல்ல உழவுக்கு "ருய்க்டர்" செய்தோர்
தாங்கள் மனிதராய்ப் பண்புடன் வாழ்ந்திடத்
தக்க கருவிகள் செய்திலரே

4\. பல்கலைச் சாலைகள் ஆயிர மாயிரம்
பாரெங்குங் கட்டிப் படிப்பறிந்தும்
நல்லவ, ரென்னும் பெயர்பெற மானுடர்
நாட்டிற் கருவிகள் செய்திலரே

5\. மருந்து மனைநீதி மன்றம் "பொலிஸ்" படை
மற்றைய இன்றிநாம் வாழுகின்றோம்
திருந்திய ஆறறி வாளருக் கேயிவை
தேவை யெனிற்சிரிப் பாகுமன்றே

6\. தெய்வத்தின் சாயலிற் றோன்றிய மானிடர்
செய்கின்ற தீமை சிறிதாமோ
வையத்திற் சின்னப் பிறவிகள் நாமவர்
மடமையை எண்ணி நகைப்போமே.









மாதவியின் உள்ளத்தை அவன் காணவில்லை. புறத்தைமட்டும் பார்த்து அவளை வெறுத்தான். வெள்ளிச்சிலை லலிதாவின் வெளிக் கவர்ச்சி இனித்தது. ஆனுல் அவள்........? உண்மை தெரிந்தபோது சீதாராமன் விழித்துக்கொள்ளுகிறுன்.

திருமதி. நீலா ராமமூர்த்தி தொண்டன் வாசகர்களுக்குப் புதியவரானுலும், தமிழகத்து ஏடுகளில் அடிக்கடி எழுதுபவர்: சென்னை எழுத்தாளர்.

# அகமும் புறமும்

நீலா ராமமூர்த்தி

"டாக்ஸி கொண்டாடா பையா ரயிலுக்கு போகணும் நாழியாச்சு" என்றுன் சீதாராமன்.

"ரயிலுக்கா என்ன சார் காலையிலேதானே வந்தீங்க அதற்குள்ளாகவா புறப்படுவது" திகைப்பை அடக்க முடியாத சிறுவன் கல்லாய்ச் சமைந்தபடி கேட்டான்.

"வந்த காரிய மானுல் கிளம்ப வேண்டியதுதானே" என்று பெருமூச்சுவிட்ட சீதாராமன் "போப்பாடயமாச்சு" என்றுன்.

"போறேன் சார் ஆனுல் மறுபடியும் நீங்க எப்போ வருவீங்கன்னு சொன்னுல்தான்".

"வந்து விடறேன். கவலைப்படாதே" என்று சிரித்தான் சீதாராமன். பையன் ஓடினுன் டாக்ஸி ஸ்ராண்டிற்கு. அவனுக்கு என்னவோ ஐயா சேதி புதிராகவே இருந்தது. "காலையிலேதான் வந்தார். வந்ததுமே 'லலிதா இருக்கிருளா பார்த்துவா" என்றுர். 'இருக்கிருள்' என்றதுமே பறந்தோடிப் போனுர். போய் கால்மணி நேரத்திற்குள்ளாகவே திரும்பிவிட்டார். வந்தவரின் முகம் ஏன் அப்படி வாடி இருந்தது. என்னதான் நடந்தது அங்கே? போதாக்குறைக்கு யாருக்கோ சற்றுமுன் தந்தி வேறு அடித்தாரே!".

சென்னையைச் சேர்ந்த பழைய மாம்பலம் கம்பெனி ஒன்றின் 'கெட்கிளாக்'கான சீதாராமன் ஆறு மாதமாகத்தான் 'வித்யா காலனி'யின் ஒரு சிறு போர்ஷனில் குடியிருக்கிறுன். அங்கு பதினுறு குடும்பம் இருந்தும் அவன் போர்ஷன் எதிலும் சம்பந்தப்படாத ஒரு தனி இடமாகவே இருந்தது. முதலில் 'பேச்சுத்

துணைக்குக்கூட யாரும் இல்லையே' என்று எண்ணிய அவன் சற்றுத் தூரத்தில் இருந்த சோடாக் கடைப் பையன் பேப்பர், சோடா கலர் வெற்றிலைபாக்கு என்றுகொடுக்கும் சாக்கில் வந்து வந்து தன்னிடம் ஒட்டியதைப் பார்த்து மகிழ்ந்தான். எட்டணாக் காசுக்கு நாள்பூராவும் உழைக்கும் அந்த அனாதைப் பையனைப் பார்த்து மிகவும் வருந்திய அவனை கடைசியில் தன்னிடமே வைத்துக்கொண்டுவிட்டான். அரை வயிற்றுக்குக்கூடப் போதாமல் அவதிப்பட்ட பையன் சீதாராமனின் தயவில் சீமான் வீட்டுப் பிள்ளைமாதிரி காட்சியளித்தான்.

கம்பெனி மனேஜர் பெண் லலிதாவும் அவனும் மிகவும் அன்னியோன்னியமாகப் பழகுவதைப் பார்த்து 'நம்மபாடு வேட்டைதான் இனி. கல்யாணச் சாப்பாடு, சில்க் சொக்கா, கார்ச்சவாரி என்றெல்லாம் கிடைக்கும் சீக்கிரமே" என்று கோட்டையும் கட்டினான்.

ஆனால் அவன் கோட்டையை வெறும் ஆகாசக் கோட்டையாக்கி விட்டாள் பெரிய இடத்துப் பெண்ணான லலிதா. இல்லா விட்டால் "உங்கள் இஷ்டப்படியே கல்யாண ஏற்பாடுகளைச் செய்யுங்கள். அப்பா நாளைக்காலை வந்து சேருகிறேன்" என்று தண்ணீர்ப் பள்ளிக்கு தந்தி அடித்திருப்பானா சீதாராமன். வாஸ்தவத்திலேயே அவன் ஏமாந்து விட்டான். லலிதா நல்ல அழகி. நிறையப் படித்தும் இருந்தாள். மனேஜரின் அழைப்பின் பேரில் ஒருநாள் அவள்வீடுசென்ற அவன் கலகலவென்று சிரித்துப் பேசிய அவளிடம் தன் மனத்தைப் பறிகொடுத்தான். அவளும் அவனிடம் வித்தியாசம் இன்றிப் பழகியதால் தன்னை நேசிக்கிறாள்' என்று எண்ணிவிட்டான். அந்த தைரியத்தில்தான் முதல் நாள் காலை வலியவந்த சீதேவியை உதைத்துத் தள்ளி வந்தான்.

மாதவி அவனுடைய அத்தை பெண். குழந்தை முதல் பழகியவள். 'மாதவியை நான் கலியாணம் பண்ணிக் கொள்ளப் போகிறேன் அம்மா" என்று விவரம் தெரிந்த பிறகுகூட சொல்லி இருக்கிறான் சீதாராமன். மாதவி நல்ல அழகு. கொடி போன்ற தேகம். அன்பும் அடக்கமும் கொண்ட ஸ்வபாவம். சதாசிரித்த முகத்துடன் குடும்பப் பணியில் பம்பரமாய் சுழன்ற அவளிடம் அவன் கொண்டகாதல் தீவிரமாக வளர்ந்தது. "அவளைக் கைபிடிக்கும் நாள் என்றோ" என்றுதான் ஏங்கினான். ஆனாலும் கல்லூரிப் படிப்பெல்லாம் முடிந்து வீடுவந்த அவன் "இந்த மாதக் கடைசியிலேயே முகூர்த்தம் வைக்கலாம் என்று பார்க்கிறேன்; என்ன சொல்றே" என்று கேட்ட தகப்பனாரிடம் "உத்தியோகம் ஏதாவது கிடைக்கட்டுமே அப்பா என்ன அவசரம்" என்றுதான் சொன்னான்.

"நியாயம்தானே அவன் சொல்வது" என்று பேசாமல் இருந்து விட்டார் தந்தையும். ஆறுமாதம் ஆயிற்று அவனுக்கு வேலை கிடைக்க. அதற்குள் நடக்காததெல்லாம் நடந்து விட்டது. நன்றாக இருந்த அன்னை திடீரென்று ஒருநாள் சுரத்தில் கண்ணை மூடி





னாள். அது நடந்து ஒருமாதம் முடிவதற்குள்ளாகவே மாதவி படுத்துவிட்டாள். இரண்டு வாரத்திற்குப் பின் அவள் எழுந்த போதுதான் மகமாயி அவளிடம் எவ்வளவுதூரம் விளையாடி விட்டாள் என்ற உண்மை புலப்பட்டது. அழகு தேவதையாக இருந்தவளின் முகம் மாறிக் கறுத்துப் பார்க்கவே முடியாத அளவிற்கு ஆகி இருந்ததைக்கண்ட சீதாராமன் அழுதே விட்டான். மிகுந்த சிரமத்தின்பேரில் அவனை சமாதானப்படுத்தி தந்தையும் அத்தையும் "தப்புடா குழந்தை எல்லாம் அவள் செயல் நாம் வாயே திறக்கக் கூடாது" என்றனர். அவனுக்கு அங்கே இருக்கவே பிடிக்கவில்லை. அப்பாவும் ஓய்ந்து போனார். அத்தையும் தளர்ந்து போனாள். மாதவிமட்டும் பொம்மை மாதிரி வளைய வந்தாள். ஆதலால் வீட்டின் களையே வற்றி விட்டது. "பைத்தியம் பிடித்து விடுமோ நமக்கு என்றெல்லாம் சீதாராமன் கலங்கியபோது நல்ல வேளையாக சென்னையிலிருந்து "ஆர்டர்" வந்தது. "அம்மாஞ்சி என்னை மறந்து விட மாட்டியளோ!" என்று கண்ணீரும் கம்பலையுமாக வழி அனுப்பினாள் மாதவி. "சே அவ்வளவு மோசமாகவா நினைத்தாய் என்னை இன்னும் பெரிய சோதனை வந்தால் கூட நம்மைப் பிரிக்க முடியாது யாராலும்" என்றான் உறுதியான குரலில்.

"அந்த நம்பிக்கையில்தான் இருக்கும் என் உயிர்.

அவள் வார்த்தை அவன் காதில் ஒலித்துக்கொண்டே இருந்தது சதா. அவள் புற அழகு போனாலும் அக அழகு இருக்கிறதே அதற்காகவாவது மணந்து தானாக வேண்டும் சென்னை வந்து வேலையை ஒப்புக்கொண்ட பின்னும் அவன் மனம் சாந்தியடையாமல் தவித்தது எப்படி இருந்தவள் எப்படியாகி விட்டாள் இந்த நிலையில் தான் கம்பெனி மனேஜரின் சிநேகம் கிடைத்தது. தொடர்ந்து லலிதாவின் உறவும் கிட்டியது. அவள் ஒரு சிட்டுப் போன்றவள்.

ஏராளமான சொத்துக்கு அதிகாரியான தந்தையின் செல்லப் பெண்ணான அவள் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக அலங்கார வல்லியாக அழகுச் சிலையாகக் கவலையற்றுத் திரிந்தாள். காண்போரை எல்லாம் காந்தம்போல் இழுத்த அவள் அழகும் மிகவும் "சோஷியலாக" எல்லோருடனும் பழகிய அவள் தன்மையும் சீதாராமனை நிலைகுலையச் செய்தது. கவலையை மறக்கும் பொருட்டுக் குடிக்கத் தொடங்கியவன்போல் அவள் மயக்கத்தில் ஆழ்ந்தான். நாளுக்கு நாள் தலைக்கேறிய போதையில் தன்னையே மறந்தான். மாதவியைப் பற்றிய நினைவே கசந்தது. வித்யாகாலனியில் குடி இருந்தபடி அடிக்கடி போய் வந்த அவன் தாயாரின் வருஷாப்தீகத்தை உத்தேசித்து ஊருக்குப் போனான். அவன் வரவை வெகுஆவலுடன் எதிர்பார்த்திருந்த மாதவி திடுக்கிட்டாள், அவன் அடியோடு மாறி விட்டதைப் பார்த்து தன்னைத்

திரும்பியும் பார்க்கவில்லை அவன்
என்ற உண்மையை உணர்ந்த
போது அவள் பிராணனில் பாதி
போய்விட்டது. "இனியும் நம்முயிர்
வாழ்வானேன்" என்ற கசப்பு ஏற்
பட்டுவிட்டது மனதில். சீதாரா
மனோ முள்மீது இருப்பவனைப்
போல் தவித்தான். தேஜோமய
மாய் ஜொலித்த லலிதாவின்
சௌந்தர்ய வதனத்தின் நினைவே
இரவு பகல் வதைத்தது அவனை.
மாதவியைப் பார்க்கவே கூசியது
வலக்கண். பார்த்திருந்தால் "தேவ
லையே கருப்பெல்லாம் உதிர்ந்து
பழைய நிலைக்கு வந்துகொண்டி
ருக்கிறாளே மாதவி என்ற எண்ணம்
கூடத் தோன்றி இருக்குமோ என்
னவோ ஒருவேளை; ஆனால் அவன்
கண்களுக்கு முன்தான் மாதவி
சிம்ணி விளக்காகவும் லலிதா
"ஆயிரம் வாட்ஸ்" லைட்டாகவும்
தோன்றினரே! காரியம் எல்லாம்
ஒரு மாதிரியாக முடிந்ததும் கல்யா
ணப்பேச்சை எடுத்தார் தந்தை.
"ஹோட்டல் சாப்பாடு ஒத்துக்
கொள்ளாது உனக்கு. இப்பவே
அடையாளம் தெரியாமல் இளைத்தி
ருக்கிறாய். ஆகவே இந்தமாசக் கடை
சிக்குள் மாதவியின் கழுத்திலே ஒரு
தாலியைக் கட்டி அழைத்துப் போய்
விடு. உன் அம்மாவின் கடைசி
ஆசையும் அதுதான்" "சுருக்
கென்றது சீதாராமனுக்கு. 'ஏதேது
நாம் பேசாமல் இருந்தால் அந்த
அவதாரத்தை நம் கழுத்தில் கட்டி
விட்டுத்தான் மறுவேலை பார்ப்பார்
கள் போல் இருக்கிறது" என்ற
பயம் வந்தது. ஒருநாளும் இல்லாத
விதமாக எதிர்த்துப் பேசினான்.
"எனக்கு கல்யாணமே வேண்டாம்

அப்பா" தூக்கிவாரிப்போட்டது எல்
லோருக்கும். தூண்டிற் புழுவைப்
போலானாள் மாதவி. "என்னடா
உளர்றே" என்று அதட்டினார்
தந்தை. "உளரல்லே அப்பா பிளை
யனாகத்தான் சொல்கிறேன். மாத
வியைக் கல்யாணம் செய்து
கொள்ள முடியாது என்றால். நான்
இஷ்டப்படும் வேறு யாரையாவது
மணக்கச் சம்மதித்தீர்களானால் சந்
தோஷம். இல்லையானால் சாகிற
மட்டும் பிரமச்சாரியாகவே இருக்
கத்தீர்மானித்துவிட்டேன்" 'வெட்டு
ஒன்று துண்டு இரண்டு' என்பது
போல் பேசினான் சீதாராமன்.
தீயை மிதித்தாற்போல் துள்ளிய
தகப்பனார் கையை ஓங்கியவாறு
"அடபாவி என்ன தைரியம்
உனக்கு இப்படிப்பேச, பட்டணம்
போனதற்கு அடையாளமா இது.
நன்றாயிருந்த உன் புத்தியைக்
கெடுத்தது யார் எங்கே சொல்.
ஒரே வெட்டாய் வெட்டிப்போட்டு
வாறேன்" மாதவியின் உடல் நடுங்
கியது. "அப்பா" என்று எதையோ
சொல்ல ஆரம்பித்தான் சீதாரா
மன்! "பேசாதே நான் சொன்னால்
சொன்னதுதான்; வேறு பேச்சு
இல்லை. இன்றைக்கு எட்டாம்
நாளே மாதவிக்கும் உனக்கும் கல்
யாணம். மறுத்தால் நீ எனக்குப்
பிள்ளையும் இல்லை; நான் உனக்கு
அப்பனும் இல்லை. என் சொத்தி
லேயும் காலணாக் கிடையாது
உனக்கு. எல்லாவற்றையும் மாதவி
பேருக்கேஎழுதிவைதது விடுவேன்"
"அண்ணா என்ன இது" என்று
விசனத்துடன் குறுக்கிட்டாள்
மாதவியின் தாயார். "நீ பேசாமல்
இரம்மா, இந்தமாதிரிப் பிள்ளை



எல்லாம் இருப்பதைவிட போவதே
மேல்" என்றார் கோபத்துடன். நல்
லது அப்பா நான் வருகிறேன்
என்று கிளம்பியே விட்டான் சீதா
ராமன். 'வேண்டாண்டா குழந்தை'
என்று தடுத்தாள் அத்தை. எங்கே
யாவது அவர் நன்றாய் இருந்தால்
போதும் மாமா; ஒன்றும் சொல்லா
தீர்கள் என்று அழுதாள் மாதவி.
விடு அவனுக்கும் எனக்கும் ஸ்னான
ப்ராப்திகூடக் கிடையாது இனி,
என்ற பரசுராமய்யர் விர் என்று
வெளியேறினார். சீதாராமனும் புறப்
பட்டு விட்டான். அவனுக்குத்
தைரியம். லலிதாவின் அன்பு இருக்
கும்போது இதெல்லாம் என்ன
செய்யும் அவள் அப்பாவும் விட்டு
விட மாட்டார் நம்மை. பணமும்
பாக்கியமுமாக நாம் நாளை நன்றாக
இருக்கும்போது இந்த அப்பாவே
தேடிக்கொண்டு வருவார். இல்லா
விட்டால்தான் என்ன? மனதிற்குப்
பிடிக்காதவளுடன் காலம்பூராவும்
மன்றாடு என்று சொல்லும் அள
விற்குசுயநலம் கொண்ட அவருடன்
யார்தான் இருக்க முடியும். ஜாகை
வந்ததுமே லலிதாவைப் பார்க்கத்
துடித்தது அவன் மனம். பார்த்
தாயா லல்லி உனக்காக என்
சகலத்தையும் தியாகம் பண்ணிக்
கொண்டு வந்து விட்டேன் என்று
சொல்லப் பறந்தது அவன் மனம்.
ஆனால் என்ன ஏமாற்றம். லலி
தாவை நாடி அவன் போனபோது
அவள் தன் அறையில் வெகு உற்
சாகமாக வேறு யாரோ ஒரு
யௌவன வாலிபனுடன் பேசிக்
கொண்டிருந்தாள். மரியாதைக்குக்
கூட "வா', என்று கூப்பிடவில்லை
அவனை. வலுவிலேபோய் "ரெம்ப

பிஸியோ" என்றான் சற்று கோபத்
துடன். ஆமாம் கொஞ்சம் சென்டர்
ஹாலில் உட்கார்ந்து இருக்கிறீர்
களா போய் என்றாள் லலிதா.
"பளிச்" என்றது. புதியவன் நமட்
டுச் சிரிப்புடன் பார்த்தான் அவனை.
சீதாராமனின் உடலும் உள்ளமும்
'திடீர்' என்று குன்றியது. விர்
என்று போனான். கொஞ்சம்கூட
மேனேர்ஸ் இல்லாமல் வந்து நிற்
கிறானே! யார் இந்த "கண்ட்ரி
பெலோ". அப்பாவிற்கு ரொம்ப
தெரிந்தவர், கொஞ்சம் கிறுக்கு
அவ்வளவுதான் இருவரும் சிரித்
தனர். ஆயிரம் தேள் கொட்டிய
மாதிரி இருந்தது சீதாராமனுக்கு.
'பெண்ணா இவள்' 'யாரது சீதா
ராமனா வாவா உட்கார். நானே
பார்க்க வேண்டும் என்று நினைத்
தேன். நம்ம லலிதாவிற்குக் கல்யா
ணம் நிச்சயமாகி இருக்கிறது.
பையனை பார்த்திருப்பாயே நீ.
டாக்டருக்குப் படித்துவிட்டு லண்
டனிலிருந்து நேற்றுத்தான் வந்
தான் படுசுட்டி. பயல் படு கெட்
டிக்காரன். பார்க்கவும் ரொம்ப
ஜோரா இருப்பான் சொத்து இருக்
கிறது கைநிறையச் சம்பாதிக்க
வும் வழி இருக்கிறது. என்ன
குறைச்சல் எங்க லலிதாவிற்கு
இனி என்னவோப்பா என் பிள்ளை
மாதிரி நினைத்து விட்டேன்உன்னை.
நீதான் கல்யாணத்தை முன்னின்று
நடத்திவைக்க வேண்டும்." லலிதா
வின் தகப்பனார் பேசப்பேச சீதா
ராமனின் தலை சுற்றியது.

ஆகட்டும் சார். நான் வாரேன்
"முட்டாள்பயலே படித்த பெண்
ஒருத்தி சோஷியலாகப் பழகினால்
காதல் என்றுதான் கொள்வதா"

என்று சிரித்தது மனசாக்ஷி. வேண்டும் உனக்கு இந்த அவமானம் தெய்வமாய் வணங்கியவளை விட்டு வேறு ஒருத்தியின் டாம்பீகத்திலும் சொகுசிலும் மயங்கிய மதிப்பு இழந்தாயல்லவா? இப்போதாவது தெரிந்துகொள். மனுஷ்யனுக்கு வேண்டியது முக அழகு மட்டும் இல்லை. அக அழகுதான். மாதவி சிம்ணி விளக்காக இருக்கலாம். ஆனால் அது சாசுவதமானது. அது போல்தான் அவளுடைய தூய ப்ரேமையும்'' விழித்துக் கொண்டான் சீதாராமன். பளிச்சென்று விளங்கியது அவனுக்குத் தன் தவறு, ''மோசம் போனேன் மாதவி என்னை மன்னிப்பாயா'' என்று கதறியது உள்ளம். உடனே போஸ்டாபீசிற்குப் போனான். தந்தி அடித்த பிறகுதான் மனம் அமைதியடைந்தது. யோசித்து யோசித்துப் பார்த்தபோது சிரிப்புக்கூட வந்தது அவனுக்கு. ''நம்ம புத்தியும் இப்படிப் போச்சே! பட்டண வாசத்திலே எத்தனையோ பெண்கள் இப்படித்தான் சொகுசாய்த் திரிகிறது. அதைப் பார்த்துப் பல்லை இளிப்பவனல்லவா முட்டாள். லலிதா பேரிலே தப்பு இருப்பதாகவே தோன்றவில்லை அவனுக்கு.

◆ ◆ ◆ ◆

அன்றைக்கு பதினைந்தாம்நாள் காலை.

''ஒரு கல்யாணத்திற்கு போகணும் மாதவி வரயா'' என்றான் சீதாராமன் உற்சாகத்துடன் ட்ரஸ் பண்ணிக்கொண்டே. ''இதோ ரெடி எங்கே விட்டுவிட்டுப் போய் விடுவேளோ என்றுதான் பார்த்தேன்'' என்ற மாதவி நிச்சயதார்த்தத்திற்கு வாங்கிய சந்தனக் கலர் டிஷ்யூ புடைவை சரசரக்க அவனுக்குமுன் புறப்பட்டாள் மகிழ்ச்சியுடன். விட்டுவிட்டுப் போவதா! ஐயையோ அப்புறம் யார் அனுபவிக்கிறது அதற்குரிய தண்டனையை. ஒருதரம் உன்னை விட்டு வந்ததற்கே சரியான அடி!

''போதுமே எதற்கு அதை எல்லாம் நினைக்கிறீர்கள்'' என்று செல்லமாகக் கடிந்துகொண்ட மாதவி மாடிப் படியின்கீழ் இன்னும் தூங்கி வழிந்துகொண்டிருந்த பையனைப் பார்த்து, ''ஏண்டா நீ வரப்போகின்றாயா இல்லையா'' என்றாள். ''இப்போ எதற்கம்மா, சாப்பிடுகிற சமயத்திற்கு வரேன்'' என்று மீண்டும் படுத்துக்கொண்ட அவனைப் பார்த்து நகைத்த சீதாராமன் ''சரி வா போகலாம்'' என்றான். இவர்களைப் பார்த்ததும் துள்ளி வந்த கல்யாணப்பெண் லலிதா அசாத்திய மகிழ்ச்சியுடன் ''ஹலோ மிஸ்டர் சீதாராம் கங்கிராஜுலேஷன்ஸ்'' என்று கைகுலுக்கினாள். அதையே வியப்புடன் மாதவி பார்த்தபோது ''மாதவி நீ அவளுக்குச் செய்ய வேண்டிய மரியாதை இது'' என்றான் சீதாராமன் களங்கமற்ற மனதுடன்.







● ''நண்பர்களுக்காகவும் தமக்கு வேண்டியவர்களுக்காகவும் விமர்சனம் செய்பவர்கள் உண்மையில் விளம்பரமே எழுதுகிறார்கள். ......விமர்சனப் பாதையைத் தெளிவுபடுத்திக் காட்டக்கூடிய விமர்சக ஆசான்கள் இன்று நம் மத்தியில் இல்லை!''

இக்கட்டுரையில் இலக்கிய விமரிசகர்—சிறுகதை எழுத்தாளர்—திரு. நாவேந்தன் தெரிவிக்கும் கருததுக்கள் இலக்கிய வட்டாரத்தின் கவனத்தை நிச்சயம் ஈர்க்கும்!

# இலக்கிய விமர்சனங்கள்!

நாவேந்தன்

சங்க இலக்கியங்களுக்கு ஆராய்ச்சிப் பேருரை எழுதுவது தொடக்கம், சாதாரண கவிதை ஒன்றின் இயல்புகளை விவரிப்பது ஈறாக உள்ள முயற்சிகள் அனைத்தும் இலக்கிய விமர்சனத்தின் வளரும் உருவமே என்பதில் ஐயப்பாடு கிடையாது! எனினும் பழந்தமிழ் நூல்களுக்கு எல்லாம் விமர்சன ரீதியில் ஆய்வுரைகள் எழுதப்பட்டுள்ளன என்று கூறுதல் அவ்வளவு பொருததமாகாது. ஆழமும், செறிவுமடர்ந்த பழைய இலக்கியங்களுக்கு விமர்சனஞ் செய்வது இன்றைய விமர்சகர்களில் பெரும்பாலானோருக்கு சிரம சங்கடமான பணியாகும். பழைய இலக்கியமொன்றின் சிலபல நயங்களைத் தொட்டுக்காட்டுபவர் விமர்சகரல்லர். அவ்விலக்கியத்தினைப் படித்து அனுபவிக்க ஓரளவு உதவுபவராவர். அன்றியும் பழைய ஆராய்ச்சிப் பேருரைகாரர்களும் விமர்சகர்களல்லர் என்பதை நாம் ஏற்றுக்கொண்டேயாகவேண்டும். திருக்குறளின் பழைய உரைகாரர்களில் சிறந்தவர் எனப்படும் பரிமேலழகர் ஒரு விமர்சகரா? இல்லையென்றே கூறவேண்டும். இலக்கிய கர்த்தாவின் சிருட்டித் திறனுக்கு அப்பாற் போக முடியாதவர்கள், அல்லது சிருட்டியின் குறைநிறைகளை எடை போட்டுக் காணமுடியாதவர்கள் எவரும் விமர்சகரல்லர். எனவே பழந்தமிழ்ப் புலவர் பெருமக்களில் நக்கீரர் போன்ற ஒருசிலரைத் தான் விமர்சன ஆற்றல், துணிவுபெற்ற புலமையாளர்களாகக் காணமுடிகின்றது. நயத்தைக் காண்பது வேறு. விமர்சிப்பது வேறு. பழைய இலக்கியங்களைப் பொறுத்தவரை இன்றும் ஈழத்திலும், இந்தியாவிலும் இக்குறை இருந்தவாறே இருக்கிறது. இந்த நூற்றாண்டிலே கம்பராமாயணத்திற்கும், திருக்குறளுக்கும், பாரதத்திற்கும் இலக்கியநயங்கண்டவர்களில் புகழ்பெற்ற டி. கே. சியும், ராஜாஜியும், பி. ஸ்ரீ ஆச்சார்யாவும் இலக்கிய விமர்சகர்களல்லர் என்பர் வெள்ளிடைமலை. எந்தவிதமான விமர்சன மரபுமின்றி எழுந்த பாட்டுக்கு திருக்குறள் இலக்கியமில்லை என்று அலறுபவர்களும் விமர்சகர்களல்லர். எனவே பழைய இலக்கியங்களைப் பொறுத்தவரையிலும் இலக்கிய விமர்சகர்கள் நக்கீரர் பரம்பரையின் வழியே இனித் தோன்றியாக வேண்டும். பண்டைய தமிழ் இலக்கியங்களைப் பார்க்கும்போது எம் மனதில் தோன்

றுகிற கருத்து இதுவே. மறுமலர்ச்சி இலக்கியங்கள் எனப்படுகின்ற சிறுகதை, நவீனம், நாடகம், நடைச்சித்திரம், பலவகைக் கட்டுரைகள் எனபவற்றையெல்லாம் கவனிக்கும்போது மிகப்பெரும் ஏமாற்றமே தென்படுகிறது. பழைய இலக்கியங்களுக்குப் போதிய அளவு விமர்சனமில்லாவிட்டாலும் சமுதாயம அவற்றை அனுபவிக்கக்கூடிய அளவுக்கு வஞ்சனையின்றி ஆய்வுரைகளும், நயங்களும் மலிந்திருக்கின்றன. ஆனால் இன்றைய இலக்கியங்களுக்கு அந்தப் பேறுகூடக் கிடையாது. மாரி காலத்து ஈசல்களைப் போலக் கதைமரபோ, கவிமரபோ, பண்டைய தமிழ் இலக்கியப் பரிச்சயமோ சிறிதுமற்ற விமர்சகர்கள் கிளம்பியிருக்கிறார்கள். பல தடவைகள் பத்திரிகைகளுக்குக் கதைகள், கட்டுரைகள் அனுப்பிப் பிரசுரமாகவில்லையே என்று அலுத்துக்கொண்டவர்கள் எல்லாம், இருந்தாற்போலிருந்து விமர்சகர்களாக மாறிவிட்டதன் விளைவு இது. இதற்கிடையே, தொழிலாளி இயக்கம், முதலாளி இயக்கம் என்ற பாகுபாடுகள் வேறு. முற்போக்கு இலக்கியம், சும்மா இலக்கியம் என்ற கணிப்புகள் வேறு!

சிறு கதையை எடுத்துக்கொண்டால் அதன் உருவம் உரைநடையே நமக்குப் புதிது. சிறுகதை நமக்குப் புதிதல்ல. இதனை யுணரமாட்டாத இலங்கை, இந்திய எழுத்தாளப் புலிகள் சிறுகதை 'மேல்நாட்டுச் சரக்கு' நாமதன் கொள்வனவுக்காரர்கள் என்று கூசாமல் கூறுகிறார்கள். இப்படியே கவிதையிலும், பிற துறைகளிலும் 'விமர்சனப்பணி' நடந்துகொண்டு போகிறது. இலங்கையைப் பொறுத்தவரை விமர்சனம் ஒரு விளம்பரச் சரக்காகிவிட்டது. விமர்சனம் எழுதுபவர் சில பக்கங்கள் எழுதிவிட்டு இறுதியில் ''சிறுகதையில் — தற்பெருமைக்காகவல்ல, நானும் குறிப்பிடத்தக்க அளவுக்கு பணிபுரிந்துள்ளேன்'' என்று குறிப்பிடுமளவுக்குத்தான் விமர்சனம் வளர்ந்திருக்கிறது. 'தானும், தனது இலக்கிய வட்டத்தில் உள்ளவர்களும்தான் எழுத்தாளர்கள்'' என்று எழுதுகிற விமர்சகனைப்பற்றி என்ன சொல்வது? நண்பர்களுக்காகவும், வேண்டியவர்களுக்காகவும் விமர்சனம் எழுதுகிறவர்கள் உண்மையில் விளம்பரமே எழுதுகிறார்கள்; இன்னுஞ் சில விநோதப் பிறவிகள் அப்பொழுதுதான் விழித்தெழுந்து, ''இலக்கியம் பண்டிதர்களிடமிருந்து ஆசிரியர் கைக்கும் ஆசிரியர்களிடமிருந்து தங்கள் கைக்குமாக மாறியுள்ளதென்றும், இனி இலக்கியம் வாழ்ந்துவிடும்' என்றும் புலம்புகிறார்கள். இவர்கள் நிலையை என்னவென்று புகல்வது? சிறுகதையில எலும்பும் தோலும், சாதிச் சண்டைகளும் மலிய விட்டு நரக உலகத்தை மாத்திரமே காண முடிகிற இவர்களால் வேறு உலகத்தை எட்டிப் பார்க்கக்கூடக் கண்கள் கூசுகிறது போலும்!

பழைய இலக்கியத்தைப் பொறுத்தாலும், இன்றைய இலக்கியத்தைப்பொறுத்தாலும், விமர்சனப் பாதையைத் தெளிவுபடுத்திக் காட்டக்கூடிய விமர்சக ஆசான்கள் இன்று நம்மத்தியில் இல்லையென்றே கூறவேண்டும். பத்துத திரைப் படங்களைப் பார்த்துவிட்டு அவற்றின் பெயர்களை வைத்து ஒரு கட்டுரை எழுதுகிறவர்களைப் போன்ற போலிகளால நமக்கும், இலக்கிய விமர்சனத் துறைக்கும் பெருநஷ்டமேயுண்டாகும். தமிழிலக்கியங்களில் சிறிதளவு அறிவுகூட இல்லாத 'நடைபாதை' இலக்கிய விமர்சகர்களால, எழுத்தாளர்களால ஒரு பயனும் கிடைக்கப்போவதில்லை. வேறு எந்த நாட்டிலும் இத்தகைய மரபு அறியாத விமர்சகர்கள் பிரபலம் பெற்றதில்லை. இங்கு மாத்திரம் எப்படியோ புகழ் பெற்று விடுகிறார்கள்.

விமர்சகனுக்குப் பரந்த அறிவு வேண்டும். நேற்றைய இலக்கியத்தின் அறிவும், இன்றைய இலக்கியத்தின் தோற்றமும், நாளைய இலக்கியத்தின் வரவும் ஊகித்துக் காணக்கூடிய தீர்க்க தரிசன ஆற்றலுள்ளவனே விமர்சகனாகமுடியும்! மன உளைச்சல்களைத் தீர்ப்பதறகாக எழுதுகோலைத் தேய்ப்





ஈழகேசரி வெள்ளிவிழா மலர்

**மானிப்பாய்த் தேவாலயம்**

1769இல் லோறன்ஸ் பில் என்பவர் கட்டிய ஒல்லாந்தர் காலத்து ஆலயம். வடபகுதியிற் கல்வி வளர்த்த அமெரிக்க மிசனரிகளின் சின்னமாக நின்று மிளிர்கின்றது.

பவன் விமர்சகனல்லன். ஆனால் ஈழத்தின் இன்றைய இலக்கிய விமர்சகர்கள் இப்படிப் பட்டவர்களே. இவர்களுக்குள்ள நமைச்சலைத் தீர்க்க என்னவோ எல்லாம் எழுதி முடிக்கிறார்கள் இலக்கிய விமர்சனம் என்ற பெயரில்! தனக்குப் பிடித்தமானவனைப் புகழ்வதும், ஏனையோரை இகழ்வதும். பத்திரிகைக்காரர்களைக் 'காக்கா' பிடிப்பதுமே இவர்களுக்குத் தெரிந்த விமர்சனம்! "பதினேழு நவீனம் எழுதியவர் சிறந்த நாவலாசிரியர். அறுபது கதை எழுதியவர் முற்போக்கு எழுத்தாளர், பத்துக் கவிதைகள் எழுதியவர் 'மக்கள் கவிஞர்'. இதிலே எந்த விதமான தவறுமில்லாவிட்டால் இவர்கள் சிறந்த விமர்சகர்கள்தான்! உலக இலக்கிய அரங்கிலே, எந்த நாட்டிலேயாவது இத்தகைய குருட்டுத்தனமான இலகக்ய விமர்சனத்தைக் காண முடியுமா? இலக்கிய விமர்சகர்களைக் காணமுடியுமா?

எழுத்தின் தரத்தையும், எழுத்தாளனின் இதயத்தையும் பார்க்கவேண்டும். பண்பான முறையிலே விமர்சிக்கவேண்டும். ஐம்பதாண்டுகள் நிலைத்திருக்கக்கூடியனவும் ஐயாயிரஆண்டுகள் நிலைத்திருக்கக்கூடியனவுமான சிருட்டிகளிருக்கலாம். அவற்றையெல்லாம் உரிய முறையிலே விமர்சிப்பது தான் அழகு. அதை விடுத்து எழுதுபவன் மனம் கருகும்படியாக அவனால் எழுத்தே நாசமாய் விடும் என்றும், 'இவன் ஒருவனாலேயே' இலக்கியம் வாழும் என்றும் விமர்சிப்பது கசாப்புக் கடைக்காரனுடைய பணியாகும். ஒருநாளில் மலர்ந்து அன்றே உதிர்ந்து விடும் மலரில் மணமில்லையா? அழகில்லையா? பத்து ஆண்டுகள் நிலைத்திருக்கக்கூடிய கடதாசி மலரில்லையா? இவை யெல்லாவற்றையும் பேதங்கண்டு விமர்சிக்கத் தெரிந்தவர்களே விமர்சகர்கள். இன்றைய நிலையில் இப்படிப்பட்ட தரமான விமர்சகர்கள்தான் தமிழருக்குத் தேவை. இவர்கள் இன்று நம் மத்தியில் இல்லாவிட்டாலும் பரவாயில்லை. நாளடைவில் நம்மிடையே வரத்தான் செய்வார்கள். அவர்களுக்கு நாம் வழிவிடவேண்டும். அதுவரை பழியைச் சம்பாதியாதிருந்தாலே போதும்!

ஈழத்தின் இலக்கிய விமர்சனம் இன்றுள்ள உருவத்தில் பலமடங்கு வளரவேண்டும். அவ்வளர்ச்சிக்கான கருவில் ஆயிர கோடியில் ஓர் அணுவேனும் இன்றைக்கு முகிழ்த்திருப்பின் அது நமக்குத் திருப்தி யளிக்கப் போதுமானது.



## தகுதிகாணாக் கொடை

மழை வயலிலும் குளத்திலும் உப்புநிலத்திலும் ஒரேமாதிரியே பெய்கின்றது. அதேபோல பேகனும் இரப்பவர்கள் தகுதி உள்ளவர்களாயினும் தகுதியற்றவர்களாயினும் வாரி வழங்குகின்றான். ஆனால் கொடையிலே தகுதியற்றோர்க்குக் கொடுப்பதுபோல பண்டைக்காலத்திலே பேகன் பிழைவிடமாட்டான். அங்கே தன்னொத்த வீரருடன் பொருவானேஅன்றி தகுதியற்ற கீழானோருடன் சமர் செய்யமாட்டான்.

—புறநானூற்றிலே கபிலர்.



பாடசாலைகளை அரசாங்கம் எடுப்பதனுல் ஏற்படும் சாதக பாதகங்களைப்பற்றி அண்ணுமலை வாத்தியார் கவலைப்படவில்லை. அந்த மனேச்சருக்கு கடவுள் தண்டனை கொடுத்துவிட்டார் என்று அவருக்கு ஒரே மகிழ்ச்சி!

நாவல், நாடகம், சிறுகதை, கவிதை முதலிய துறைகளில் எல்லாம் எழுதிக் குவித்துள்ள திரு. சொக்கனின் 'சிலம்பு பிறந்தது!' (நாடகம்) அண்மையில் 500 ரூபா பரிசு பெற்றிருக்கிறது!

# தனக்கு மூக்கறுபட்டாலும்......?

சொக்கன்

அண்ணுமலை வாத்தியாருக்குக் கண்களை நம்பவே முடியவில்லை! கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தார்; கண்ணுடியை நெற்றிக்குமேலே தூக்கிவிட்டுக் கொண்டு கூர்மையாக நோக்கினுர்.

உண்மைதான்! அந்தச் செய்தி-கொட்டை எழுத்துக்களில் பத்திரிகையின் முகப்பில் உறுத்தி விழித்துக் கொண்டிருந்தது!

"பாடசாலைகள் தேசியமயம்!
1961 ஜனவரி முதலாந்திகதி
அரசாங்கம் கையேற்கும்."

அண்ணுமலையாரின் அடிக் கமலங்கள், பூமித்தாயை விட்டு சில அடிகள் மேலே எழுந்து பின் அவள் நெஞ்சிலே ஆழப் பதிந்தன. அட! ஒரு மனிதனுக்கு வாயெல்லாம் பல்லாகவே இருப்பதுண்டா? இல்லை என்கிறீர்களா? நீங்கள் அண்ணுமலை வாத்தியாரைச் சந்தோஷ நிலையிலே காணவில்லை என்பதுதான் அதற்கு அர்த்தம்!

வாத்தியார் கையிலிருந்த பத்திரிகை வெளியைக் கிழித்துக் கொண்டு பறந்தது! என்ருே ஒரு நாள், சகாயநிதிக் காட்சிக்கு அவர் நண்பர் வாங்கிய டிக்கட்டில் ஓசிப் படம் பார்த்தாரே? அந்தப் படத்தில் கோகிலவாணி பாடிய,

"ஆனந்தம் என் சொல்வனே?
என்கண் படைத்த பயனே"

என்ற பாட்டு வரிகளைப் பற்றிப் பிடித்துத் தம் வாயிலே போட்டுக் கடித்துத் துவைத்து...! ஐயையோ! சித்திரவதை ஐயா! சித்திரவதை!

வாத்தியாருக்கு இத்தனை மகிழ்ச்சி ஏற்படக் காரணமாயிருக்



கும் பாக்கியம் அந்தச் செய்திக்கு எவ்வாறு கிடைத்தது?

அது பெரியகதை!

கலை, சமயம், மொழி என்ற மூன்றையும் பாதுகாத்து, தமிழ்ப் பழங்களை—[அழுகாதவையும், பிஞ்சில் பழுக்காதவையுமான]— உற்பத்தி செய்வதே நோக்கமாக ஈழத்தில் ஒரு கல்விச்சபை இயங்கி வருவதை யாரே அறியார்? அவ்வாறு அறியாதார் அறியாதாரே அல்லரோ?

போகட்டும்; இந்தச் சபையின் கீழ் எத்தனை எத்தனையோ பள்ளிக் கூடங்கள்! வானமே கூரையாக, வையமே தரையாக உள்ளவை இவற்றிற் பல என்று சொல்லலாமா? (சொல்லக் கூடாதோ? 'ஆமை பிடிப்பர் மல்லாத்துவர், நாம் அது சொன்னுல் பாவம்' என்று தத்துவம் பேசுகிறீர்களா? சும்மா போங்கள், ஐயா!) மழைக் காலத்தில் இந்தப் பள்ளிக் கூடங்களில் படிக்கும் மாணவர் வீட்டில் குளித்து வருவதில்லை; பள்ளிக் கூடத்திற் குள்ளேயே குளித்து விடுவார்கள்! இங்கு கரும்பலகை, மேசை, நாற்காலி பற்றி-? மூச்! பண்டைக்காலத்தில் குருகுலங்களிலே இவை யெல்லாம் இருந்தனவா? இல்லையே! இங்கே மட்டும் அவை எதற்காம்! வேண்டாம்! (சரித்திரம் கற்பிக்கும் ஆசிரியர் ஒருவர் இப் பள்ளிக்கூடங்களில் புதைபொருள் ஆராய்ச்சி நடாத்தி, சில பலகைத் துண்டுகளையும் "நிச்சயமாய் இவை கறுப்பாக இல்லை?" நாற்காலிகளின் கால்களையும் கண்டெடுத்ததாகவும், அவை முன்னுட் கரும்பலகைகளாகவும் நாற்காலிகளாகவும் இருந்திருக்கலாம் என ஊகிப்பதாகவும் அறிகிருேம்! சுத்தமான டுப்!)

பாடசாலை உபகரணங்களுக்காக அரசாங்கம் உதவிநிதி அளிப்பதாய்ச் சொல்கிருர்களே? அப்படியானுல் இந்தப் பள்ளிக்கூடங்களுக்கு அந்த உதவிநிதி கிடைக்கவில்லையா, என்கிறீர்களா? ரிஷிமூலம், நதிமூலம் போல அதுவும் மர்மம் சூழ்ந்ததாகவே இருக்கிறது! எமக் கெதற்கையா இந்த வீண் வம்பு எல்லாம்!

அடடே! சொல்ல வந்ததை விட்டு எங்கேயோ வந்துவிட்டேன். அண்ணுமலை வாத்தியாரின் கதையல்லவா இது? அதை மறந்து பத்திரிகை இதழ்களுக்குத் தொடர்கதை எழுதுபவர்போல, என்னவெல்லாமோ சொல்லி விட்டேன். அதுமட்டுமல்ல! இது சிறுகதை ஆயிற்றே! மன்னிக்கவும்!

அண்ணுமலையார் இவ்வாருன ஒரு பாடசாலையில் அரிச்சுவடி தொடக்கம், அண்ட கோளங்கள் வரை எத்தனையோ விஷயங்களைப் படிப்பித்துக் கொண்டிருந்தார்.

வருடத்துக்கு ஒரு தடவை அவர் இரண்டு சுருட்டுக்களைத் தம் நாளாந்தப் பட்டியலில் கூட்டிக் கொள்வார். அதாவது மூன்றரை ரூபா சம்பள உயர்வு கிடைக்கும்! அவ்வளவுதான்!

மனுஷன் மகா நேர்மையானவர்! தாம் உண்டு தம் கடமை உண்டு என்று இருப்பார்! ஒவ்

வொரு சதத்தையும் எண்ணி எண்ணித்தான் செலவு செய்வார்! (முதற்கூறிய இரண்டும் வாத்தியாரின் சொந்த அபிப்பிராயங்கள்! கதாசிரியர் அவற்றிற்குப் பொறுப்பாளர் அல்லர்.)

இதனால் ஏதோ நாலுசதம் மிச்சம் பிடித்து ஒரு கல்வீடு கட்டினதும் உண்மைதான்! ஏன் பொய் சொல்வான்? வாத்தியாரின் வளமான வாழ்வு பள்ளிச் சபையின் நிர்வாகிக்குப் பிடிக்கவேயில்லை! அண்ணாமலையில் முன்பே ஆத்திரம் அவருக்கு! அப்போதைக் கப்போது இரண்டு வாழைக்குலை, கொஞ்சம் காய்கறி யாவது கையுறையாகக் கொண்டுவந்து தம்மைத் தரிசனம் செய்யவில்லையே! பள்ளிக்கூட நிதியென்று கேட்டால் நூறை இருநூறைக் கொடுக்கவில்லையே! இதுதான் ஆத்திரம்!

இந்த நிலையிலே அண்ணாமலையாரின் பணச்சேகரிப்பால் எழுந்து நின்ற மாடமாளிகை (அட! தன் வீட்டை மாடமாளிகை என்று நினைக்க ஒரு தமிழ்ச் சட்டம்பிக்கு உரிமை இல்லையா?) நிர்வாகியின் கண்களை, உறுத்தி. எரிகின்ற நெருப்பில் எண்ணெய் ஊற்றியதில் வியப்பில்லையே!

அவர் தருணம் பார்த்திருந்தார்!

அண்ணாமலையார் உச்சியபடி இருந்தார்!

* * * * *

ஆனையும் அறுகம் புல்லில் தடக்கியது! அண்ணா மலையாரும் நிர்வாகியில் தடக்கி வீழ்ந்தார்!

அந்த வருடம் வாத்தியார் தம் வயலோடு, மேலும் கொஞ்ச வயலைக் குத்தகை எடுத்துப் பயிர் செய்தது தவறா? அதற்காகத் தடிமன், காய்ச்சல் என்று அடிக்கடி 'லீவு' எடுத்ததும் தவறா?

தவறாகவே போய் விட்டது! நிர்வாகி வாத்தியாருக்கு மாற்ற முடியாத வியாதி என்று சொல்லி, அவருடைய காலத்திற்கு முன்பே அவர் 'பென்ஷன்' எடுக்குமாறு செய்து விட்டார்!

பழிக்குப் பழி!

வாத்தியார் வயிறு எரிந்தார்; சாபங்கள் கொடுத்தார்! நிர்வாகி இல்லாத இடத்திலே மண் அள்ளிப் போட்டுத் திட்டினார்!

கண்ணகியின் வம்சமல்லவா?

இன்று அவர் சாபம் பலித்து விட்டது! தம் சுய நலத்திற்காக, வருவாய்க்காக லீவு எடுத்த குற்றத்தையும் மறந்து, தம்மைக் கடவுள் மன்னித்து, நிர்வாகியை மாத்திரம் தண்டித்து விட்டார்! கடவுள் இஸ் ஏ வெறிகுட் மான்! (மான் இல்லை! Man!)

பாடசாலைகள் அரசாங்கம் எடுப்பதால் ஏற்படும் இலாப நட்டங்கள் பற்றி அவர் கணக்குப் பார்க்கவில்லை !

நிர்வாகி வீழ்ந்தார்; அவர் அதிகாரம் வீழ்ந்தது!

'தனக்கு மூக்கு அறுபட்டாலும், எதிரிக்குச் சகுனப் பிழையாய் இருந்தால் அது போதும்!

வேறு என்ன வேண்டும் ?



ooooooooooooooooooooooooooooooooo

o தாரம் தாயாகி, பணியைத் தன் வாழ்வாக்கி மகிழும் மனைவியின் கை, எத்தனை தொண்டுகளைச் செய்கிறது? வள்ளுவரின் வாசுகியை விட, 'தங்கத்தாத்தா'வின் சின்னம்மை ஒரு படி உயர்ந்துவிட்டார்!

பாரதி கூறிய "தெய்வமணிக்கை"யை சோமசுந்தரப் புலவரின் செய்யுளிலே கண்டு நயந்தோன்ற விளக்குகிறார் சிறந்த சிறுகதைச் சிற்பி புதுமைலோலன்!

ooooooooooooooooooooooooooooooooo

# தெய்வமணிக்கை!

புதுமைலோலன்

யாழ்ப்பாணத்து நவாலி ஒரு தங்கத் தாத்தாவை அளித்தது. அந்தத் தாத்தா தமிழ்த் தாய்க்கு அருமையும் பெருமையும் மிக்கபல பாமாலைகளைச் சூட்டினார். அதனால் தமிழ் உணர்ந்தோர் மகிழ்ந்தனர்; பெருமிதங் கொண்டனர். பிறந்த குழந்தையிலிருந்து முதியோர்வரை பாடியாடக்கூடிய பாடல்களைத் தங்கத் தத்தா பாடி, ஈழத்தின் மானத்தை உயர்த்தினார். தாத்தாவின் பாடல்களில் எலி வரும், அணில் வரும், பூனை வரும், சேவல் வரும், தாடிவரும், கொழுக்கட்டை வரும், பலாவிலை வரும் ... ... எத்தனை எத்தனையோ வரும். யாழ்ப்பாணத்து நாகரிகம், வாசனை, பாடலெங்கும் விரவி படிக்க உணர்ச்சி தரும்; கருத்துத் தரும்.

1929-ம் ஆண்டு புலவருக்குச் சன்னி நோய் கண்டது. இரண்டு மாசங்களாகப் படுக்கையிலிருந்தார். அப்போது உதவிக் கரமாக அமைந்த, அவர்தம்மனைவி கொடுத்து வைத்தவர்! ஏனெனில் வருத்தம் மாறி எழுந்ததும், தன் தாரத்தின் கரம் பற்றியல்லவா பாடிவிட்டார்? அவர் மனைவி திருவாட்டி சின்னம்மையின் கையைப்பற்றிப் பாடிய அப்பாட்டு — அன்பும் கௌரவமும் தெரிந்த தமிழ்நாட்டு மனைவியர் கரத்துக்கெல்லாம் பொருந்தும்.

அப்பாடலைப் படித்த பண்டிதமணி கணபதிப்பிள்ளை அவர்கள், வள்ளுவரின் வாசுகியைவிட, புலவரின் சின்னம்மையின் கரஉயர்வு, சேவை மனப்பான்மை — அதனால் அவரின் கண்கள் உறங்க முடியாத தாச்சே, எனஎண்ணி ஒரு பாடலையே பாடி விட்டார். வாசுகி பின் தூங்கி முன்எழும் பண்பினாள். சின்னம்மையோ முழுநேரமும் கணவனருகே இருந்து, உதவி புரிய வேண்டியவள் — ஆகவே தூங்கவே முடியாதவள் பண்டிதமணியின் பாட்டைப் படியுங்கள்; இப்பாட்டைப் புலவருக்கே பண்டிதமணி அனுப்பிவிட்டார்.

"பின்றூங்கி முன்னெழூஉம்
பெற்றியுரைத் தார்தேவர்
உன்றாத் துக்குறக்க
முண்டுகொலோ — குன்றாமே

**தண்ணென் தமிழ்ப்புலவோய்**
**தாயாள் கையிருக்கக்**
**கண்ணுக்கே வேண்டுங் கவி''**

* * *

புலவர், தாரத்தின் கரம் செய்கின்ற தொண்டுகள் — ஆமாம்! நல்ல மனைவியின் இதயத்து அன்பு ஊற்றுச் செய்யும் அன்புச் சேவை — என்பவற்றை அற்புதமாகப் பாடுகின்றார்.

புலவர்கண்ட தாரத்தின் கரத்தை என் நடையில் இதோ தருகிறேன். அக்கரம் எத்தனை தொண்டுகளைப் புரிந்துள்ளது என்பதை எண்ணிப் பாருங்கள்!

திருமணநாளில், செந்தீயை வலம் வரும்போது, ஆரா அன்புடன் விரலுடனிணைந்து பிடித்த புது மலர்க்கை இன்பமுடன் சோறுக்கிப் படைக்குங் கை. கணவனுண்ட மிச்சத்தை அமுதமாய்க் கருதி, உண்பதற்காகப் பிசைந்து குழைக்குங் கை. மணநாட்டொட்டு அன்பு மாறாது வேண்டுவதெல்லாம் கணவனுக்குச் செய்து மகிழும் கை, கணவனுக்குக் கொடுநோய் வந்ததும், சத்திக்காக கணவனின் நெஞ்சத்தைத் தடவிவிடுங் கை. சத்தியெடுத்ததும், அச் சத்திமேல் வெண்மணலைத் தூவும் கை. சத்தியெடுத்த கணவனைச் சுத்திசெய்ய வெந்நீர் கொணர்ந்து கழுவுங் கை. கணவன் படுத்த படுக்கையல்லவா? வாயிலூற்றிய நீரை, மனைவி தன் கையிலேந்தி அப்பாலூற்றுங் கை. பின்பு கணவனின் ஈரத்தைத் துடைக்கும் கை. களைத்திருக்கும் கணவனை ஆசுவாசப்படுத்த விசிறிகொண்டு வீசும் கை.

தூசு துடைக்கும்கை. தூபமெடுக்குங் கை. கணவனின் நெற்றியில் நீறு பூசுங் கை. வியர்வையுண்டாகும்போது பக்கத்தேயிருந்து பழந்துணியினால் ஒற்றி வியர்வையைத் துடைக்கும் கை. உடலை வருத்தும் வலியேற்பட்டு, தாங்கமுடியாத வேதனையிலாழும்போது, மெல்ல மெல்ல உடலைத் தடவும் வித்தகக் கை. சீழ், இரத்தம், மலம், சிறுநீர் முதலியவற்றை அப்புறப்படுத்தி, கணவனைத் தூக்கி இருத்துங் கை. யார் துணையும் எதிர்பாராது, அருவருப்பில்லாது மலத்தை எடுத்து அகற்றியுதவும் ஒப்பற்ற கை. நாரியுளைவு ஏற்படின், நாரியை உருவிப்பிடித்துத் தைலமிடும் மெல்லிய கை.

நோயாளிக் கணவனின் படுக்கையில் இலையான் மொய்க்கும்போது, வேப்பமிலையைப் பிடியாகக் கட்டி அவற்றைக் கலைக்கும் காந்தள் கை. வைத்தியர் கொடுத்த காய்ந்த குளிகையை, நேரந் தவறாது உரைத்து உரைத்துத் தேய்ந்துவிட்ட விரலுடைய பொன்கை. பால்கறந்து காய்ச்சிப் பருக்கும் கை. அழுக்கான சீலைகளை அலம்பிப் பிழிந்து, வெயிலில் உலரவிடுங் கை.

பின்பு கணவன்படுத்திருக்கும்மெத்தை, கட்டில் என்பவற்றைத் தட்டிக் கொட்டி விரிக்குங் கை. நோயாளரான கணவரைப் பார்க்க வந்த உறவினருக்கும் மற்றையோருக்கும் தாம்பூலம் அளிக்கத் தட்டமெடுக்குங் கை.

வந்தவர்கள் யாழ்ப்பாணத்து மக்களல்லவா? எத்தனை எத்தனையோ அபிப்பிராயங்களை நோயாளிக்குமுன்பு கூறி மனத்தைக் கலக்குவார்களல்லவா? அப்போதெல்லாம், கணவனின் உள்ளம் பேதலிக்கக்கூடாதே என்பதற்காக, ''எல்லாவற்றுக்கும் குருநாதருண்டு' எனக்கூறி, உருக்கமுடன் வருங் கண்ணீரைத் துடைத்தெறியும் கை. மருந்தை உண்ணீர்மையோடு கூட்டுங்கை. தலையை வாரிவிடுங்கை. நீறு பொட்டு என்பவற்றை இட்டு மகிழுங் கை. இவற்றையெல்லாம் விரைவாக முடிக்கும் அழகுக் கை. மருந்துக்கேற்கப் பத்தியங்கள் சமைக்குங் கை. சமைத்ததை உணணச் செய்யுங் கை. எத்திசையும் பால், மருந்து பெறுங்கை.

அரிசி குத்திப் புடைக்குங் கை. மாவையெடுத்து—நோயாளியின் நாவுக்கு விரும்பியது போலக் கூழாக்கி, பலாவிலையில் வார்த்துப் பருக்குங்கை. பசி என வந்தோருக்கு அன்னமிடுங்கை.



இது மட்டுமா? கணவன் பணி மட்டுமல்லாது; கணவனின் தந்தை பணியும் கூடச் செய்ய, மன உவப்புடன் முனவரும் தொண்டுக்கை. வருத்தமுடன் எவருக்கும் ஏற்றதைச் செய்யும் அன்புக்கை. மணடபத்தைக் கூட்டுங்கை. வீடு மெழுகிச் சுத்தமாக்குங்கை, மலர் கொய்யும் கை. அம்மலர்களைப் பூசை செய்யும் பக்திக்கை. செய்யாளுறையுங்கை. விளக்கேற்றுங்கை. கணவனின் கவலையைத் தடவி மாற்றுங்கை.

எதற்கும் மாறு அற்ற மழைபோன்றகை. மருத்தெண்ணெய்க்கு சாறு இடிக்கும் கை. ஊறுகாய் போடுங்கை. வடகம் முதலியன செய்யுங்கை.

வேலைகளெல்லாம் ஒருவாறு முடித்ததும், தன் தலைக்கு எண்ணெய் ஏற்றுங்கை. சிகைக்காய் கொண்டு எண்ணெய் முழுக்குச் செய்யுங்கை. பின்பு, ஈரம் போக்குங்கை. தலையிலுள்ள கேசத்திலேற்பட்ட சிக்கை நீக்குங்கை. இப்படியான எல்லாம் நிறைகை.

உயர்வு காட்டும் 'சங்கக்குறி' கொண்ட தாமரைக்கை; எந்நாளும் உயர்வாழ்வு தரும் பாக்கியக்கை. அது தங்கக்கை! ஆமாம், தங்கத் தாத்தா கண்ட தங்கக்கை!

அக் கை தாரத்தின் கையல்ல?—**தாரமாகித் தாயாகிவிட்ட தாரத்தின்கை**

தாரம் தாயாகி பணியைத் தனது வாழ்வாக்கி மகிழும் மனைவியின் கை எத்தனை தொண்டுகளைச் செய்து மகிழுகிறது? தமிழ் நாட்டு மனைவியரின் கையை நவாலிப் புலவர், ஒன்றுமே விடாது தருகின்றார். கடைசியடியை அற்புதமாகத் ''தாரமாய்த் தாயானாள்கை'' என முடித்துள்ளார்.

இப்பாடலை 'நல்லமனைவியை' அடைந்த கணவன் ஒவ்வொருவரும் படிக்கும்போது, உண்மை உண்மை என்பர்; உருகுவர்; கண்ணீருகுப்பர்.

புலவர்காட்டிய தாரம் அடைந்தோர் தாய் அடைந்தோராவர். மற்றையோர் தாரம் பெறவில்லை—''பாரம்'' பெற்றோராவர்.

நல்லதாரம் மனைக்கு அலங்காரமல்லவா? இல்லாளகத்திருக்க இல்லாதது மொன்றுண்டா? அதனால்தான் பாரதியும் பாடினார்.

**''...... தெய்வ மணிக்கையின்**
**ஆணைகாட்டில் அனலை விழுங்குவோம்''**

மணம் முடிந்த பெண்ணே! நீ தாரம் மட்டுமல்ல—தாய்கூட.



## மனிதன் தேடுகிறான்!

மனிதன் பாடுபட்டு உயிர்வாழ முயல்கிறான். ஆனால் உயிர் என்னவோ தங்காமல் போய்விடுகிறது. அதற்காகவே இந்த அற்ப வாழ்வில் சில காலமாவது தென்பாக இருக்க உயிரிலும் எவ்வளவோ உயர்வான தொன்றைத் தேடி அலைகிறான்.

— கவியரசர் தாகூர்

மனத் திண்மையே செயலின் வெற்றிக்கு அறிகுறி. எண்ணியதை எண்ணியவாறு செய்து முடிக்கும் ஆற்றல் மனவுறுதி யுடையார்க்கே உண்டு. மனம் தடுமாறினுல் அனைத்தும் தடுமாறும். அதனுல் தடுமாற்றம் கூடவே கூடாது!

"உதயம்" என்னும் செந்தமிழ் ஏட்டின் நிர்வாக ஆசிரியரா யிருந்த எழுத்தாளர் அநவரதவிநாயகமூர்த்தியின் படைப்புக்கள் பல பத்திரிகைகளில் அடிக்கடி வெளிவருவன. பண்டைத் தமிழிலக்கியங்களில் அவர்க்குள்ள தொடர்பை இக் கட்டுரையிலும் (இலங்கை வானெலி 'மாதர்பகுதி' யில் ஒலிபரப்பப்பட்டது) காணலாம்.



# மனத் திட்டம்

வை. அநவரதவிநாயகமூர்த்தி

ஒரு நாட்டின் அறிவு, செல்வம், கல்வி, நாகரிகம் முதலியவைகளின் வளர்ச்சிக்கு அந்நாட்டுப் பெண்களின் அறிவே கருவியாகும். அதற்கேற்ப, சீரும், செழிப்பும் நிறைந்து விளங்கிய பழந் தமிழகத்தில், பல நல்லிசைப் புலமை மெல்லியலார் பலகி, தம் பொன்றுப் புகழைத் தமிழ்கூறும் நல்லுலகில் நிலைபெறச் செய்தனர். அப் பெண்பாற் புலவர் பலருள்ளும் சிறந்த நூலறிவுடன் உலக அறிவும் இராசதந்திரப் பயிற்சியும் சாலப்படைத்து புரவலரும் போற்ற விளங்கியவர் நம் தமிழ் மூதாட்டியான ஔவையாரே ஆவர். இந்நல்லிசைப் புலமை மெல்லியலாரின் அருமைத் திருப்பெயர் இன்றும் நம்நாட்டில் பெரும்புலவர் முதல் அரிவரி கற்கும் இளஞ்சிறுர்வரை பல மக்களிடையே நிலவி வருகின்றது. பெண்மணிகளுக்கு ஓர் வழிகாட்டியாக விளங்கும் ஔவையார் தமது அறிவின் முதிர்ச்சியால் உலக மக்கட்கு நன்னெறி தெருட்டும் நற்பாக்கள் பலவற்றை அளித்துள்ளார்கள். மக்கள் வாழ்வில் பல சம்பவங்கள் நிகழ்கின்றன. எதிர்பாராதவிதமாக வாழ்வில் கஷ்டநஷ்டங்கள் ஏற்பட்டு விட்டால் அநேகர் அவைகளைக்கண்டு மனத் தடுமாற்றம் அடைகின்றனர். அவ்வாறு கலங்குவதனுல் ஒரு காரியத்தையும் திறம்படச் செய்ய முடியாது. அத்துடன் வாழ்க்கையில் முன்னேற்றமும் முயற்கொம்பாகிவிடும். எந்த விஷயத்திலும் மனம் கலக்கம் அடையக கூடாது என்பதனை அறிவுறுத்தவே, ஔவையாரும், நீதிச் சுரங்கமாக விளங்கும் தமது 'ஆத்தி சூடி'யில் **"மனந் தடுமாறேல்"** என்று அழகாகக் கூறிப் போந்தார்.

வாழ்க்கையை இன்பமாக நடத்துவதற்கு எங்களுக்குத் துணைபுரிவது மனம் தான். அது தடுமாறினுல் அனைத்தும் தடுமாறும். மனத்தடுமாற்றம் உடையார் எந்தத் துறையிலும் முன்னேற முடியாது. எக்கருத்தைச் செய்யத் தொடங்கிய போதிலும் அதனுல் அடையப் போவது நன்மையோ அல்லது தீமையோ என்று அடிக்கடி சிந்தித்து மனத்தடுமாற்றம் அடைவர் சிலர். ஒரு தொழிலைத் திறம்படச்செய்து முடிப்பதற்கு மனத்தடுமாற்றம் இருக்கவேகூடாது.



மனத்தடுமாற்றம் கொண்டவர்கள் தங்களுக்கென ஒரு கொள்கை யுடையவரல்லர். தாயுமானுரும், 'மன மடக்க மில்லார்க்கு வாயேன் பராபரமே' என்று கூறுகின்றுர்.

அடுத்த படியாக எங்களது அன்றுட வாழ்வை எடுத்துக் கொள்வோம். எதிர்பாராத விதமாக சில சமையங்களில் எத்தனையோ துன்பங்கள் வந்து எங்களைத் தாக்குகின்றன. அவைகளைக் கண்டு செய்வதின்னதெனத் தெரியாது தடுமாறுகின்றேம். இத்தகைய அனுபவத்தைத் தாய்மார்களாக இருக்கும் நம் சகோதரிகளில் பலர் அடைந்திருப்பார்கள். குடும்பத்தில் சிலர் ஒரே சமையத்தில் நோய்வாய்ப்பட்டுத் துன்புறுவர். வீட்டுக் காரியங்களைக் கவனித்து வரும் தாய்மார்களுக்கு புலன் ஒரு வழியில் செல்லாது மனம் தடுமாறிக் கொண்டிருக்கும். இன்பதுன்பங்களைச் சரிசமமாக மதிக்கக்கூடிய அறிவுத்திறன் இவர்களுக்கு இல்லாமையாலன்றே இப்படியாக மனம் தடுமாறுகின்றனர் என்பது நன்கு விளங்குகின்றதல்லவா! பெருமதியும் நிறைகுணமும் படைத்தவர்களுக்கே மனம் தடுமாருத நிலை ஏற்படும். வாழ்வில் மலைபோலத் துன்பங்கள் வந்து குவிந்தாலும் அவைகளைக் கண்டு நாம் அஞ்சக்கூடாது. மக்கள் கவிஞன் என்று மாநிலம் போற்றும் பாரதி,

**அச்சமில்லை! அச்சமில்லை!**
**அச்சமென்ப தில்லையே! [லும்**
**உச்சிமீது வானிடிந்து வீழுகின்றபோதி**
**அச்ச மென்ப தில்லையே!**

என்று ஆணித்தரமாகக் கூறுகின்றுன்,

மனத்திண்மையே செயலின் வெற்றிக்கு அறிகுறி. எண்ணியதை எண்ணியவாறு செய்து முடிக்கும் ஆற்றல் மனவுறுதியுடையார்க்கே உண்டு. இதனுலன்றே வையம் போற்றும் வள்ளுவனும்,

**'எண்ணிய எண்ணியாங்கு எய்துப**
**எண்ணியார்**
**திண்ணிய ராகப் பெறின்'.**

என்று அறிவுறுத்துகின்றுர். ஒரு நல்ல காரியத்தைக் கைக்கொண்டபின் எத்தகைய இடர் வந்தபோதிலும் அதனைக் கைவிடாது செய்து முடிக்கவேண்டும். ஒரு தொழிலை செய்து முடிப்பதற்கு வேண்டியது மனவுறுதியே. ஆரம்பத்திலேயே இடையூறுகளை ஆராய்ந்து நீக்கிவிட்டுச் செயலை ஆற்றத் தொடங்க வேண்டும். செயல் ஆற்றுங்கால் இடை யூறுவந்தால் அதற்குத் தளராமல் மனவுறுதியுடன் கருமத்தைச் செய்துமுடிக்க வேண்டும்.

**'வினைத் திட்டம் என்பது ஒருவன் மனத்**
**மற்றைய எல்லாம் பிற' [திட்பம்**

என்பது பொய்யாமொழி.

நம் சகோதரிகளில் பலருக்கு சந்திரமதியின் சரிதை நன்கு தெரிந்திருக்கும். சந்திரமதியும் அவளது ஆருயிர்த் துணைவன் அரிச்சந்திரனும் அனுபவித்த இன்னல்களோ அளப்பரியன. கௌசிக முனியின் சூழ்ச்சியால் நாடு நகர் செல்வம் அனைத்தையும் இழந்த அயோத்தி மன்னன் அரிச்சந்திரன் ஈற்றில் அம் முனிவன் அடைக்கலமாக வைத்த பொருளையும் திருப்பிக் கொடுக்க முடியாமல் மனம் வருந்தினுன். இதனை அறிந்த சந்திரமதி, தன்னையும் மகன் தேவதாசனையும் விற்று முனிவருடைய பொருளைக் கொடுக்குமாறு நாயகனை வேண்டினுள். வேறு வழியின்றி பிராமணன் ஒருவனுக்கு அவர்களை விற்றுவிடுகின்றுன் அரிச்சந்திரன். பிராமணன் வீட்டில் இருவரும் பல கஷ்டங்களை அனுபவித்து வருகின்ற காலத்தில் ஒருநாள், தேவதாசன் அரவம் தீண்டி இறந்துபோனுன். ஆருயிர் மைந்தன் பிரிவால் அழுது புலம்பி ஒருவாறு மனம் தேறிய சந்திரமதி மகனைத் தூக்கிக்கொண்டு சுடுகாட்டுக்குச் சென்றுள். பிணம் சுடுவதற்குரிய பொருளைத் தருமாறு அச் சுடலைக் காவலனுகிய அரிச்சந்திரன் கேட்டபோது அதனைப் பெற்றுத் தருவதாகக் கூறிவிட்டு அவள், தன்னை அடிமைகொண்ட பிராமணனது இல்லத்தை நோக்கிச் சென்றுள்.

செல்லும் வழியில் ஒரு பிணத்தைக் கண்டு தன் புதல்வனோ என ஐயுற்று அதனை மடியில் தூக்கி வைத்துப் புலம்புவாளாயி னாள். காசிராசன் புதல்வனைக் காணாது தேடிவந்த அரண்மனைச் சேவகர், சந்திரமதி யைக் கொலைக்காரி என எண்ணி அவளை அரசசபைக்கு அழைத்துச் சென்றனர். அரசன் அவளைக் கொல்லுமாறு பணிக்க, அதனை நிறைவேற்றும் பொறுப்பு அரிச் சந்திரனில் விடப்பட்டது. ஒன்றன்பின் ஒன்றாக இடுக்கண் பல தொடர்ந்து வந்த போதிலும் சந்திரமதி மனம் தடுமாறினாளா? சற்றுச் சிந்தித்துப் பாருங்கள். கொலைக் களத்தில் தன் உயிர் ஊசலாடிக்கொண் டிருந்தபோதிலும், அரிச்சந்திரனை நோக்கி, மன்னவ! மனந் தடுமாறாது உமது கடமை யைச்செய்வீராக என்று சந்திரமதி கூறியதை உற்று நோக்கும்போது அவளது மனவுறுதி நன்கு புலனாகின்றதல்லவா?

‘பொருந்து நீத்தத்திற் புற்புத
வாழ்வை நீ மெய்யென்று
அருந் தவத்தையு மறத்தையு
மெய்யையும் விடுத்து
வருந்தல் மன்னவ வழிவழி
சிறக்கென வாழ்த்தி
இருந்த பின்சுடர் வாட்படை
வலக்கையி னெடுத்தான்’

என்று ஆசுகவிராஜர் நாம் இயற்றிய அரிச் சந்திரபுராணத்தில் கூறுகின்றார்.

‘மனந் தடுமாறேல்’ என்னும் அமுத வாக்கியத்தை பொன்மொழியாகப் போற்றி அதன்படி இவ்வுலகில் சிறப்புடன் வாழ்ந்து தம் பொன்றாப் புகழை இம்மாநிலத்தில் நிலை பெறச் செய்த நாரிமணிகளைப்பற்றிப் பல நூல்கள் வாயிலாக நன்கு அறிந்திருக்கின் றோம். சேக்கிழார் பெருமானால், திருவருள் இயக்கியபடி அருளிச்செய்யப்பட்ட திருத் தொண்டர் புராணத்தில், ‘மங்கையர்க்குத் தனி அரசி எங்கள் தெய்வம்’ என்று பாராட் டப்படும் மங்கையர்க்கரசியாரது வாழ்க்கை யில் ஒரு நிகழ்ச்சியை எடுத்துக்கொள்ளு வோம்.

மங்கையர்க்கரசியார், தமது கணவ ராகிய பாண்டியமன்னன் சமணசமயத்தைக் கைப்பற்றி ஒழுக, அஃது உளங்கொளா ராய்க் குலமகட்குத் தெய்வம் கொழுநனே என்னும் நல்லுரை கடவாது அவன் வழி பாட்டிலும் காதன்மையிலும் ஒருசிறிதும் குறைவுபடாது, தமது திருவுளத்தே முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளாய சிவபெருமானை யன்றிச் சிந்தியாது, மன்ன வனை மீண்டும் சைவநெறியிற் புகுத்தும் செவ்விநோக்கித் திருவருளை நினைந்து கிடந் தார். ஞானசம்பந்தரின் பெருமையைக் கேள்வியுற்ற அம்மையார், அமைச்சர் பெருமானாகிய குலச்சிறைநாயனாரால் திரு முகப் பாசுரம் எழுதுவித்து சம்பந்தரை மதுரைக்கு வருவித்தனர். அத்துடன் அவருக்குத் திருமடஞ் செய்தும் கொடுத்த னர். சமணர் அவர் தங்கியிருந்த மடத்துக் குத் தீவைத்தபோதும், பின்னர் பாண்டியன் வெப்பு நோயினால் வருந்திய சமையத்தும் கோப்பெருந்தேவியாரது நிலைமையை நன்கு ஆராய்ந்தால் அவரது மனவுரனும் மதிவல்லப மும் அங்கை நெல்லிக்கனிபோல விளங்கும்.

வாழ்வில் இடுக்கண்வந்த போதிலும் மனம் தடுமாறாத நிலைமை வாய்ந்து விளங் கினான் சக்கரவர்த்தித் திருமகனான இராமன் என்று கவிச்சக்கரவர்த்தி கம்பர் தமது இராமாயணத்தில் இனிய செய்யுள் மூலம் எடுத்துக் காண்பித்துள்ளார். பரசுராமரை யும் அடக்கிய பராக்கிரமன் இராமன் தான் முடிசூடுவதற்குக் குறித்த நன்னாளில் அரச போகத்தையும் அணிமுடியையும் துறந்து மரவுரி யுடுத்துத் தம்பி இலக்குவனும் மிதி லைச் செல்வி சீதையும் பின்தொடர வனம் புக நேர்ந்ததற்குச் சிறிதும் கவன்றானல் லன். பிறர்மேல் குற்றம் சுமத்தினானு மல்லன். இதனைக் கூறவந்த கம்பநாடர்,

‘இப்பொழு தெம்ம னோரா
லியம்புதற் கெளிதோ யாரும்
செப்பருங் குணத்தி ராமன்
திருமுகச் செவ்வி நோக்கின்



ஒப்பதே முன்பு, பின்பு
வாசகம் உணரக் கேட்ட
அப்பொழு தலர்ந்த செந்தா
மரையினை வென்ற தயமா.’

என விளங்கக் கூறினர்.

இராமனின் முடிசூட்டு விழாவன்று அவன் சிற்றன்னையாகிய கைகேயி அவனை நோக்கி, ‘பரந்த இந்தப் பூமியைப் பரதன் ஆளவிடுத்து, நீ சடைமுடி புனைந்து கான கம் சென்று தவம்பூண்டு பதினான்கு வருடம் கழித்து வருக என்றனன் அரசன்’ என்னும் கருத்துப்பட,

“ஆழிசூ ழுலக மெல்லாம்
பரதனே ஆளநீ போய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித்
தாங்கரும் தவமேற் கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப்
புண்ணியத் துறைக ளாடி
ஏழிரண் டாண்டின் வாவென்
றியம்பின ரரசன்’’ என்றாள்.

இதனைக் கேட்டதும் இராமன் இடியேறு கேட்ட நாகம் போல் மனம் கலங்கினானா? அல்லது அவனது செந்தாமரை மலரை யொத்த திருமுகம் வாடி ஒளி இழந்ததா? இல்லை. முன்னர் இருந்ததைக் காட்டிலும் முகம் புன்னகை பூத்துப் பொலிந்து விளங் கியது. இராமன் சிற்றன்னையை நோக்கி,

மன்னவன் பணியன் றாகில்
நும்பணி மறுப்பனோ வென்
பின்னவன் பெற்ற செல்வ
மடியனேன் பெற்றதன்றோ?
என்னினி யுறுதி அப்பால்
இப்பணி தலைமேற் கொண்டேன்
மின்னொளிர் கான மின்றே
போகின்றேன்விடையும் கொண்டேன்

என்று மகிழ்ச்சியுடன் கூறிய வீரவிடை, மனம் தடுமாறாமையால்தான் என்பதை மறுப்பாருளரோ!

இதுகாறும் கூறியவைகளினால் நாம் அறிவது என்ன? எங்கள் வாழ்வில் எத் தகைய இடர்தான் வந்தபோதிலும் அத னால் மனம் தடுமாறாது இறைவன் எங்க ளுக்கு அளித்த ஆற்றலைப் பயன்படுத்தி அக்கஷ்டங்களை இயன்றவரையில் அகற்றி அக மகிழ்ச்சியுடன் இருக்க முயலுதல் வேண்டு மென்பதே!

* "தன் மனதைக் கரைத்து அந்தப் பேனாவுக்கூடாக மசியாக வடிந்து வரிவடிவமாகக் காகிதத்திலே பதிந்துகொண்டிருந்தாள்" என்பனபோன்ற சொற்களிலே கருத்தை உயிர்த் துடிப்பாக்கி உயிர்க் கதைகள் அமைக்கும் சிறு கதை எழுத்தாளர் டானியல் தமிழகத்திலும் ஈழத்திலும் புகழ் படைத்த பண்பமைந்த எழுத்தாளர்.

"உண்மைக்கும் பிரமைக்கு மிடையே நடக்கும் போராட்டமே இலக்கியம்" என்ற கருத்தை இக் கதையிலே ஆராய்ச்சி செய்கிறார்.



# தெளிவு

கே. டானியல்

எழுத்தாளர் சுந்தரம்பிள்ளை மேசைமீது அடுக்கப்பட்டிருந்த பழைய கையெழுத்துப் பிரதிகளை அவசர அவசரமாகத் தடவிக் கொண்டிருந்தார். எதைத்தான் இத்தனை அவசரமாகத் தேடுகிறாரோ! சற்றுவேளைக்கு முன் யன்னலுக்கூடாக அவர் கண்டகாட்சி அவர் மனதைப் பிய்த்துப் பிடுங்கிக்கொண்டிருந்தது. "வேலைக்கார நாய்க்கு என்னவாய், பொத்தடிவாயை, அவரைப்பற்றிப்பேச உனக்கு என்னடி துணிவு" என்று கூறிக்கொண்டு அடுத்தவீட்டுச் சந்திரா வேலைக்காரி 'மினியா'வின் கன்னத்தில் அறைந்த அறை, எழுத்தாளர் சுந்தரம்பிள்ளையின் இதயத்தில் வைத்த ஆணிபோல குற்றிக் கிழித்திருக்க வேண்டும். அத்தனை அவஸ்தையுடன் அவர் காணப்பட்டார்.

"உண்மைக்கும் பிரமைக்கு மிடையே நடக்கும் போராட்டமே இலக்கியம்; உண்மைக்கும் பிரமைக்குமிடையே நடக்கும் போராட்டமே இலக்கியம்" என்ற வார்த்தைக் கோவைகள் அவர் மனதில் எதிரொலித்துக் கொண்டிருந்தன. கடந்த ஓராண்டு காலமாக மனதின் முடுக்கிலே பதுங்கிப்போய் அடிக்கடி தலைநீட்டிப் பார்த்துக்கொண்டு வேடிக்கை காட்டிய இந்த வார்த்தைக் கோவை, இப்போது முழு உருவத்துடன் அவர் மனத்திரையிலே படிந்துபோய் நின்றது.

இத்தனை அவசரத்துடன் மேசையில் கிடந்த பழைய கையெழுத்துப் பிரதிகளை அலசி ஆராய்ந்து கடைசியில் அந்தப் பழைய பிரதியை எடுத்தே விட்டார்.



ஒருவருட காலத்துக்கு முன் ஒரு நாள் 'காதல்' என்ற தலைப்பின்கீழ் எழுதப்பட்டுக் குறையாகக் கிடந்த அந்தக் கையெழுத்துப் பிரதியைக் கண்டெடுத்துவிட்ட பெருமையில் அவர் கண்களில் ஒளிவீசின. மேசை வெளிச்சத்தின் பொத்தானை அழுத்தி வெளிச்சத்தை வருவித்துக் கொண்டே அவர் அதைப் படித்தார்; மனதுக்குள்ளாகவே படித்தார்.

மாடிவீடும், "நான், நீ' என்று ஓடிவர வேலையாட்களும், உலாப் போகக் காரும் இருந்தும் என்ன பயன் மனதுக் குகந்த ஒருவன் இல்லையானால்?

"சந்திராவுக்கு முறை அத்தான்மார் இருவர் இருந்தார்கள். ஒருவன் ஐந்நூறுரூபாய் பெறும் உத்தியோகஸ்தனாக இருந்தான். ஒருவன் சர்வகலாசாலை மாணவனாக இருந்தான். இவர்கள் இருவரைப்பற்றி அவளுக்கு உயர்ந்த மதிப்பு இருந்தாலும் அவள் தேசப்பிரியாவைத் தன மனச் சிறையிலே பிடித்து வைத்திருந்தாள். தேசப்பிரியாவின் அழகு அந்தஸ்து, கௌரவம் இவைகளைப்பற்றிய ஆராய்ச்சியில் அவளால் இறங்க முடியவில்லை. அவனிடம் அவள் முழுமையான காதல் வைத்திருந்தாள். அவள் தமிழிச்சி, கண்ணகி பரம்பரையில் வந்தவள். ஒருவனை மனதிலே வரித்து விட்டால் உயிர் போனாலும் அவனை மனதிலிருந்து எடுத்து வீசிவிட முடியாத பண்புடைய பாரம்பரியத்தைச் சேர்ந்தவள். ஆகவே தான் தேசப்பிரியாவை எந்த விதத்திலும் கட்டிக் கொள்வது என்ற முடிவுக்கு வந்திருந்தாள்.

"தேசப்பிரியா அந்த ஊருக்குப் புதிதாக வந்தவனல்ல அந்த ஊரையே தனது பிறந்த மண்ணாகக் கருதிக்கொண்டவன். இருபத்தைந்து வருடங்களுக்கு முன் பல் கட்டும் தொழில் செய்வதற்காக வந்திருந்த சிறிசேனாவின் மகனை இந்த மண்ணிலேயே பிறந்தவன். சிறிசேனா செத்துப்போனதும் நவீன முறையில் அமைந்த கருவிகளைக் கொண்டு தந்தையின் அதே தொழிலைத் திறம்பட நடத்திக்கொண்டு வந்த தேசப் பிரியாவுக்கு நெடுந்துணை நிற்பதற்காகவோ என்னவோ தனது கொதிப்பெடுக்கும் பல்லை எடுத்துவிட்டுப் பதிலுக்குப் பல்லுப் போடுவிப்பதற்காகச் சந்திரா சென்றிருந்தாள்.

"சந்திரா அடிக்கடி தேசப்பிரியாவைப் பார்க்க ஆசைப்பட்டாள்; அவனின் அன்பையெல்லாம் தானாகவே சுமந்து கொள்ளவேண்டுமென்று ஆசைப்பட்டாள். அவனைக் கட்டிக்கொண்டு இந்தத் தேசத்துக்கே முன் மாதிரியாக விளங்க வேண்டுமென்று முடிவு செய்துகொண்டாள்.

தேசப்பிரியாவுக்குச் சந்திராவைக் காதலிக்க முடிந்ததில் பெருமை! அவளின் கடைக்கண் வீச்சுக்கு இந்த உலகத்தையே சுழற்றி வைக்கும் சக்தி இருப்பதாக அவன் நினைத்தான். அப்படிப்பட்ட சந்திராவை தனது மோகனப் புன்னகையால் வீழ்த்த முடிந்

ததே என்பதில் அவனுக்கு மார்பு விங்கும் பெருமிதம்!

"சந்திராவின் மனதுக்கு மாறாக அந்த வீட்டில் யாருமே விரலசைக்க முடியாது. தந்தை இல்லாத அவளுக்கு அவள் அம்மா அடங்கியே வாழ்ந்தாள். செத்துப்போன அவள் தந்தையால் சின்னவயசில் எங்கோ இருந்து கொண்டுவரப்பட்ட மினியா என்ற வேலைக்காரியும் ஏறக்குறையச் சந்திராவுடன் ஏட்டிக்குப் போட்டியாகத்தான் வளர்ந்திருந்தாள்.

தேசப்பிரியா சந்திராவுடன் வீட்டுக்கு வந்துபோகும் போக்கெல்லாம் மினியாவுக்கு மனசு என்னவோமாதிரி இருக்கும். அந்த உணர்வைச் சரியாக எடைபோட்டு விடமுடியாது.

"சந்திராவின் அம்மாவுக்கு மனப்புழுக்கமாகத்தான் இருந்தது. ஆனாலும் நாகரிகமாக ஆசிரியைத் தொழில்பார்க்கும் மகளைக் கண்டித்துவைக்கும் துணிவு அவளுக்கு ஏற்படவில்லை. ஆனால் ஒருதடவை மினியா தேசப்பிரியாவின் குணம் நடையைப் பற்றிக் கூறிவைத்த போதுதான் அவளுக்கு மகள்மேல் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. மறுநாள் அவள் சந்திராவிடம் தாறுமாறாக நடந்துகொண்டாள்.

"சந்திராவுக்கு உண்மை தெரிந்துபோய்விட்டது. மினியா அடிக்கடி தனது காதலனைப் பார்க்கும் பார்வையிலிருந்து அவளின் மன எண்ணத்தைப்புரிந்து வைத்துக்கொண்டிருந்தாள். என்னதான் மலையளவு எதிர்ப்புக்கள் வருவதாக இருப்பினும் தேசப்பிரியாவை அவள் கட்டிக்கொள்வதான முடிவில் சிறிதளவேனும் அசைவு ஏற்படவில்லை. தன் உப்பைத் தின்றுகொண்டு, தனக்கு எதிராகச் சதிவேலை செய்யும் அந்த மினியாவைச் சபித்தாள். அவள் கன்னத்தில் அறைய வேண்டுமென்ற ஆத்திரமும் வந்தது. சொல்லி வைத்தாற்போல ஒருநாள் அந்தச் சந்தர்ப்பமும் வந்துவிட்டது.

"மினியா, அம்மாவிடம் நீ என்ன சொல்லி வைத்திருக்கிறாய்?"

நான் ஒண்டும் சொல்லவில்லையே, அம்மாதான் ஏதோ சொன்னா!"

ஏனடி பொய் சொல்லுகிறாய்."

"ஆமாம் சொன்னேன். அவர் குணம் எனக்குப் பிடிக்கவில்லை. அவர் என்னைப் பார்க்கிற பார்வையும் காட்டுகிற சிரிப்பும் அவர் குணத்தை எடுத்துக் காட்டுகிறது அதைச் சொன்னேன்.

வேலைக்கார நாய்க்கு என்னடி வாய், பொத்தடி வாயை! அவரைப் பற்றிப் பேச உனக்கு என்னடி துணிவு!.

இதைக்கூறி முடிக்குமுன் சந்திராவின் கரங்கள் மினியாவின் கன்னத்தில் ஓய்வு கண்டன.

"உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்த அந்த மினியாவுக்கு இதுவும் வேண்டும் இன்னமும் வேண்டும். தேசப்பிரியாவைக் கல்யா



ணம் செய்துகொண்டு இந்த நாட்டின் ஆதர்ச ஜோடிகளாக விளங்க வேண்டுமென்று ஆசைப்பட்ட சந்திராவின் புனிதமான ஆசையைத் தனது பொறாமைக் கண்களால் பொசுக்கிவிட எண்ணிய மினியா தன் தவற்றுக்காக வருந்தினாளோ? சந்திராவின் அடியின் நோவுகண்டு மினியா விம்மி விம்மி அழுதாள்..."

* * *

எழுதியவரையில் கதையைப் படித்து முடித்தார் சுந்தரம்பிள்ளை. இந்தக்கதையை அவர் எழுதிச் சரியாக ஒருவருடமாகிறது. இப்போது அதைப் படித்துப் பார்க்கும்போது உத்வேகமோ உணர்ச்சியோ அந்தக் கதையில் இருப்பதாக அவருக்குப் படவில்லை. உள்ளவரையில் அவர்படித்து முடிக்கும்போது 'உண்மைக்கும் பிரமைக்குமிடையே நடக்கும்போராட்டமே இலக்கியம்' என்ற அந்தக் குட்டி எழுத்தாளனின் குரல் மீண்டும் மீண்டும் அவர் செவிகளில் ஒலித்து இருதயத்தை இடித்தது. நீண்ட ஒருவருடத்தின் பின் அந்த வார்த்தை அவர் இருதயத்தை இடிக்கிறது.

சுந்தரம்பிள்ளை பிரபல சிறுகதை எழுத்தாளர். அவரை மதிக்காத பத்திரிகைகளே இல்லை எனலாம். உள்நாட்டிலென்ன வெளிநாட்டில்கூட அவர் பெயர் பிரசித்தம்.

இப்போது அவருக்கு வயது நாற்பதாகிறது. ஆனாலும் வயதைவிட அவர் இளமையாக இருந்தார். சின்ன வயசில் இருந்தே அவருக்கு இலக்கிய ஈடுபாடு இருந்தமையால் இருபதாவது வயதில் உள்ளூர் மத்தியக் கல்லூரியில் ஆங்கில ஆசிரியத் தொழிலில் இறங்கும் போதே எழுத்துலகப் பிரசித்தம் அடைந்து விட்டார். இந்த நீண்ட இருபதாண்டு காலமும் அவர் இலக்கியத்திற்குச் செய்த சேவையைக் கௌரவிக்கப் பொன்னாடை போர்க்கவும், பொற்கிழி வழங்கவும் சமீபத்தில்தான் ஏற்பாடாகி இருக்கிறது.

இன்று வரையில் அவர் தடிப் பிரமச்சாரி! உடலின் வியவஸ்தைகள் தோன்றுகின்றனவோ என்னவோ அவர் எப்போதும் அமைதியாகவே காணப்படுவார்.

பட்டணப் பகுதியின் மேல் கட்டு மனிதர்கள் வாழும் சோமசுந்தரம் வீதியில் வசிக்கும் சகோதரியின் வீட்டின் மேல்மாடி அறையைத் தனக்காக ஆக்கிக்கொண்டு அந்த அறையிலே சதா அடைபட்டுக் கிடப்பார்.

பாடசாலை வேளையைத்தவிர ஏனைய வேளைகளில் அறையில் கிடந்து இலக்கிய ஆராய்ச்சி செய்வார்; எழுதுவார். சிலவேளை, மாலை வேளையில் பீச்சுக்கோ, சினிமாவுக்கோ போவார். இரண்டொரு நண்பர்களை வைத்துக்கொண்டு அவர்களைத் தனது அறைக்கு அழைத்து வந்து இலக்கிய சர்ச்சை செய்வார்; அவ்வளவுதான்.

ஊரில் எத்தனையோ சங்கங்கள் இருக்கின்றன. அவைகளில் எழுத்தாளர் சங்கமும் ஒன்று. அடிக்கடி அவர்கள் கூடிக் கூடி

இலக்கிய சர்ச்சை செய்வார்கள்.
ஆனால் சுந்தரம்பிள்ளை அந்தப்
பக்கமே எட்டிப் பார்க்க மாட்டார்.
அனுப்பப்படும் அழைப்பை அப்
படியே மூலையில் வீசிவிட்டு "இலக்
கியத்தைப் பற்றித் தெரியாத கற்
றுக் குட்டிப் பயல்கள் இலக்கிய
சர்ச்சை செய்கிறுங்களாம் இலக்
கிய சர்ச்சை!" என்று மனதில்
கறுவிக்கொண்டு அனுயசமாய்
இருந்துவிடுவார்.

கல்யாணமே செய்துகொண்டு
வாழ்க்கையை நடத்தத் துணியாத
அவர் அருமையான காதல்கதை
கள் எழுதிப் புகழ் சம்பாதித்துக்
கொண்டார். தன்னையும் தனது
சுற்றச் சார்பையும் தான் பார்க்
கும்—பழகும் மனிதர்களையும் உள்
ளடக்கித் தன் பேனுவின் மசியால்
அவர் படைத்துவைத்த காதல்
சோடிகள் சாகாவரம் பெற்று
இன்றும் வாழ்கிறுர்கள்.

கடந்த வருடத்தில் தமிழ் சிங்
கள மக்களிடையே ஏற்பட்ட வகுப்
புக் கலவரத்தின்பின் தமிழ் சிங்
கள இனத்திடையே கலப்பையும்
புனிதக் காதலையும் வளர்ப்பதை
நோக்கமாகக் கொண்டு "காதல்"
என்ற மகுடத்தின்கீழ் அவர் அந்
தக் கதையை எழுதத் தொடங்கி
னர். பக்கத்து வீட்டில் வசித்த
சந்திராவின் வாழ்க்கையை அடித்
தளமாக அமைத்து அக்கதையை
எழுதத் தொடங்கினர். மினியா
என்ற அந்தச் சிங்கள வேலைக்கா
ரப் பெண்ணை, அவர்பேனு, வில்லி
ஆக்கிவிட்டதும் அதற்கு ஏற்றுற்
போல் சந்திரா அவள் கன்னத்தில்
அறைந்ததும் பொருத்தமாகவே
வந்துவிட்டன.

மினியா கன்னத்தைப் பொத்
திக்கொண்டு அழுதது வரையில்
கதை நகர்ந்துகொண்டு செல்லும்
போது அவரின் இலக்கிய நண்பன்
ஒருவன் நகரமண்டபத்தில் வெளி
நாட்டு எழுத்தாளர் ஒருவருக்கு
நடக்கும் வரவேற்பு விழாவுக்கு
வரும்படி அவரை அழைத்தான்.
யாராவது வெளிநாட்டுப் பிரமுகர்க
ளுக்கு வரவேற்பு நடக்கும்போது
போவது அவருக்குப் புதிதல்ல.
அதன்படி அந்த விழாவுக்கு அவர்
போயிருந்தார். "உண்மைக்கும் பிர
மைக்குமிடையே நடக்கும் போராட்
டமே இலக்கியம்" என்று ஒரு குட்டி
எழுத்தாளன் தனது வரவேற்புரை
யில் கூறிவைத்தார். இதைக் கேட்
கும்போது சுந்தரம்பிள்ளையின் மன
துக்கு ஒருமாதிரியாகத்தான் இருந்
தது. ஆனல் விழாமுடிந்து வீட்
டுக்கு வரும்போது இந்த வார்த்
தைக்கோவை அவரைப் படாதபாடு
படுத்திக்கொண்டிருந்தது. அன்று
இரவு மறுபடியும் விட்ட கதையி
லிருந்து தொடர்வதற்குப் பேனு
வைத் தூக்கினர் கதை அதற்கு
மேல் ஒருவரிகூட நகர மறுத்து
விட்டது. அவர் விரும்பினுரோ
இல்லையோ உண்மைக்கும் பிர
மைக்குமிடையே அவர் மனது சிக்
கித் தவித்தது. சந்திரா பிரமையின்
உருவமாக அவர்முன்னே வந்து
நின்ருள் "அப்படியானல் உண்
மையின் உருவம் — — —?" இப்படி
அவர்மனது ஆயிரம் தடவை கேட்
டுக்கொண்டது.

அதுவரையில் படைத்து உலவ
விட்ட சந்திராவின் இலட்சிய உரு



வத்தில் மாற்றங்காண அவர்பேனு
மறுத்து விட்டது. மினியாவுக்கு
இலட்சிய முழுமை கொடுக்க மனசு
விரும்பினுலும், மனசின் சுரப்புக்
கண்களை ஏதோ அடக்கி நிற்பது
போலத் தோன்றவே மரண வேத
னையோடு அந்தச் சிருஷ்டியை அப்
படியே விட்டுவிட்டார். நீண்ட ஒரு
வருட காலமாக அந்தக் குறைச்சிசு
மேசைமேல் அடங்கிக்கிடந்து இப்
போதுதான் மறுபடியும் அவர் கரத்
தில் வந்து குந்தி இருக்கிறது.

இந்த ஒருவருடகால இடை
வெளியில் அடுத்த வீட்டில் எத்த
னையோ நடந்துவிட்டன. சந்திரா
தேசப்பிரியாவை மணமுடித்து குழந்
தைக்கும் தாயாகிவிட்டாள். சந்தி
ராவின் அம்மா செத்துப்போனுள்.
இன்னும் எத்தனையோ … … …

◆ ◆ ◆ ◆

சமீபகாலத்திலிருந்து அந்த
வேலைக்காரி மினியாமீது அவருக்
குப் பரிவுணர்ச்சி தோன்றி வந்
தது. அந்தக் குடும்பத்தின் சுமை
தாங்கியாக அந்த மினியா இருக்கி
ருள் என்பதை அவரால் உணர
முடிந்தது. சந்திராவின் செல்வக்
குழந்தையைப்பராமரிப்பதில் அவள்
எடுத்துக்கொண்டிருந்த அக்க
றையை அவர் ஆச்சரியத்தோடு
கவனித்துவந்தார். அத்தோடு வீட்
டின் சகல வேலைப்பாடுகளும்
அவள் தலைமேற் சுமத்தப்பட்டிருப்
பதையும் உணர்ந்தார்.

அதிகாலையோடு எழுந்து பாட
சாலைக்கு வேண்டிய ஆயத்தங்க
ளைச் செய்வது அவரின் தினசரிப்
பழக்கமாக இருந்ததனுல் அடுத்த
வீட்டு வேலைக்காரி மினியா அவ
ளுக்கு முன்னதாகவே எழுந்திருந்து
யந்திரம் போலச் செய்யும் ஒவ்
வொரு வேலையையும் அவரால்
காணமுடிந்தது.

காலை எட்டுமணியானதும் அம்
மாள் சந்திராவும், கணவனும்
காரில் ஏறிக்கொண்டு போய்விடு
வார்கள். வீட்டில் சமையல்காரன்
என்று ஒருவன் இருந்தாலும், மினி
யாவே குழந்தையைப் பார்ப்பதி
லிருந்து சமையல் வரையில் நேரா
கக் கவனித்து வருவாள். நடுப்
பகல் அம்மாவும் கணவனும் மறு
படியும் வருவார்கள், வயிறு புடை
க்க உண்பார்கள். இரண்டு நிமிஷ
நேரம் அம்மாள் குழந்தையுடன்
இருப்பாள்; அப்புறம் போய்விடு
வாள். மறுபடியும் மாலை ஐந்து
மணிக்கு இருவரும் வருவார்கள்.
மறுபடியும் இரண்டு நிமிடவேளை
அம்மாள் குழந்தையுடன் காணப்
படுவாள். மாலைத் தேநீர் அருந்தி
யானதும், மறுபடியும் அம்மாளும்
ஐயாவும் உலாவப் போய்விடு
வார்கள்.

இராக் காலமானதும் சிறிது
வேளை குழந்தை குமைந்துகுமைந்து
அழும். அப்போதெல்லாம் குழந்தை
அம்மாளின் கையில் இருக்கிறது
என்பதுதான் குறிப்பாகும். அத
ற்குமேல் அம்மாளும் ஐயாவும்
'அனந்த' சயனத்திற்குப் போய்விடு
வார்கள். மேல்மாடியின் மூலை
யோடு வேலைக்காரிக்கென ஒதுக்
கப்பட்டிருக்கும் அறையிலே வேலைக்
காரி மினியா இரவிரவாக அந்தக்
குழந்தையோடு மல்லடிப்பதை சுந்
தரம்பிள்ளையின் அறையில் இருந்
தால் தெளிவாகக் காணமுடியும்.

அந்த வேலைக்காரியின் வாழ்வை அப்படியே கண்டுவந்த சுந்தரம்பிள்ளையின் இதயம் கசிந்துருகிக் கொண்டு வந்தது.

இரண்டு வாரத்துக்குப் பின் ஒருநாள் குழந்தைக்கு வலிப்பு வந்து செத்துப்போய் விட்டது. சற்று வேளை சந்திராவின் விம்மல் பொருமலைக் கேட்க முடிந்தது. அதற்குப் பின் … … …

சின்னஞ்சிறிசு — நான்குமாதக் குழந்தை. இதற்காக நீண்ட துக்கத்தை அநுட்டிக்க யாருக்கு முடியும்? ஒருமணி வேளைக்குள் விம்மலும், ஒருநாள் முடிவதற்குள் சோகமும் சந்திராவை விட்டு ஒழிந்து போய்விட்டன. ஆனால் சுந்தரம்பிள்ளை கண்டு வந்தது … … …

வேலைக்காரி மினியாவின் அறைக்கும், சுந்தரம்பிள்ளையின் அறைக்கும் வெகுதூரம் இல்லை. சுமார் பத்துயார் தூரந்தான் இடைவெளி இருந்தது. இரவு வெகுநேரம் வரை மினியா விழிப்பாயிருப்பாள்; விம்முவாள்; பொருமிப் புடைப்பாள். குழந்தையின் பாசஉணர்வு அவள் இதயத்தைப் பிழிந்தெடுப்பதைச் சுந்தரம்பிள்ளை ஆயிரந் தடவை கண்டார். அவர் மனசும் நெகிழ்ந்து நெகிழ்ந்து உருகிறது. மினியா படுக்கையில் புரண்டு விம்மும் ஓசை அவர் நெஞ்சுவரையில் கேட்டதுண்டு.

குழந்தை இறந்துபோய் பத்து நாட்கள்கூட ஆகவில்லை. அம்மாள் ஐயாவுடன் கைகோர்த்துக் கொண்டு வெளியே கிளம்பி விட்டாள். ஆனால் மினியாமட்டும் ……

சுந்தரம்பிள்ளையின் கண்கள் கலங்கிப்போய்விடும். அவர் நெஞ்சு விம்மும். "உண்மைக்கும் பிரமைக்குமிடையே … … …" என்று அந்தராத்மா கூறும்.

* * *

இன்று நடுப்பகல் மினியாவின் அறைக்குள் ஏதோ முனகல் கேட்பதுபோல் இருந்தது. உடல் நலமில்லாததால் வீட்டோடு இருந்து ஓய்வெடுத்த சுந்தரம்பிள்ளை மினியாவின் அறையை நோக்கிக் கண்களை வீசினார். அங்கே அவர் கண்டது … … … ?

அறையின் ஜன்னல்கதவில் ஒன்று திறந்து கிடந்தது. மினியா அறையின் உட்சுவரோடு செத்துப்போன குழந்தையின் பால் போச்சியைக் கையில் வைத்தபடி விம்மிக் கொண்டிருந்தாள். அப்போது "மினியா" என்று அழைத்துக் கொண்டே எஜமான் தேசப்பிரியா உள்ளே வந்தான். வந்தவன் மெதுவாக எதையோ பேசிக் கொண்டு மினியாவை அணுகி, அவள் கரங்கள் இரண்டையும் தனது ஒரு கரத்துள் அடக்கி, மறு கரத்தால் அவள் கண்ணீரைத் துடைக்கவும் … … உதறித் தள்ளி விட்டு மினியா துடித்து நெளியவும் … … அவள் கையில் இருந்த பால்போச்சி கீழேவிழுந்து படீரென உடையவும் … … … மருட்சியோடு சுற்று முற்றும் பார்த்து விட்டு அந்த மனிதன் வெளியே போகவும் அதிகநேரம்எடுக்கவில்லை.

இக்காட்சியைக் காணும்போது சுந்தரம் பிள்ளையின் உடல் பட



படத்தது. மேல்மாடியில் தாவி, அந்த அயோக்கியனுக்கு இரண்டு உதை கொடுக்க வேண்டும்போல அவர் கால்கள் துடித்தன. ஆனாலும் அவரால் நின்ற இடத்தை விட்டு நகர முடியவில்லை.

கரங்களுக்குள் முகத்தைப் புதைத்துக்கொண்டு மினியா விம்மி அழும் ஓசை அவருக்குத் தெளிவாகக் கேட்டது.

"உண்மைக்கும் பிரமைக்குமிடையே நடக்கும் போராட்டமே இலக்கியம்" இந்தச் சொல்தொடர் அவர் மார்புக்கு நேரே ஈட்டிபோல ஊடுருவிப் பாய்வது போல் இருந்தது.

உலகம் சரிந்து கொண்டு வருவது போலவும், அதிலே உலகத்துப் பிரமை எல்லாம் தீப்பற்றி எரிந்து உதிர்ந்து விழுவது போலவும் ஓராயிரம் வெளித் தோற்றங்களுக்கு நடுவே சுந்தரம்பிள்ளை மூழ்கித் திணறிக் கொண்டிருந்தார். அடுத்தவீட்டிலே 'மினியா!' என்று எழுந்த சந்திராவின் அதிகாரக் குரல்தான் மணி ஐந்தாகி விட்டது என்பதை ஞாபக மூட்டியது.

கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டே சுந்தரம்பிள்ளை மினியாவின் அறையை நோக்கினார்.

"என்னடி சும்மா அழுது கொண்டு கிடக்கிறாய்?" என்று கேட்டுக்கொண்டே அம்மாள் உள்ளே வந்தாள்.

"ஒன்றுமில்லை அம்மா, என்னை … … … என் அண்ணாவீட்டிலே விட்டுவிடுங்க … … …"

"உனக்கு உன் அண்ணன் எங்கே இருக்கிறானென்றாவது தெரியுமாடி தெரிந்தால் சொல்லடி!"

"… … … … …"

"மினியா, என்னடி பேசாமல் இருக்கிறாய், இப்ப என்னடி உனக்கு அண்ணாவின் நினைப்பு வந்தது?"

"அம்மா, அவரு ஐயா, மத்தியானம் … … … … என் கையைப் பிடித்து இழுத்து … … …"

"வேலைக்கார நாய்க்கு என்னடி வாய் … … பொத்தடி வாயை … … அவரைப் பற்றிப்பேச உனக்கு என்னடி துணிவு!" இந்த வார்த்தையோடு சேர்ந்துகொண்டு சந்திராவின் செவ்விய கரங்கள் மினியாவின் கன்னத்திலே ஓய்வுகண்டன.

மிகவும் மனத்தெளிவோடு சுந்தரம்பிள்ளையின் பேனா இப்போது எழுதத் தொடங்கியது.

வேலைக்காரி மினியா இப்போது அவர் மனதிலே விம்மி அழுதுகொண்டிருந்தாள்.

எத்தனையோநாள் அவள் அழுதுதீர்த்தாள். ஆனால் இன்றுதான் எழுத்தாளர் சுந்தரம்பிள்ளையின்மனதில் குந்திக்கொண்டு அழுவதற்கு அவளுக்கு உரிமை கிடைத்திருக்கிறது. தன் மனதைக்கரைத்து, அந்தப் பேனாவுக்கூடாக மசியாக வடித்து வரிவடிவமாகக் காகிதத்திலே பதிந்து கொண்டிருந்

தான்; கடைசியில் அற்புதமான முழுவடிவமாகவே அமைந்து விட்டாள்.

''யாவுங் கற்பனை'' என்று எழுதிக் கையெழுத் திட்டுவிட்டுப் பேனாவை எடுத்துக் கொண்ட சுந்தரம்பிள்ளை அவர்கள். ஓராண்டுக்கு முன் ''காதல்'' என்று எழுதிய கதையின் தலைப்பை வெட்டிவிட்டு அந்த இடத்திற்குமேல் ''தெளிவு'' என்று எழுதிவிட்டு நீண்டதொரு பெருமூச்சு விட்டார்.

''உண்மைக்கும் பிரமைக்குமிடையே நடக்கும் போராட்டமே இலக்கியம்'' என்ற வார்த்தைத் தொடர் மனத்தைவிட்டு வெகு தூரம்போய் இலாவகமாக ஆடி அசைந்து காற்றிலே கரைந்து வந்து காதுகளில் கலகலப்பது போல இருந்தது அவருக்கு.



## புரவலரைத் திருத்தும் புலவர்கள்

பேகனே! உன் அரமனை சென்றேம் பரிசில்பெற. அங்கே கண்ணீர் நெஞ்சுநனைக்க ஓர் அழகுப் பெண்மணி வெளியே வந்தாள். எம்மைக் கண்டதும் கண்ணீரைத் துடைத்துத் தான் அழுதுகொண்டிருந்ததை மறைக்கப் பார்த்தாள். நீர் பேகனுக்கு இனத்தவரா என வினவினேம். ''நான்அல்ல நல்லூரில் ஒரு பரத்தை இருக்கின்றாள் அவள்தான் இப்பொழுது அவரது இனத்தவள்'' என்றாள். அரசனே எமது பசிக்காக இரக்கவரவில்லை. நீ உடனே தேரில் ஏறி அழுதுகொண்டிருக்கும் உன் அரும்பெறல் மனைவியிடம் சென்று அவள் துயர்துடைப்பாயாக. இதுவே நாம் வேண்டும் பரிசில். மயில் குளிரால் வாடப் போர்வையளித்த உன்உள்ளம் துயரால் வாடுகின்ற அந்த அன்புத் துணைவிக்கு இரங்காததேனோ. இந்தப் பரத்தையைவிட்டு உடனே உன் இல்லம் செல்.

—புறநானூற்றிலே பரணர்.





ஈழகேசரி வெள்ளிவிழா மலர்

### கதிர்காமம்

''மண்ணினிற் பளிங்கு காட்டும் மாணிக்க கங்கை தேக்கும்
நண்ணிய கரையில் நின்று நாடோறும் அருள் பெருக்கும்
புண்ணிய முருக வேளின் புதுமைகள் காணும் தூய
கண்ணினுக் கினிய காட்சிக் கதிர்காம தலமீ தாகும்.''



நித்திலமும் தென்றலும் சித்திரமும் காவியமும், கந்தமும், சாந்தும் காட்டி 'அவளை' மயக்கிவிட முடியாது! கிழக்கிலங்கையில் உதித்துள்ள இளம் பிறை 'திமிலைத்துமில'னின் கற்பனையில் அழகு சொட்டுகிறது!

# அன்புத் துளியினில்......!

திமிலைத்துமிலன்

வானத்து நித்திலம் வாரிக் கொணர்ந்தொரு
மாலை தொடுத்து வைத்தேன்—அதில்
கூனப் பிறையினைத் தென்றலில் கோத்துக்
குளுமை படைத்து வைத்தேன்—அவள்
மீனக் கருவிழி ஓடிச் சிவக்க
வெடித்துப் புகைந்து விட்டாள்—என்
மேனி துடிக்கப் பறித்துச் சிதறி
வெளியில் நடந்து விட்டாள்!

திங்களை இந்திர வில்லிற் குழைத்தொரு
சித்திரம் தீட்டி வைத்தேன்—அதில்
பொங்குமென் ஆயிரம் ஆசைக் கனவுகள்
பூத்துப் பொலிய வைத்தேன்—அவள்
எங்கிருந் தோவொரு ஏழனப் புன்னகை
என்னில் பதியவிட்டாள்—அந்தக்
கங்குலில் வந்ததைக் கையி லெடுத்ததும்
காறி உமிழ்ந்து விட்டாள்!

காற்றெடு விண்ணினைச் சாடிப் பறத்துநற்
கற்பனை கொண்டு வந்தேன்—தேன்
சாற்றெடு கன்னித் தமிழ்குழைத் தேயொரு
காவியம் செய்து வைத்தேன்—"நான்

நூற்றி லொருகவி போற்று'' மெனஇரு
மாப்பில் நினைவு கொண்டேன்—அவள்,
தூற்றி எனதுளச் சேற்றைக் கலக்கியே
தூர நடந்து விட்டாள்!

காவியச் சோலையில் பூத்த புதுமலர்க்
கந்தம் சுமந்து வந்தேன்—அதில்
தூவிய வெண்பனிச் சாந்து கலந்தவள்
தோளிற் சொரிய வந்தேன்...எனைப்
"பாவி!அடா! அங்கு நில்லெனக் கூறிப்
பழிச்சொல் மொழிந்து விட்டாள்...என்
ஆவி துடித்திட ஈரமே அற்ற
அவச்சொல் மொழிந்து விட்டாள்!

காற்றினை நூற்றுக் கடற்றிரை சேர்த்துக்
கலிங்கம் எடுத்து வந்தேன்...மழைத்
தூற்றலில் மேகத் திடைபுகுந்து மின்னற்
தோளணி பெற்று வந்தேன்—அவள்
சீற்ற மடைந்ததை வீசி முகத்திலே
சென்று மறைந்து விட்டாள்—உளம்
ஆற்ருெணுத் துன்பி லழுந்தப் பொடிப்பொடி
ஆயிர மாக்கி விட்டாள்!

கண்ணின் மணிகள் இரண்டைப் பெயர்த்தவள்
காலில் படிய வைத்தேன்—இந்த
மண்ணைக் கரைத்திடு மன்புத் துளியினில்
மாலை தொடுத்து வைத்தேன்—என்
எண்ணக் குருதி வடிய உளத்தை
எடுத்து எதிரில் வைத்தேன்—அவள்
வண்ணக் கருவிழி கண்ணநீர் பூக்க
மனதும் உருகி விட்டாள்!







* காதலா-கிரீடமா? எது வேண்டும்? அரசபோகமா-அசோக மாலாவின் நேசமா? இரண்டில் ஒன்றைத் தெரிவுசெய்து கொள்!—2000 ஆண்டுகளுக்கு முன்பு இநத நாட்டு அரசுக் கட்டிலுக்கு உரியவனு யிருநத இளவரசன் சாலியைநோக்கி அடுக்கப்பட்ட கேள்விப் பாணங்கள்தான் இவை. அவன் தன் மலர்விழிக்காக மணிமுடியைத துறந்துவிட்டான்!

சிறுகதைத் துறையில் தனக்கென ஒரு தனிஇடததை ஏற்படுத்திக் கொண்டுள்ள திரு எஸ். பொன்னுத்துரை, வரலாற்று நாடகங்கள் எழுதுவதிலும் வல்லவராக விளங்குகிருர்.

# முள்ளோ? மலரோ?

எஸ். பொன்னுத்துரை

இடம்: சிங்களத்தின் தலைநகர் அநுராதபுரம்.
காலம்: கி. மு. 77.

**பாத்திரங்கள்:**

**கைமுனு:** சிங்களத்தை ஒரு குடையின்கீழ் ஆளும் கிழவேந்தன்.

**நந்திமித்தன்:** சேனுதிபதி.
**ராணி:** கைமுனுவின் இளம் மனைவி.
**சதாதீஸன்:** அவனுடைய தம்பி.
**சாலிராஜகுமாரன்:** அவனுடைய மகன்.
**அசோகமாலா:** சாலியின் காதலி.
**மொகலிபுத்ததேரர்:** விகாரநாயக்கர்.

## காட்சி 1

[அநுராதபுரியின் அரண்மனையின் ஆலோசனை மண்டபம். மேடையில் இருள். ஆசனத்தில் அமர்ந்து துயில்கொள்ளும் நிலையில் கைமுனு. பின்பக்கத்திலே, அசோகமாலா நடனமாடுவதாகவும், அவளைச் சாலிராசகுமாரன் அணைத்துக்கொள்வதாகவும் நிழல் உருவங்கள் திரையில் தெரிகின்றன. அதே சமயம், பின்னணிப் பாடலாக,

**அன்பான மாரனே ஆண்மையின் வீரனே**
**சண்பக வனமதில் சாம்புதேஉன் காதலே**
**இன்பத்தின் வானமே இதயத்தின் கானமே**

என்னும் கீதம் ஒலிக்கின்றது.

நிழல் உருவங்கள் மறைய, மேடையில் ஒளி படருகின்றது.]

**கைமுனு:**- கனவா? நினைவா?......நினைவின் நிழலாட்டம்; மனக்குகை ஓவியங்கள். வான் பொழிந்து, தேன் பாய்ந்து, நிலமெல்லாம் வளமாக, மனையெல்லாம் பொன்னுகச் செல்வத்தின் திருவிடமாக விளங்கும் இத்திருநாட்டின் சிம்மாசனத்தைச் சூழ்ந்துவரும் இருள். அந்நியரை இங்கிருந்து விரட்டினேன் நான்; ஆரிய குலத்தின் பெருமையை நிலைநாட்டினேன். சாலி நமது சுதந்திரக் கொடியை அந்நிய நாடுகளில் ஆதிக்கக்கொடியாக நாட்டுவான் என்ற, என் இனிய கனவுகள் காலைப் பனியென மறைகின்றனவே. இளவரசன்-ஆரியன்-க்ஷத்திரியன், - கேவலம் ஒரு சண்டாளப் பெண்ணிடமா மனதை அளிப்பது? மதியை இழப்பது? மாலாவாம்-அசோக மாலாவாம்! சண்டாளச் சிறுக்கி - தரம் கெட்ட குலத்தவள். ஆரிய இனத்தின் அரியாசனத்தில் அமர்ந்து விடலாமென்ற மனப்பாலா? பார்த்து விடுகிறேன்... நந்திமித்தா! நந்திமித்தா!

(சேனுதிபதி நந்திமித்தன் வந்து வணங்கல்.)

**கைமுனு**:-நந்திமித்தா! என் நம்பிக்கைக்குப் பாத்திரமான வீரனே! சண்பகவனத்திற்குச் சென்று இளவரசனை அழைத்து வா. நான் அவனை உடனடியாகப் பார்க்க வேண்டும்.

**நந்தி**: உத்தரவு வேந்தே.
(நந்திமித்தா போகப் புறப்படுதல்)

**கை**: எள்ளென்றதும் எண்ணெயாக நிற்கிறாய். உன் ராஜபக்தியை நான் அறிவேன். இதையும் கேட்டுச் செல். நீ அழைத்தால், அந்த மானங்கெட்ட சண்டாளியின் மடியில் புரளும் சரஸ நிலையில் அவன் ஒருக்கால் வர மறுப்பினும் மறுக்கலாம்.

**நந்**: அப்படியாயின்?

**கை**: நயத்திற்குப் பயக்காவிட்டால் பயத்திற்கு நயக்கச்செய். அடங்கா வெறி கொண்டு அலைபவனைச் சங்கிலியால் பிணைத்து வா.

**நந்**: நாளைக்கு முடிக்குரிய இளவரசரையா?

**கை**: தயங்கவேண்டாம். நான் அவன் தந்தை.
(ராணி உள்ளே வரல்.)

**ராணி**: யார் மறுத்தது? வேந்தர் வேங்கையாகக் கூறுகிறார். கிழம் என்றாலும் சிங்கம் சிங்கந்தானே? ஆனால் உங்கள் வீரத்தைக்காட்ட உங்கள் மகன்தானா எதிரியாகக் கிடைக்க வேண்டும்? தன் வீரத்தைத் தன் குட்டியின்மீது பிரயோகிக்கும் சிங்கத்தைப்பற்றி நான் கேள்விப்பட்டதே யில்லை.

**கை**: நந்திமித்தா, கட்டளையைக் கடிதில் நிறைவேற்று.

**நந்தி**; ஆக்ஞை.
(நந்திமித்தன் செல்லல்.)

**ராணி**: ஏனிந்தப் பதட்டம்?

**கை**: தேவி! நீ அறியாததா? அன்னை விகாரமாவின் வயிற்றில் அவதரித்த அவதார புருஷனென்று நான் கொண்டாடப்படுகிறேன்: இந்த அவதார புருஷனின் மங்காப் புகழை ஊறு செய்து மாசுபடுத்தவென்றே மகன் பிறந்திருக்கிறான். அவனை......அந்த அசிங்கமாலாவை, அறவே மறந்துவிடு என்கிறேன் நான்; அவன் மறுக்கிறான் என்பேச்சைக் கேட்க.

**ராணி**: இந்த அற்பத்திற்கா இவ்வளவு ஆவேசம்? வாலிபப் பருவத்தின் எழுச்சிகள். சாலிக்கு மணப் பெண்ணாகப் பாண்டிநாட்டு இளவரசி தன் பரிவாரங்களுடன் மாதோட்டக் கரைக்கு வந்திருப்பதாகச் சொன்னீர்களே! காளைப் பருவத்து இளைஞனின் வாலைக்குமரி நாட்டம். அவ்வளவுதான். பாண்டிநாட்டு இளவரசி என்ற தளையில் பூட்டிவிட்டால் தானாகப் பொறுப்புணர்ச்சி பெற்றுவிடுவான்.

**கை**: நீயும் உன் வளர்ப்பும்! தான்தோன்றிக் குணம். இவன் அசோகமாலாவுடன் நடத்தும் காதல் லீலைகளை அறிந்ததுமே பாண்டிநாட்டு இளவரசி தன் பரிவாரங்களுடன் ஊருக்குத் திரும்பிவிட்டாள்... என் அன்னை தன் முலையிலே எனக்குப் பாலூட்டிய பொழுது, அதனுடன் சேர்த்தே வீரத்தையும் ஊட்டினாள். நீ உன் மகனைக் காதல் பைத்தியமாக்கி வைத்திருக்கின்றாய். பெண் பித்துக் கொண்டலையும் பேயன்.

**ராணி**: ஆண்வர்க்கம் எப்பொழுதும் இப்படித்தான். பிள்ளையின் தவறைத் தாயின் தலையில் சுமத்தி விடுவார்கள். ஆனால் தந்தை எவ்வழியோ மைந்தனும் அவ்வழி என்பதுதான் உண்மை. நீங்கள் மட்டும் அந்தக் காலத்தில்......உங்கள் தேகத்தில் வாலிப நரம்புகள் விம்மிப் புடைத்திருந்த காலத்தில் ... மாற்றான் ஒருவனின் மனைவிமீது மாளாத காதல்



கொண்டு அலையவில்லையா? அவளை அடையாதுபோனால் தலையை மழித்து, காவி புனைந்து, துறவறம் நாடப்போவதாகப் பிதற்றித் திரியவில்லையா? அப்புறம்...என் ஊழ்; நான் வந்தேன்.

**கை**: காமுகனின் செயலை நியாயபூர்வமானதென நிலைநாட்டும் குதர்க்கவாதங்கள்.

**ராணி**: ஒரு கன்னியைத் தன் மனப்பூர்வமாகச் சாலி விரும்புவது காமமென்றால், மாற்றானின் மனையாள்மீது கொள்ளும் தகாத இச்சைக்கு—புலால்வேட்கைக்கு என்னவென்று பெயர்?

**கை**: பெண்களின் குணம் அறிந்தும், அவர்களுக்கு ஆண்டவன் நாக்கையும் படைத்திருக்கிறானே! சீறும் சர்ப்பத்திலும், கொட்டும் தேளிலும்பார்க்க வஞ்சியரின் நாக்கிலே விடம் மிஞ்சிக் கிடக்கின்றது. ஆண் எதிர்பாராத சமையங்களில் அது கொட்டிவிடுகிறது. நானோ கிழவன். அமைதியைநாடும் முதுபருவம். ஆனால் சதா நச்சரித்துத் துன்புறுத்தும் இளமனைவி—என் சொற்கேளாத் தறுதலைப் பிள்ளை. அமைதியை எங்கேதேடுவேன்?

**சதாதீஸன்**: அண்ணா! (உள்ளே வரல்) அண்ணா!

**ராணி**: இதோ, அமைதி வருகின்றது.

**கை**: வா, தீஸா, வா, உன்னைத்தான் இப்பொழுது நினைத்துக்கொண்டிருந்தேன். ஆயுசு நூறு.

**சதா**: அண்ணா, பாண்டியநாட்டு இளவரசி அடிபட்ட வேங்கையைப் போன்று, தான் மானபங்கப் படுத்தப்பட்டதாகக் கறுவிக் கொண்டு போயிருக்கிறாள். (சற்று யோசித்து) மகாவிஹாரத்தின் மகாதேரர் சொல்வதிலிருந்து சாலியின் எதிர்காலம் பயங்கரமாகத்தான் இருக்கின்றது.

**ராணி**: சித்தப்பனுக்கு இளவரசன்மீது புதிதாகப் பரிவும் பாசமும் பிறந்திருக்கிறது. மாட்டின் சாவுகண்டு பிணம் தின்னும் காகம் கண்ணீர் விட்டதாம். தந்தைக்கும் தனயனுக்குமுள்ள உறவை முறித்தவன் நீ. கோள்சுமந்து கேடு விளைவித்தாய். மகாதேரரும் உன் கைப் பாவை. அசோகமாலா எப்படிச் சண்பகத் தோட்டத்திற்குத் தருவிக்கப் பட்டாள் என்பது—அவளை மகாதேரர் அழைத்து ஒரு சண்பகமலரைக் கொடுத்தார் என்பது—அந்த மலருக்கு வசியக் கலவை தடவப்பட்டிருந்தது என்பது—இந்தக் காதல் நாடகத்தின் பின்னணி முழுவதும் உனக்குத் தெரியும். நீயே இதன் இயக்குநரும்கூட. இப்பொழுது தலையில் வெண்ணெயை வைத்துக் கொக்கைப் பிடிக்க வேண்டுமென்று கதை அளக்கின்றாய்.

**சதா**: அண்ணி! வீண்பழி. இதை என்னால் தாங்கமுடியாது அண்ணி, தாங்கமுடியாது.

**கை**: அவன் என் தம்பி. என்னை இமை போலக் காக்கும் தன்னலமற்ற நம்பி. அழுக்குப் பேச்சுகள் வேண்டாம்.

**ராணி**: ஹூம்! கொற்றவன் குற்றமற்ற தம்பியின் குணத்திற்கு நற்சாட்சிப் பத்திரம் வழங்குகின்றார். அன்று நீங்கள், அந்நியர்களை இந்நாட்டைவிட்டு விரட்ட வேண்டுமென்ற சுதந்திரவேட்கையுடன் காட்டில் வாழ, தந்தையின் மரணத்தைக் கூட அறிவியாது, நாட்டையும், கந்துளா யானையையும் அபகரித்த இத் தம்பி தங்கத் தந்தியல்லவா? தீகவாபிப் பிக்குகளின் மஞ்சள் அங்கி மறைவில் நின்று, 'அண்ணனின் இரத்தத்தைக் குடிப்பேன்' என்று வஞ்சினம் கூறி, யானை ஏறி, எட்டி ஏந்தியதல்லவா சகோதரபாசத்தின் இலக்கணம்.

**கை**: கடந்த காலம் என்ற சவக்கிடங்கைக் கிளறுகிறாய்.

**ராணி:** இன்றுமட்டும் உங்கள் தம்பி ஸ்புடம் போட்ட பொன்னென்ற நினைப்பா? தனக்கும் தன் வழித்தோன்றல்களுக்கும் தான் சிங்களத்து அரியணை கிடைக்க வேண்டுமென்பதற்காக, 'அண்ணனுக்குப் பின்னர் தம்பிதான் முடிக்குரியவன்' என்ற சட்டப்பிரச்னையைப் பிரதானிகள் மத்தியில் கிளப்பிவரும் ராஜபக்தியை என்னவென்பது?

**தீஸ:** அண்ணி, சொல்லென்ற வேல் கொண்டு என் மனதைப் பிளக்க வேண்டாம்.

**ராணி:** உள்ளதைச் சொன்னால் உடம்பு எரிகிறதா? என் பெற்ற வயிற்றிலிருந்து கிளம்பும் தீ ஜுவாலை உங்களுக்குத் தெரியாது. தீகவாபித்தேரர், மகா விஹாரத்தின் மகாதேரராக நியமிக்கப்பட்டது ஏன்? அவருடன் இவர் நடத்தும் அந்தரங்கக் கூட்டங்களென்ன? சண்டாளப் பெண் ஏன் விஹாரத் தோட்டத்தில் மலர்பறிக்க அனுமதிக்கப்பட்டாள்? சாலியின் சந்திப்பும் காதலும் அங்குதானே ஆரம்பமாயிற்று?

**கை:** தேவி!

**ராணி:** வேந்தே, பட்சபாதமற்ற நிலையில் சம்பவங்களைக் கோவைப் படுத்திப் பாருங்கள். நீங்கள் மகாவீரர். ஆனால் வீரம் இருக்கும் அளவிற்கு விவேகமும் இருக்கத்தான் வேண்டு மென்பதல்ல. பூக்களின் மெல்லிதழ்களில் மறைந்து வாழும் பூநாகங்களைப்போல பகைவர்கள் சூழ்ந்திருக்கிறார்கள் என்பதை அறியத் தவறுகின்றீர்கள்.

**கை:** போதும் தேவி, போதும். நீ உறுகுணைப் பைங்கிளியாக இருந்தாலல்லவா நாட்டின்வழக்கமும் சம்பிரதாயமும் தெரியும்? பெற்ற பாசத்தால் அரச நீதியைக் கருச்சிதைக்காதே. அண்ணனுக்கும் தம்பிக்குமிடையில் குரோத வேலியை வளர்க்காதே. என் இலட்சியக் கனவுகளை நிறைவேற்றுபவன் என் தம்பி. உறுவான்வெலசேயா இன்னும் கட்டி முடிக்கப்படவில்லை. கொத்தர்களும், சிற்பிகளும் வந்துவிட்டார்கள். இரவு பகலாகக் கண்விழித்து வேலைகளைக் கவனிக்கிறான் என் தம்பி. ஆனால் தனயனோ தாஸியின் சேலையைப் பிடித்துக் கொஞ்சிக் குலவுகிறான்.

**ராணி:** உங்கள் தம்பியின் ஆலயத் திருப்பணி நெறி, புத்தபகவானின் பக்தியால் எழுந்ததல்ல. பலம் திரட்டும் முயற்சி. ஆலயப்பணியில் சிரத்தை காட்டினால் பிக்குகள் சகலரையும் தன் கைக்குள் போட்டுக்கொள்ளலாம்; வாரிசுப் போட்டியில் சங்கம் தனக்குச் சார்புள்ளதாக இயங்கும் என்ற குள்ளநரித் தந்திரம்; எத்தனின் ஏமாற்று; சாணக்கியச் சூழ்ச்சி.

**சதா:** அண்ணா, தங்கள் இல்வாழ்க்கையில் சூறாவளி எழும்ப நான் காரணகர்த்தனாக இருக்கமாட்டேன். அண்ணிக்கு நான் இங்கிருப்பது விருப்பமில்லை யென்றால், நான் இப்பொழுதே என் அரசாங்க உத்தியோகங்களை உதறித் தள்ளிவிட்டு உறுகுணைக்கே சென்றுவிடுகின்றேன். இந்தப் பட்டம்—பதவி அந்தஸ்திற்கு நான் யாசிக்கவுமில்லை...நீங்கள் செத்த கருப்பையிலே நானும் வாழ்ந்தேன் என்பதற்காக நான் உதவியாக இங்கே இருந்தால்...பிடியுங்கள் வாளை.

**கை:** தம்பி! நீயுமா என்னைச் சோதிக்கிறாய்! நான் உன்மீது வைத்துள்ள பவுத்திரமான பாசத்தை அறியாது பிதற்றுகிறாயே? உன் கண்களில் தூசு விழுந்தால் என் கண்களில் நீர் மல்குமே!... தேவி, உன் கால்களைப் பிடித்துக் கேட்கிறேன் —கெஞ்சுகிறேன். ஆலோசனை மண்டபத்து அலுவல்களை உன் தலையில் போட்டுக்கொள்ளாமல், நீ அந்தப்புரத்திற்குச் செல். எனக்கு நிம்மதி தேவை. காலனின் திருவுருவாய் என் கண்முன் நிற்காதே.



**ரா:** காலன் நானா அல்லது உங்கள் ஆசைத் தம்பியா என்பதை வெகுவிரைவில் அறியத்தான் போகின்றீர்கள்! பாதுகை அற்ற கால்களுடன் நெருஞ்சிக் காவில் நடக்க வேண்டாமென்று சொல்லுகிறேன். 'இல்லை', நான் நடக்கத்தான் போகிறேன்' என்று முரட்டுப் பிடிவாதம் பிடிக்கின்றீர்கள். எனக்கென்ன? உங்கள் தம்பி உங்களுடைய காதைக் கடித்து ஏதாவது குசுகுசுத்துக்கொண்டே இருப்பார். நீங்களும் ரஸித்துக்கொண்டே இருங்கள். நான் வருகிறேன்.

(இராணி வெளியே செல்லல்.)

**கை:** தம்பி சதா! பார்த்தாயா உன் அண்ணனின் நிலைமையை? செருக்களத்திலே ஒப்பாரும் மிக்காருமில்லாத வீரன். ஆனால் வீட்டில் ஒரு பெண்ணின் காலில் தலை தாழ்த்தும் நிலை. பருவம் தவறி இளம் பெண்ணில் இச்சைகொள்ளும் எவனும்—அவன் வீராதி வீரனாக இருப்பினும்—பெண்ணின் சேலைக்குள் தஞ்சம். கேவலம் வருந்தி என்ன செய்வது?...அது கிடக்க, உறுவான்வெலிசேயா...

**சதா:** மிக விரைவில் பூர்த்தியாகிவிடும். இரவு பகலாக வேலைசெய்கிறார்கள்... இருப்பினும்...உங்களுக்குத் தெரியாததா? சாலியின் தகாத காதலினால் தேரர்களும் வேலையாட்களும் உற்சாக மிழந்திருக்கிறார்கள். எங்கே சண்டாளப் பெண் மன்னனால் தங்கள்மீது ராணியாகத் திணிக்கப்படுவாளோ என்று திகைக்கின்றார்கள்... நாடி ஓட்டத்தைப் பிடித்துப் பார்த்தேன். அப்படி நடக்கும் பட்சத்தில் பொதுமக்கள் எழுச்சிகொண்டு கிளர்ந்தெழுந்து புரட்சிக்குத் தயாராகி விடுவார்கள். அதேசமயம், சோழர்கள் இன்னும் எல்லாளனின் பரணத்தை மறந்துவிடவில்லை. தமிழர்கள் தயாளகுணமுள்ளவர்களாயினும் வஞ்சகம் தீர்த்துக் கொள்வதில் குஞ்சரக்குணம் உள்ளவர்கள். சமையம் பார்த்திருக்கிறார்கள்...பாண்டியர் பகையும் விலைக்கு வாங்கிய வினையாகிவிட்டது. இந்நிலையில்...?

**கை:** தெரியும். எல்லாமே புரிகிறது நான் ஒரு நடைப்பிணம். பயங்கர நினைவுகள் என் குரல்வளையைத் திருகுகின்றன. சாலியை அழைததுவர நந்திமித்தாவை அனுப்பி யிருக்கிறேன்; வந்துவிடுவான்! 'முடியா அல்லது பெண்ணா'—இதுதான் கேள்வி. இன்றுடன் விவகாரத்தை முடித்துவிடுகிறேன்.

**சதா:** சாலிராஜகுமாரன் உலகனுபவமில்லாச் சிறுவன். நயமாகச் சொல்லுங்கள். ஆரிய ரத்தமோடும் சீரிய சிங்களக்குடியின் கீர்த்திக்கு ஊறுசெய்யவந்த அந்தச் சிற்றறிவு படைத்த சண்டாளச் சிறுக்கியை மறந்துவிடும்படி. சாலிராஜகுமாரனே மன்னனாக வேண்டும். அதற்கு உரிமை உள்ளவர்கள் இல்லை என்பதல்ல ... தகுதியானவர்கள் இருக்கிறார்களா?

**கை:** ஏனில்லை! இருக்கிறார்கள். நான் அழுங்குப் பிடியன். உனக்குத் தெரியுந்தானே? (நந்திமித்தா உள்ளேவந்து வணங்கி)

**நந்:** இளவரசர் வந்திருக்கிறார் வேந்தே!

**சாலி:** நந்திமித்தா! கட்டியம் கூறுகிறாயா? அந்த உரிமையை நான் இழந்துவிட்டேன்.

**கை:** இல்லை; இன்னும் இழக்கவில்லை. நிதானமான முடிவுக்கு வந்தால் என்றுமே இழக்க மாட்டாய். உனக்கும், உன் உதிரத்தின் அறுவடைகளுக்கும் இந்நாடு உரித்தாகும்.

**சாலி:** அதற்காக?

**சதா:** நீ அசோகமாலாவை மறந்துவிடு. அத்தகைய பெயருடைய ஒருத்தி வாழ்ந்தாள் என்ற நினைவையே மனதிலிருந்து அகற்றிவிடு

**சாலி:** எவ்வளவு சுலபமாக 'மறந்துவிடு' என்று சொல்லுகிறீர்கள். நாக்கு! அது எலும்பில்லாத தசைத் துணுக்கு. என்னை நம்பி எனக்காகவே உயிர்வாழும் பேதை. அவளை நட்டாற்றில் விடுவதா?

**கை:** நட்டாற்றில் தள்ளிவிடும்படி யாரும் சொல்லவில்லையே! அவளுடைய வாழ்விற்கு வேண்டிய பொன்னும் பொருளும் மான்யம் வழங்குகிறேன். அவளுடைய இனத்தில், தகுந்த மணவாளன் ஒருவனை மணமுடித்து வைக்கிறேன். சதாகாலமும் அவள் சுகத்திலும் செல்வத்திலும் வாழ்வாள்.

**சாலி:** கலியாணமென்பது மாட்டிற்கு ஜதை சேர்க்கும் பணி என்ற நினைப்பா? என இதயம் கவர்ந்த இனியவளைப் பறி கொடுத்து, நான் வாழ்நாள் பூராகவும் நடைப்பிணமாக வாழவேண்டுமா?

**கை:** அப்படி நான் சொல்லவில்லை. அசோகமாலா மட்டுந்தான் கன்னியா...அழகியா? உன் போகசுகத்திற்கு ஆயிரம் ஆரியகுல அழகிகளை உன் அந்தப்புரத்தில் நிரப்பி வைக்கிறேன்.

**நங்:** ஆம், இளவரசே! விருந்திலேதான் சுவை இருக்கிறது.

**சதா:** ஒரு பெண்ணிற்காகவா? அழகாம் அழகு! இன்று மலர்ந்து நாளை வாடி வதங்கிவிடக்கூடிய மலர்களைப் போன்றது பெண்களின் அழகு. வண்டுகள் புதுப் புதுப் பூக்களை நாடி நறுந்தேன் சேர்ப்பது போல, அரசர்கள் நவநவ அழகிகளுடன் கலவி இன்பம் பெறுவதை நம் நாட்டுச் சம்பிரதாயம் அனுமதிக்கின்றது.

**சாலி:** மனம் கவர்ந்த மங்கை நல்லாள் ஒருத்தியைக் கரம்பற்றி வாழ்வதுதான் நெறி. ஒரு ஆணும் ஒரு பெண்ணும் என்ற தனி வட்டத்தில் வாழ்வதுதான் காதல். மன்னன் அந்தப்புரத்தில்தானே ஒரு விபசாரவிடுதியின் தலைவனாக இருந்துகொண்டு, நாட்டில் கற்பு நெறியை நிலைநாட்ட முனைவது விந்தையானது அரசே?

**கை:** மிகப் படித்த மேதையைப் போன்று— எல்லாமே அனுபவித்துச் சுகித்தவனைப் போன்று—காதலின் இலக்கணம் கூறுகிறான், நேற்றுப் பிறந்தவன் — கற்றுக்குட்டி! காதல் மனிதனைக் கோழையாக்கின்றது. அவன உள்ளத்தில் அடிமைத்தனத்தைப் புகுத்துகின்றது. வீரத்தைச் சோரம் போக்குகின்றது. இளம் உள்ளங்களில் திடீரெனத் தோன்றும் கோணல்மாணல் நினைவுகளின் அறுவடைதான் காதல். அது மனிதப் பலவீனங்களில் தலையாயது. புருஷ இலட்சணம் வீரம். காதல் வசப்பட்ட காளை எவனும் கன்னியின் கடைக்கண் வீச்சிலே கருத்தை இழந்திருப்பதினால் வாள்வீச்சினை மறந்து விடுகிறான்.

**சாலி:** வாழ்வுதேடி உறவுநாடும் பண்புசால் உள்ளங்களின் அன்புசேர் எழுச்சியே காதல். அன்பும்-அருளும், பண்பும்-பாசமும், நெறியும்-நட்பும, தியாகமும்-தெய்வீக எழுச்சியும், இனிதாக ஒன்றுகலக்கும் இனிய கானம்தான் காதல். ஓடும் நதியிலும், பாடும் குயிலினிடத்திலும், நாரதன் வீணையிலும் எழுப்பமுடியாத இன்னிசை அது. காதல் கவிதையின் தாய்; கருணையின் தந்தை; பகவானின் மறுஉருவம், மனித உள்ளத்தில் மண்டிக் கிடக்கும் அழுக்குகளைப் புடம்போட்டெடுக்கும் தீ, பரம்பரை பரம்பரையாக மானுஷீகம் வாடி வதங்கி மடிந்துவிடாது நீர்ப்பாச்சும் முகில்.

**கை:** போதும். கேட்கக் காது குடைகிறது. மனம் கூசுகின்றது. காதலாம் - கருணையாம்! வார்த்தைகளை வைத்துச் சொற்சிலம்பம் ஆடுகிறான். முதுநரை விழுந்த நரைதிரைக் கிழம் நான் சொல்லுகிறேன். காதல் என்பது காளைப்பருவத்துப் புலால் வேட்கை. வாலிப முறுக்கேறிய உடம்பில் மிகுதியாகச் சுரந்திருக்கும் வீரியத்தை விரயமாக்கும் வலியுணர்ச்சி. தன்னையும் சுயத்தையும் இழக்கச் செய்யும் பைத்தியகாரத்தனம். அழகற்றதையும் அழகுள்ளதாகக் காட்டும் கண்கோளாறுதான் காதல். சண்பகமலர் மட்டுந்தானா மணம் வீசுகின்றது? மல்லிகை இல்லை? முல்லை இல்லை? ஆயிரமாயிரம்ஜாதி மலர்களில்லை. வீதியோரத்தில் வெதும்பி அழுகிய கனியொன்றை நீ எடுத்து வைத்துக்கொண்டு, அறுசுவை விருந்தை அருந்த மறுக்கும் உன் பைத்தியகாரத்தனத்தைப் பார்த்துச் சிங்களத்தில் சிரியாதோர் கிடையாதே...



**சதா:** அரசபோகம் சாலி, அரசபோகம். ஒவ்வொரு ஆணும் யாரோ ஒருத்தியுடன் — ஊனைச் சதையுடன் கூடிக் குலவித்தான் வாழ்கின்றான். ஆனால் அரசபோகமோ ஆயிரம் ஆயிரத்தில் ஒருவனுக்குத்தான் கிடைக்கிறது. ஒரு சண்டாளப் பெண்ணின் அழுக்குப் படிந்த கரங்களைப் பற்றுவதற்காக, செம்பொற் செங்கோலைப் பற்றும் அரசபதவியை உதறித் தள்ளாதே!

**நங்:** வேண்டும் பொழுதெல்லாம் மதுவும்—மங்கையும்! கிண்ணமும் — மஞ்சமும்! போகமும் போதையும்! விருந்தும்—கூத்தும்! விரலசைத்தால் சிற்றேவல் செய்ய ஆயிரம் அழகுக் கன்னியர் – வீரக்காளையர். நாவசைத்தால் அதுவே நாட்டின் சட்டமென்ற அந்தஸ்து. இவற்றின் மொத்த உருவந்தான் இச்சிம்மாசனம். இவற்றைத் துறக்க ஒருவன் முற்படுவானாயின் அவன் நிச்சயமாக முட்டாள்களின் தலைவனாக இருக்கத்தான் தகுதியுள்ளவன்.

**சாலி:** அரச போகந்தான் பேரின்பமென்றால், அதைத் துறப்பது முட்டாள்தனமென்றால், புத்தபகவான் எவ்வளவு பெரிய முட்டாளாக இருக்க வேண்டும்? அத்ததாதகரின் தத்துவ நெறி ஒழுகி வாழும் நாம் எல்லாம் எவ்வளவு பெரிய முட்டாள்கள்? அந்நெறி என்றென்றும் சிங்கள மண்ணில் நிலைத்து நிற்கச் செப்பு மாளிகைகளும், மிரிசு விஹாரங்களும், ருவான்வெல சேயாக்களும் நிர்மாணிக்கும் மன்னன் எவ்வளவு பெரிய முட்டாள்களின் தலைவன்?

**சதா:** நாத்தழித்த பேச்சு. கௌதமர் மெய்ஞானம் தேடித் துறவுபூண்டார். அவர் மண்ணை மட்டும் துறக்கவில்லை; அழகே உருவான யசோதை என்ற பெண்ணையும் துறந்தார். ஆனால் நீ? கேவலம், பெண் வேட்கை—அசோகமாலாப் பைத்தியம்.

**கை;** ஒரு பெண்ணுக்காக—கேவலம், ஒரு சதைப் பிண்டத்திற்காக! பிணியினால் — மூப்பினால்—சாக்காட்டினால் தகிக்கும் ஒரு உடலுக்காக.

**நங்:** குளிர் மஞ்சள் தேய்த்து, பன்னீரில் குளித்து, அகிற் புகையில் நீருலர்த்தி, உறுத்தாப் பட்டுடுத்தி, சுவர்ணச்சிலையெனத் திகழும் ஒரு ஆரியகுல மங்கைக்காகவா?

**சாலி:** கடவுள் படைத்தார்நிர்வாண உடலை; அதற்குத் தோலென்ற போர்வை வழங்கினார். உறுத்தாப் பட்டும், சுகந்த பன்னீரும் தளுக்கும் புனுகும் தேடித் தவிக்கும் நரனின் சிருஷ்டி!

**நங்:** உண்மை, இளவரசே. ஆனால் கடவுள் படைத்த தோலிலேகூட எவ்வளவு வேறுபாடு? சண்டாளப் பெண்ணின் கரிய மேனியில் என்ன அழகைக் காண முடியும்?

**சாலி:** நீ வீரனாயினும் ஆண்தன்மை அற்றவன் என்பதை ஞாலமறியும், கலவிப் பொழுதாம் காரிருளில் தோலின் வண்ணத்தைச் சுவைப்பவன் யார்? போரைப் பற்றி நீ பேசு கேட்கிறேன். காதலுக்கும் உனக்கும் இடைவெளி காததூரம்.

**நங்:** காதலைப்பற்றியா நான் பேசுகிறேன். கண்களுண்டு; நுகர்ச்சி உணர்வுகளுண்டு. அழகு ரஸனைகரும் ஒரு கேடா? படைபடையாய் அழுக்கு; குடலைக் குமட்டியெடுக்கும் துர்நாற்றம் — இவற்றின் பிறப்பிடம் அசோகமாலா.

**சாலி:** நிறுத்து நந்திமித்தா!...என் அசோகமாலாவின் அந்தச் சரீரத்திற்குள் அழியாத

ஆத்மா இருக்கின்றது. அன்பும், பண்பும், புத்த பகவானின் அருள்நெறியும், நிரம்பி வழியும் நெஞ்சமுமிருக்கின்றது … முற்பிறப்பில் என் இல்லற ஜோதியாக வாழ்ந்து மடிந்தவளின் உயிர் இருக்கிறது. புத்தர் மண்ணைத் துறந்தார் அருள்நெறி பரப்ப …! வரலாறு வரையட்டும். அவர் போதித்த அருள்நெறி வழிவாழ — எல்லா உயிர்களும் ஒன்றே' என்னும் அவர் செப்பிய சமதர்மக் கொள்கையை நிலைநாட்ட — மண்ணைத்துறந்தான் சாலி ராஜகுமாரன் என்று சரித்திரம் பொறிக்கட்டும்.

**கை:** அறியாச் சிறுவனே! காதலுக்கு நினைவுச் சின்னங்கள் எழுப்புவது நம்நாட்டு மரபல்ல. 'பெண்பித்துக் கொண்டலைந்த பேயன்' என்று இகழ்வார்கள் — ஏசுவார்கள் — தூற்றுவார்கள். ஒரே தலைமுறையில் மறந்தும் விடுவார்கள். விழுப்புண் — வீரம். — இவற்றையே மக்கள் கொண்டாடுவார்கள். போற்றி, காலத்தால் அழிந்துவிடாது கலைசால் வண்ண நினைவுச் சின்னங்களும் எழுப்புகிறார்கள்.

**சதா:** நமது வேந்தரை மக்கள் அவதார புருஷர் என்று கொண்டாடுகிறார்கள் ஏன்? 'விழுப்புண் பெருநாட்கள் பிறவா நாட்கள்' என்று போரைப்பற்றிய சோழர்களையே இந்நாட்டினை விட்டு ஓட்டிய மறச் செயலுக்கு!

**சாலி:** விழுப்புண் — வீரம்! கோழைகள் தான் அதிகம் வீரத்தைப்பற்றிப் பேசிக் கொண்டே இருப்பார்களென்பதை என் சித்தப்பர் மறந்து விடுகிறார் … நித்திய பசிக்கும் அண்டப் புழுகுகளுக்கும் உறைவிடமான புலவனை அழைத்து வேண்டிய பொருள் வழங்கினால், கோழையைப் பற்றிக்கூட வீரகாவியம் பாடப்படும். நடுகல்நாட்ட கருங்கற்களுக்கும் கொத்தர்களுக்கும் பஞ்சமா? சுத்த வீரன் ஏதோ ஒரு போர்க்களத்தில் வாளுக்கிரையாகி, கழுகுக்கு உணவாகி, அநாமதேயமாகவே மறைந்து விடுகிறான்.

**கை:** சாலி, நீயா வீரத்தின் வரைவிலக்கணம் கூறுபவன்? போர்க்களம பார்த்திருக்கிறாயா? அல்லது இரத்த வெள்ளத்தில் குளித்திருக்கிறாயா? … மகனே! என் இரத்தத்திலும். நரம்பிலும், தசையிலும் உற்பத்தியான நீ, எப்படியடா வாளையும் வேலையும் மறந்து, வட்டமுலை மின்னார் மாதரின் பாதங்களே தஞ்சமென்று அலையத் தலைப்பட்டாய்?

**சாலி:** இரும்பு புனையில் இராச்சிய விஸ்தரிப்புக் கனவு உங்களுடையது இதயத்தின் அன்பு நெகிழ்ச்சியில் மகிழ்ச்சி கொள்ளும் வாழ்க்கை என்னுடையது. நீங்கள் ஆயிரம் தர்க்க நியாயங்கள் காட்டினாலும் நான் மாலாவைக் கைவிடமாட்டேன்.

**கை;** நீ அசோகமாலாவை மறக்கத்தான் வேண்டும்.

**சாலி:** சாதாரணக் குடிமகனுக்குள்ள உரிமை எனக்கும் இருக்கின்றது. எப்பொழுது தொடக்கம் வேந்தரின் பார்வை மக்களின் சயனக்கிருகங்களை எட்டிப் பார்க்கத் தொடங்கினது?

**நந்:** இளவரசே, நீங்கள் வருங்கால மன்னன். சாதாரணக் குடிமகனல்ல.

**சாலி:** என் காதலை நிராகரிக்கும் எந்தப் பதவியும் எனக்குத் தேவையில்லை. நான் ஒரு ஏழைக் குடியானவன் மகனாக அசோகமாலாவுடன் வாழ்வதைப் பெரும் பேருகக் கருதுகிறேன்.

**கை** கடைசியாகக் கேட்கிறேன். முடியா? பெண்ணா?

**சாலி;** முடியா? அசோகமாலாவா? என்று கேளுங்கள். அசோமாலா அந்த அளகாபுரியின் சிம்மாசனத்திலும் பார்க்க எனக்கு மதிப்புமிக்கவள்.



**கை:** கடற்கரைக் கிழிஞ்சல், முத்திலும் பார்க்கப் பெறுமதியுள்ளதாம். பைத்தியக்காரன்.

**சதா:** சாலி சிர்த்தித்துப் பார். கள் வசப்பட்டவனும், காதல் வசப்பட்டவனும் சுயமாகச் சிந்திக்கும் தன்மையை இழந்துவிடுகிறான் என்பதால் ஞாபகப் படுத்துகின்றேன். உன் நன்மை கருதியே நான் சொல்லுகிறேன். தந்தை சொல் மீறிய தனயன் என்ற அவச்சொல்லுக்கு—தூற்று மொழிக்கு ஆளாகாதே.

**சாலி:** என் சித்தப்பருக்குப் போதிமரஞானம் ஏற்படுகின்றது. என் தந்தைமட்டும் 'தந்தைசொல் மிக்கதோர் மந்திரமில்லை' என்று வாழ்ந்த சற்புத்திரனா? என் தாத்தா காக்கைவர்ணதீஸரின் சொல்லைத் தட்டியதுமல்லாமல், பெண்களின் ஆபரணங்களை அனுப்பி அவமதித்தார். இவர் அவதார புருஷர்…எல்லோரும் அறிந்துகொள்ளுங்கள். நான் இங்கு வந்ததே என் முடிவை அறிவித்துச் செல்லவே.

**கை.** சரி இக்கணமிருந்தே நீஎன் மகனல்ல.

**நந்.** அரசே. நிதானமாகச் சிந்தியுங்கள். ஆத்திரம் அறிவை மழுங்கச் செய்யும்.

**கை.** நந்திமித்தா!

**நந்.** சுதந்திரப்படையில் முதல் சேர்ந்த வீரன் என்ற உரிமையுடன் பேசுகிறேன். இறவாப் புகழ்பெற்ற மறவர் கோட்டமாகத் திகழும் இத்தீவின் மகுடத்தை ஏற்றமுடன் தாங்கவல்ல திறல்மிகு நெஞ்சினன், நமது இளவரசரைத் தவிர யார் இருக்கிறார்கள்?

**சாலி:** நந்திமித்தா! ஏன் இல்லை. என் சித்தப்பா இருக்கிறாரே? சூழ்ச்சியில் சூரர். எப்பொழுது சாலியென்ற சனியன் தொலைவான் என்று சமையம் பார்த்துக்கொண்டிருந்தவர். இந்தக் கிழ வயதிலாவது மன்னனாகட்டுமே.

**கை:** ஆமடா, ஆம். என் தம்பிதான் என் வாரிசு. சதா, இன்றே பிரதானிகள் சபையைக்கூட்டு. என் முடிவை அறிவிப்பேன் …என் வாழ்வின் கறையான சாலியே, கேள். இன்னும் அரை ஜாமநேரத்தில் நீ அரண்மனையை விட்டே சென்று விடவேண்டும், அப்புறம் இந்த ராஜதானியின் எல்லைக்குள்ளேயே நுழைபக்கூடாது. நீ சண்டாள இனத்தில் வாழ்ந்து, சண்டாளக் குட்டிகளைப் பெருக்கிச் சண்டாளனாகவே செத்துப்போ…வாருங்கள்.

(கைமுனு, சதாதீஸன், நந்திமித்தன் ஆகியோர் வெளியேறுதல்).

**சாலி:** (தனிமையில்) என் இதயம் கவர்ந்த இனியவளே, அசோகமாலாவே! அரை ஜாமநேரம். நான் சுதந்திரப் புரு அப்புறம்? வானம்பாடிகளாகச் சண்பகவனத்தில் பறந்து திரியலாம்…நீ அந்தச் சண்பக மரத்தடியில் மலர்தொடுத்தவண்ணம், வழிமேல் விழி பதித்து என் வருகைக்காகக் காத்திருப்பாயா? இதோ, நான் வருகிறேன்.

(ராணி வரல்).

**ரா:** மகனே, என்னைக்கூடப் பிரிந்து செல்லத்துணிந்துவிட்டாயா? பெற்றபாசத்தின் வேதனையை நீ அறியமாட்டாயா?

**சாலி:** எனக்கும் வருத்தமாக இருக்கிறது தாயே. என் பிரிவு தரக்கூடிய தனிமையின் வேதனையை அறிவேன். ஆனால் நீயே அந்த அபலையின் நிலையிலிருந்து சிந்தித்துப் பார். மகுடத்திற்காக, ஒரு உத்தமபெண்ணின் கற்பைச் சூறையாடிய கயவனாக நான் வாழவேண்டுமா?

**ரா:** உன் நிலையும் எனக்குத் தெரியும்… க்ஷத்திரியகுலத் தர்மபத்தினி, உன்னை ஆசீர்வதித்து அனுப்புகிறேன். உங்கள் மணவாழ்க்கை இசைபொழியும் குழலாக, மணம் பரப்பும் பூங்காவாகத் திகழட்டும். ஆனால் ஒரு குறை…

சாலி: என்ன தாயே?

ரா: அசோகமாலாவைப் பார்க்க எனக்கும் ஆசையாக இருக்கிறது. உன் இதயங் கவர்ந்தவள் இனியவளாகத்தான் இருப்பாள். நீஅவளையே மனைவியாக அடைந்து, அதேசமையம், இதே அரண்மனையில், நமது குடும்ப விளக்காக ...

சாலி: வேண்டாத கனவுகள், ஒன்றில் மதிப்பு இன்னொன்றின் தியாகத்தினுல் உயருகின்றது. புத்தர் ஆண்டியாகவே பிறந்து தன் போதனைகளைப் பரப்ப முனைந்திருந்தால், அதை மற்றவர்கள் பசி வேதாந்தம் என்று பேசியிருப்பார்கள். பொன்னைத் துறந்தார்—மண்ணைத் துறந்தார்—அவருடைய போதனைகளின் மதிப்பும் உயர்ந்தது. பூ உதிராது கனியா? கரும்பைப் பிழியாது கற்கண்டா?

ரா: மகனே! செல்வத்தில் சுகித்தவன் நீ ஏழ்மையை எப்படியடா சகிப்பாய்?

சாலி: அழுகையா தாயே? வீரத்தாயின் மகனென்று உள்ளம்பூரித்திருந்தேனே! பிரிவு கலக்குகிறதா? ... போர்க்களத்தில் மகன் மடிந்தான் என்ற செய்தி கேட்டுக் கலங்க முடியாதா நெஞ்சு, என் ஏழ்மைக்காக...

பின்னணி;

அன்பான மாரனே ஆண்மையின் வீரனே
சண்பக வனமதில் சாம்புதே உன் காதலே
இன்பத்தின் வானமே இதயத்தின்கானமே

சாலி; அதோ!

பின்னணி;

அன்பான மாரனே ஆண்மையின் வீரனே
சண்பக வனமதில் ...

சாலி: அசோகமாலாவின் பாட்டுக் கேட்கிறது. நான் வருகிறேன் தாயே!

(சாலி செல்லல்)

ரா: மகனே......காதலுக்காக முடிதுறந்த உத்தமனே.........காதலினல் செத்தவர்களுண்டு...ஆனல் நீ சாகாத காதல் நிலைநாட்டச் செல்கின்றுயா?......

[ திரை ]

## காட்சி: 2.

[சண்பகவனம். அதில் அசோகமாலா 'அன்பான மாரனே' என்ற பாடலுக்கு நடனமாடுகிருள் ... ...]

**அன்பான மாரனே ஆண்மையின் வீரனே**
**சண்பக வனமதில் சாம்புதே உன் காதலே**
**இன்பத்தின் வானமே இதயத்தின் கானமே**
**(அன்)**

**காண்பாய் உன் அடிமையே**
**கசிந்துருகும் பேதையே**
**வான் பொய்த்த பயிராக**
**வாடுதே இந் நோயாலே (அன்)**

**தேனுன பேச்சாலே**
**காதலின் மூச்சாலே**
**சண்டாளப் பெண்வாழ்வில்**
**சுகசாலி ராஜனே (அன்)**

(நடனம் முடிவடையும் சமயம் சாலி தோன்றுகின்ருன்.)

**சாலி:** அன்பே. மாலா! கலைவாணி உன்னிடந்தான் இசைப்பயிற்சி பெற்ருளா?

**மாலா:** என் இதயத்தின் துடிப்பான இனியவரே! ததாகதர் உங்களிடந்தான் அன்பும், அருள்நெறியும் பெற்ருரா?

**சாலி:** துடுக்குக்காரி, இடக்குப் பண்ணிப் பேசுகிருய். தென்றல் உன்னிடந்தான் நடனம் பயின்றிருக்க வேண்டும்.

**மாலா:** தெங்கிளநீர் உங்கள் பேச்சின் தன்மை பருகியதால்!

**சாலி:** நிறை நிலவு உன் எழில்கண்டு முகிலில் மறைவதைப் பார்த்தாயா?

**மாலா:** இல்லை இளவரசே! ஆரிய குலத்தில் க்ஷத்திரிய வம்சத்தில் ரதியையும் விஞ்சும் ஆயிரம் அழகிகளிருக்க, ஒரு சண்டாளப் பெண்ணில் மோகித்துத் திரி



கிருனே! இந்த இராசகுமாரன் கண்ணற்றவனே? கருத்தற்றவனே? அவனைப் பார்க்கவேண்டாம்' என்று, சண்டாள குலத்தவர்களைக் கண்டு விலகி ஒதுங்கும் உயர்குல மக்களைப்போல முகில் என்ற திரைக்குள் மறைகின்றது.

சாலி: மாலா, என்னை இளவரசனென்று அழைக்காதே.

மாலா: என்ன?

சாலி: இதிலென்ன ஆச்சரியம்? அன்று மேட்டிலிருந்தேன், மடுவைப் பார்த்துச் சிரித்தேன். சாக்கிய முனிவன் வேதமும், உன் காதலும் என் உளளத்தில் பாய்ச்சிய புதிய சமதர்ம உணர்வுகளுடன், கடலுடன் கலந்து, மடியா இசை மீட்க வந்திருக்கிறேன்.

மாலா: கடலுடன் கலக்க வந்தீர்களா? உப்புநீரில் என்ன சுகம்?

சாலி: அதன் ஆழத்தில் மறைந்து கிடக்கும் அன்பென்றமுத்தைக் குளித்தெடுக்க.

மாலா: இனி அரண்மனைக்குத் திரும்பவே மாட்டீர்களா?

சாலி: உன் பாதங்கள்பட்ட இடத்திலே தான் என் சுவர்க்கமிருக்கும்பொழுது, நான் ஏன் திரும்பிச் செல்லவேண்டும்?

மாலா: உங்கள் தந்தை?

சாலி: 'வீரமே புருஷ இலட்சணம்' என்று சீறுகிருர். சிங்கம்கூட வீரமுள்ளதுதான். வீரம் என்பது மிருகப்பலம். அன்புங் காதலுந்தான் மனிதவர்க்கத்தின் சொத்து.

மாலா: நீங்கள் அரசஉரிமைகளைத் துறப்பதை மக்கள் விரும்புவார்களா? மக்களின் கண்மணியல்லவா நீங்கள்?

சாலி: ஏன் விரும்பமாட்டார்கள்? மக்கள் கூட்டத்திற்கு எப்பொழுதும் குறுகிய ஞாபகசக்தி. எதையும் சீக்கிரம் மறந்துவிடுகிருர்கள். அன்று, துஷ்டனென்று அழைக்கப்பட்டார் என் தந்தை. இன்று அவரே அவதார புருஷரென்று கொண்டாடப்படுகிருர் ... என் சித்தப்பா தான் இனி முடிக்குரியவர். அவருடைய சகாக்கள் இந்நேரம் மகிழ்ச்சிக்கடலில் கும்மாளம் போடுவார்கள்.

**மாலா;** தன்னிடமிருந்து தனயனைப் பிரித்த பாவி என்று என்னைப்பற்றித் தங்கள் அன்னை மனம் நொந்தாரா?

**சாலி;** என் அன்னை மிகவும் நல்லவள். உன்னைப் போலவே என்னை நேசிப்பவள். என்ன சொன்னுர்கள் தெரியுமா? 'சாலி, உன் அன்பைக் கவர்ந்த அசோகமாலா இனியவளாகத்தான் இருப்பாள். அவளைப் பார்க்க எனக்கு ஆசையாக இருக்கிறது' என்ருர்கள்.

**மாலா:** எனக்கும் அன்னையைப் பார்க்க ஆசையாக இருக்கின்றது.

**சாலி:** தாமரை இலையில் தளதளத்து, சூரியோதயத்தில் குளித்து மகிழும் நீர்த்துளிகளைப்போன்று ரம்மியமானவை நமது ஆசைகள். ஆனல் அந்தத் தாமரை இலைத் தண்ணீர்த் துளிகளை முத்துமாலையாகக் கோத்து உன் கழுத்திலே சாத்த முடியுமா? மனித ஆசைகள் முழுவதுமே நிறைவேறிவிட்டால் அவன் ஆண்டவனையும் தன்னையும் மறந்துவிடுகிருன். நிராசைகளில் வீணுக மனதைக் கலக்காதே. (அசோகமாலா சண்பகமரத்தடியில் அமர்ந்து, மாலை தொடுத்தவண்ணம் சிந்தனையில் ஆழ்ந்திருப்பதைக் கண்டு) என்ன மாலா சிந்தனை?

**மாலா:** எங்களுக்குக் குழந்தைகள் பிறப்பார்களல்லவா?

**சாலி:** ஆமாம். பகவரின் வழியில் வாழும் நமக்கு, அவர் கருணை எப்பொழுதுமே உண்டு.

**மாலா:** அவர்களும் நம்மைப்போலத்தான் உரிமைகளை இழந்தவர்களாக வாழ்வார்களா?

**சாலி;** சமத்துவம் போதித்தார் புத்தர். அவரை வழிபடுவதாக வேஷம்போடும் பாவிகள் ஜாதிக் கட்டுப்பாட்டை மட்டும் அட்டையாக ஒட்டிக்கொள்ளுகிறார்கள். புதிதாகத் தோன்றியுள்ள பிரபுக்களும் சீமாட்டிகளும் வாழும் இந்தச் சமூகம் உரிமைகளை நமது பிள்ளைகளுக்கு மறுக்கலாம். ஆனால் அவர்கள் சர்த்தியினர் தங்கள் உரிமைகளை நிலைநாட்டப் போராடிக் கொண்டே இருப்பார்கள். நூறு ஆண்டுகளுக்குப் பின்னரோ, அல்லது ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னரோ, நிச்சயம் இச் சிங்கள மண்ணில் தங்கள் உரிமைகளை நிலைநாட்டியே தீருவார்கள். (மாலா மறுபடியும் தலைகவிழ்த்து மலர் தொடுத்துக் கொண்டே இருக்கிறாள். அப்பொழுது அவளுடைய தலையை நிமிர்த்திய சாலி) என்ன மாலா, என்ன கலக்கம்?

**மாலா:** அரசபோகத்தில் வளர்ந்தவர்கள் நீங்கள். உங்களை எப்படியெல்லாம் சந்தோஷமாக வைத்திருக்கலாம் என்று தெரியாமல் தவிக்கிறேன்.

**சாலி:** இன்பம்? அது மனமயக்கம்; நாமாகக் கற்றுக்கொள்ளும் ஒரு நிலை. குடிகாரனுக்கு அது மதுவில் கிடைக்கும்; காமிக்கு அது தாஸியிடம் கிடைக்கும்; உலோபிக்கு அது பொருளில் கிடைக்கும்; கவிஞனுக்கு அது கற்பனையில் கிடைக்கின்றது. ஆனால் என்னுடைய இன்பங்கள் யாவும் உன்னுடைய காலடியிலேதான் கிடக்கின்றன. நீ ஆடு...பாடு...சதா சிரித்துக்கொண்டேயிரு. துன்பம் இத்திக்கைஎட்டிக்கூடப் பார்க்காதே

**மாலா;** ஒருவேளைச்சோற்றுக்கே போக்கற்ற ஏழை நான். இந்த ஏழையின் ஏழ்மையைப் பங்குபோடப் பறந்தோடி வந்தீர்களா?

**சாலி;** மாலா! வீண் நினைவுகளில் மனதைக் கலக்காதே. சிங்களம் வளம்மிக்க நாடு. கொத்தாமல், விதைக்காமல், நீர் பாய்ச்சி, களை பிடுங்கி, காக்காமலே பயன்தரும் பொன்விளை பூமி, மரமெல்லாம் நற் கனிகள்; நீரெல்லாம் தேன். பசியா? பஞ்சமா? இல்லை இல்லை. மாற்றான் ஒருவனை வருத்தி, அவன் உழைப்பில் உண்டு கொழுப்பதிலும் பார்க்க, இந்த இரண்டு கைகளாலும் உழைத்துப் பாடுபட்டுப் புசிப்பது வயிற்று நிறைவை மட்டுமல்ல, மன நிறைவையும் தருகின்றது...களை முகம்; வட்டக் கரு விழிகள்; பால்சிந்தும் பற்கள்; இவற்றைப் பார்த்துக்கொண்டே இருந்தால் பசி என்னைத் தீண்டவே மாட்டாது.

**மாலா:** அன்பரே, நான் என்றென்றும் உங்கள் அடிமை.

**சாலி:** நாமிருவருமே காதலின் நிரந்தர அடிமைகள். (தொடுத்தெடுத்த மாலையைக் கிரீடமாக வளைத்து இளவரசனின் தலையில் சூடுகிறாள் அசோகமாலா..)

**மாலா:** முடிசூட்டியதும் உங்களுடைய தலை எப்படி இருக்குமென்று பார்த்தேன். இந்த ஏழையிடம் பொன்னேது? இந்த மலர் மாலையில் மகுடம்சூட்டி மகிழ்கின்றேன்.

**சாலி:** இந்த மலர்முடிதான் எனக்குப் பிடித்தமானது. அரசமகுடம் முள். அரசியல் முடி சூழ்ச்சிகளின் கறைபடிந்து, போட்டியாலும் பூசலாலும் செய்யப்பட்ட கொலைகளின் புலால் நாற்றம் கொண்டது. அது மனிதனின் துல்லிய உணர்ச்சிகளைக்கூடக் கசக்கி, நசுக்கி, துவம்சம்செய்யும் சுமை. பொன்னா? மணியா? இரத்தினக் கிரீடமா? இல்லை, மாலா, இல்லை. அது இதயத்தைச் சதா உறுத்திக்கொண்டே இருக்கும் முள்! முள்!!

**மாலா:** கிரீடத்தை என் கண்கள் கண்டதில்லை. சண்டாளகுலத்தவரின் நிழல்கூட மன்னனின்மீது விழக்கூடாதாம். நான் பாக்கியசாலி யல்லவா? என் இதயத்தில் ஒரு மன்னனை இருத்தி வைத்திருக்கிறேனே,



**சாலி:** நீ அந்த இராச கிரீடத்தைப் பார்க்காமலிருப்பதுதான் நல்லது. நீ என் தலைமீது சூட்டியுள்ள இந்த மலர் முடிக்கு அது எவ்வகையிலும் ஈடாகமாட்டாது...இந்த முடி வாடினால் புது மலரில் புது முடி...

**மாலா:** நான் தினமும் இவ்வனத்தில் மலர் பறித்து, புதிய புதிய கிரீடங்கள்செய்து, வாழ்நாள் பூராகவும் சூட்டிக்கொண்டே இருப்பேன்.

**குரல்:** புத்தன் சரணம்கச் சாமி.

**சாலி:** அதோ புனிதர் மொகலிபுத்த தேரர் வருகின்றார்.

(இருவரும் எழுந்து நிற்கின்றனர்.)

**குரல்:** சங்கம் சரணம்கச் சாமி

(மொகலிபுத்ததேரர் மேடையில்தோன்றல்

தம்மம் சரணம்கச் சாமி.

(சாலியும் மாலாவும் வணங்கல்).

**இருவரும்:** வணக்கம் புனிதரே!

**மொக:** எல்லாம் கேள்விப்பட்டேன் சாலி. மகுடமாம் முள்முடி துறந்து, இம் மங்கை நல்லாளின் மலர்க்கரம்பற்றத் துணிந்துள்ள உன் வீரத்தை, தியாகத்தை மெச்சாதவர்களில்லை.

**சாலி;** இனிஒருலகம் இதை வரவேற்கலாம். அவர்களும் நாளைக்கே இப்படியொரு சாலியும் மாலாவும் வாழ்ந்தார்களென்பதையே மறந்துவிடுவார்கள்.

**மொக:** அப்படியல்ல மகனே. ரூவான்வெலசேயா நிருமாணிக்கும் கைமுனுவின் நினைவு காலவெள்ளத்தில் அழிந்தாலும், தமிழரை விரட்டிய அவனது மறச்செயலை மக்கள் மறந்தாலும், காதலின் புனிதத்தை உலகோர் அறிய நிலைநாட்டத் துணிந்துள்ள உன்னை ஞாலம்உள்ளளவும் மக்கள் மறக்கமாட்டார்கள். உங்கள் மனமொத்த மணவாழ்க்கைக்கு என் மனங்கனிந்த ஆசிகள்.

**சாலி:** புனிதரே! என்னால்—வறிய நிலையிலிருக்கும் என்னால்—சங்கத்தின் மேன்மைக்கு விஹாரங்களும், டகோப்பாக்களும் கட்டித்தர முடியாதே என்று நினைக்கும் பொழுது—

**மொக.** மகனே, ஆயிரம் விகாரங்கள் கட்டு பவனிலும் பார்க்க நீ பகவருக்கு அணிதாக இருக்கிறாய். புத்தர் போதித்த சத்தியம் - சாந்தம் - சமரசம் ஆகிய போதனைகளின் வழி வாழவிழைந்துள்ள உன் பக்திக்கு ஈடாகுமா அந்த வெறும் கற்கோபுரங்கள்? ...மகளே, மாலா! நீ மகா அதிஷ்டக்காரி.

**மாலா:** புனிதரே!

**மொ:** உன்னை அடைய இளவரசன் செய்துள்ள தியாகத்திற்கு நிறைவாக நடந்துகொள்.

**மாலா:** இந்த உடலும் உயிரும் அவருடையவையே...அவர் ஒருவருக்காகத்தான் நான் உயிர்வாழுகின்றேன்.

**மொ:** நீங்கள் இருவருமே சுயத்தை இழந்து, ஒருவருக்காக மற்றவர் வாழும் புனிதமான மானசீகக் காதலால் பிணைக்கப்பட்டவர்கள் என்பது எனக்குத் தெரியும்...உலகை மறந்து இன்பத்தில் வாழுங்கள்...ஆனால் கணநேரந்தானும், அன்புமார்க்கத்தினையும் பகவரையும் மறந்துவிடாதீர்கள்.

**சாலி:** புனிதரே! எங்களிருவரைப் பிணைத்து வைத்திருப்பவரே போதிமாதவர்தான். உங்களுடைய அடிச்சுவட்டை ஒற்றி வாழ்வோம்.

**மொ:** காதலர்களின் இருப்பிடத்தில் இத்துறவிக்கு என்ன வேலை? உங்களுடைய தனிமையைக் கலைக்க நான் விரும்பவில்லை. நான் வருகிறேன்.

(மொகலிபுத்ததேரர் செல்லல். ‘புத்தன் சரணங்கச்சாமி’ என்ற கோஷம் ஒலித்து மடிகிறது).

● கற்பனைக் கருத்துக்களைக் கனிந்த தமிழ்ச் சொற்களிலே வார்க்கும் கவிஞர் ஜெயம் "ஒருவகைப் பெரியார்களின்" போர்வையை இழுத்தெடுத்து அவர்களை அம் மணக் கோலத்திலே நிறுத்துகிறார்.



# "ஒருவகைப் பெரியோர்"

— ஜெயம் —

ஞானரதம் வாராதா? வான்வீ டேக
நங்கவலை தீராதா? என்றே நாளும்
மோனநிலைத் தவம்பேணி இன்பந் துய்க்கும்
மூத்தவர்கள் பாற்சென்று காதின் பக்கம்
"கானசபா மேடைதனில் அடிகாள் வந்து
கௌரவிக்க வேண்டுகிறோம்" என்றாற் போதும்
தேனமுத நீராடிக் களித்தா லென்னத்
திருவருளின் படிநாளை வருவோம் என்பார்.

திங்களுக்கோர் முறையேகித் தெய்வக் கோயில்
திருமுன்னே கடமைக்காய்த் தலையைச் சாய்ப்பார்
மங்களநற் சுபதினங்கள் நடுவே மட்டும்
மனமிளகி மனைகளுக்குச் சமுகஞ் செய்வார்
எங்களது மனைமக்கள் இவரே சொர்க்கம்
எமக்கேனிப் பொதுவாழ்வு என்பார் காதில்
தங்களுக்கோர் 'சேவைவிழா' எடுப்போ மென்றால்
தரித்திரர்போற் பொறுமையொடும் தலை சாய்ப்பார்கள்!

ஏழைகளின் துயர்காணூர் இரப்போர் வந்தால்
எங்கள்நாய் பெரியஇனம் பாயு மென்பார்
பேழைகளில் உள்ளதொகைப் பணத்தைக் காத்துப்
பெருக்குவதில் இமையோர்போற் கண்ணும் மூடார்
வாழையடி வாழையெனத் தருமம் காக்கும்
வள்ளல்கள்தம் பரம்பரையில் வந்தோ மென்பார்
வேளைவரும் போதிலெலாம் பணத்தைக் கொட்டி
விளம்பரத்தின் உச்சியிலே அறத்தைச் சேர்ப்பார்.

நாணயமே வாழ்வென்பார் கடனைக் கேட்டால்
நாம்பெரிய மனிதர்மனப் பயமே னென்பார்
நாணமிலார் புகழுக்காய் நஞ்சென் றாலும்
நன்மனதாய் உண்டிடுவார் நாளும் நாளும்
ஊனுடையில் நீரினிலே புனிதம் பார்ப்பார்
ஒருநாளும் ஒருபோதும் உண்மை பேசார்
ஆணவமே அரசாளும் அகத்தின் மாசை
அகற்றவழி காணூரோ? அந்தோ! அந்தோ!!







ஈழகேசரி வெள்ளிவிழா மலர்

**மருதமடு**

ஒல்லாந்தராட்சியில் இடருற்ற கிறித்தவர்கள் மாந்தையில் இருந்த தேவமாதா சொரூபத்தை இம் மருதமரச் சோலையில் அமைத்தனர். இவ் வாலயம் 1823இல் புதிப்பிக்கப்பட்டது. "மன்னுபல மதத்தினரும் மனமுருகி வினை தவிர்க்கும்" மருதமடுப்பதி.



✳ ஆதி மனிதனின் நா அசையுமுன் அவன் கைகள் தாம் முதலில் அசைந்தன; கிறுக்கின. அந்தக் கிறுக்கல்கள் காலப்போக்கில் சிதத்திரங்களாகவும், ஓவியங்களாகவும் வளர்ச்சிபெற்றன!

ஓவியக் கலைஞர் எழுத்தாளர் திரு. "ஆதவன்" ஓவியத்துறைபற்றி எழுதியுள்ள இக்கட்டுரை பல தகவல்களைத் தருகின்றது.

# பேசுங் கலை!

ஆதவன்

தரையிலே குழந்தைகள் விளையாட்டுப் பருவத்திலே கிறுக்கி, கிறுக்கி தங்கள் கிறுக்கல்களைப் பார்த்துச் சுவைத்து மகிழுகிறார்கள். இதனைப்போலவே நம் முன்னோரின் வாழ்க்கை வரலாற்றிலே — அதாவது மனித சாகியத்தின் அடித்தோற்றத்திலே — நாகரிக வளர்ச்சியின் ஊற்றத்திலே — கிறுக்கல் பருவம் ஒன்றும் இருந்தது. அந்தக் கிறுக்கல்களை மானிடர்களின் ஆதி இல்லங்களாகிய குகைகளிலே இன்றும் நாம் காணலாகும். ஆதி மனிதனின் நா, அசையுமுன் அவன் கைகள் தாம் அசைந்தன, அவைகள் தாம் முதலில் பேசத் தொடங்கின. அந்தப் பேச்சுக்கள் சைகைகளாகவும் அந்தச் சைகைகளைக் குறிக்கும் சித்திரங்களாகவும் தோன்றின. நாம் பேசும் மொழிகளின் தாயும் தந்தையும் அவைகள் தாம் — சைகைகள் அபிநயங்களாகவும் முத்திரைகளாகவும் அவதாரங்களை எடுத்து நடனக் கலையாக விளங்குகின்றன. கிறுக்கல்கள் சித்திரங்களாகி எழுத்துக்களாகிப் பின் மொழியாகி நாவின் அசைப்பினால் பேச்சாகப் பரிணமித்தன. இவ்வளவு அவதாரங்களோடு பேச்சாகிய கலை, நா அசைப்பிற்குமுன்பே கைஅசைவாகிய சித்திரத்திலும் பேசத்தான் செய்தது. அந்தப் பேச்சில் ஒலி அணுக்கள் இசைக்கவில்லை; ஒளி வடிவமாயிருந்தன. (ஒளி — கண்ணால் நுகர்தலைக் குறிக்கின்றது) இன்று அவை காதாற் கேட்கும் ஓசை உணர்வாய் விட்டன. அப்படியானபோதிலும், ஆரம்பக்கிறுக்கல்கள் திறமைமிக்க கைவண்ணங்களால் ஓவியங்களாகி அவையும் இன்று நாகரிக உலகில் ஏதோ

சொல்லிக் கொண்டுதான் இருக் கின்றன. ஓவியன் உயிர்ப்பித்த கருத்தை நமக்கு அறிவித்துக் கொண்டே வளர்கின்றன. நவீன சாதனங்களாகிய 'ட்ருக்ரர்கள்' ஏற் பட்டபோதிலும் வயலை உழுதலா கிய செயல் ஒன்றேயாவதுபோல, படம் பிடிக்கும் கருவியாகிய 'கமரு' ஏற்பட்டபோதிலும் ஓவியம் ஓவிய மாகவேதான் இருக்கிறது. பேசும் படங்கள் தயாரான போதிலும் படம் படமாகத்தான் இருக்கிறது. தங்கம் நகையான போதிலும் அதன் தன்மை குன்றுவதில்லை.

கிழக்கே சீனம்முதல் மேற்கே மெக்சிக்கோ, பீறு வரை புராதன ஓவியங்களை வெவ்வேறு வகைப் பட்ட சாகியத்தாரின் சாதனைகளா கக் காண்கின்றோம் அறிகின்றோம். கோயாங்கோ நதியில் பெருகி மிதந்து வாழும் சீனரின் நாகரி கத்தை அவர்கள் ஓவியங்கள் எங் களுக்குச் சொல்லி வைக்கின்றன. ஓவியக் கண்காட்சிகளில் தங்கள் ஏஜமானர்களாகிய சீனர்களது வாழ்க்கை எப்படி என்பதைச் சொல்லித் தருகின்றனர். அவை கள் எம்மோடு பேசுகின்றன. இதேபோன்று, இந்துநதிதீரத்திலே நினைவிற்கு எட்டாத காலத்தில் வாழ்ந்த இந்துக்களின் வரலாற்றை மொகெஞ்சதாரோ களிமண்தட்டு ஓவியங்கள் (மொகெஞ்சதாரோ காளை ஓவியம்) எங்களுக்குச் சொல்லி வைக்கின்றன. நைல் நதி யின் வரப்பிரசாதமாகிய எகிப்தில் வாழ்ந்த புராதன மக்களின் வாழ்க் கை வரலாறுகளை மஹாபிரமிட்டில் தீட்டப்பெற்ற ஓவியங்கள் உணர்த் துகின்றன. யூப்பிரட்டீஸ் ரைகி றீஸ் நதிகளுக் கிடையே வாழ்ந்த பாபிலோனியரின் வாழ்க்கை, கிறீ ட்டி, கிறீஸ் தேசங்களில் வாழ்ந்த அத்ீனியரின் வாழ்க்கை, தைபர் நதிக்கரையில் உரோமானியரின் வாழ்க்கை, பிரித்தானியரின் வாழ்க் கை, வடஅமெரிக்காவில் புராதன மெச்சிக்கோ மக்களின் வாழ்க்கை, தென்னமெரிக்காவில் பீறு தேசப் பழங்குடிகளின் வாழ்க்கை அத் தனையும் ஆங்காங்கு காணும் ஓவி யங்களும் சிற்பங்களும் உணர்த்து கின்றன.

கால வெள்ளத்தின் போக் கிலே விஞ்ஞான வளர்ச்சியின் வேகத்திலே ஓவியங்கள் பலமாற் றங்களைப் பெற்ற போதிலும், தாம் வளர்ந்த கால மக்களைப்பற்றிச் சொல்வதில் அவற்றின் தரம் விழுந்து போகவில்லை.

ஓவியங்களின் வரலாற்றிலே இந்திய ஓவியங்களுக்கோர் தனி மதிப்பு ஓவிய உலகத்திலே நிலவு கிறது. இந்திய ஓவியங்கள் கோடு களினாலே உணர்ச்சித் துடிப்பை உமிழ்ந்து கொண்டிருக்கின்றன. கோட்டினாலே உணர்ச்சியைக் காட் டும் கலைத்தன்மை வேறு எந்நாட் டிலும் இருந்ததில்லை-ஏனைய நாட்டு ஓவியங்கள் திரட்சித் தன்மையா லும் வர்ணச் சேர்க்கையாலுந்தான் உணர்ச்சியைக் கொடுக்கின்றன. இந்திய ஓவியநிலைமை மிகவுந் தர மானவை என்று மேலைநாட்டார் பாராட்டுகின்றனர். இதனை ஈழ த்து கலாசோதி (கலாயோகி)யான ஆநந்தக் குமாரசுவாமி யவர்கள் அமெரிக்காவில் சொல்லியிருக்கி ன்றார். இந்திய ஓவியக்கலையின் பாணியை அழியாது காத்து வரு பவர்கள் பரம்பரையில் நந்தலால் போஸ் பிரசித்திபெற்ற இந்திய ஓவியர். இன்றும் வாழ்ந்து ஓவியக் கலைக்கு இயன்ற பணிபுரிகின்றார். அவரோடு ஒப்ப அபேந்திரநாத் தாகூரும் பணியாற்றி யிருக்கின்றார். விசேடமாகக் 'கலைமகள்' வெளி யீட்டிலே ஓவியங்கள் வரைந்து வரும் ஓவியர் 'இராஜம்' இந்திய



ஓவியக்கலைப் பாணியையே முற்று முழுக்கப் பின்பற்றுபவர். அவரை அடுத்து ஓவியர் மணியம் அவர் களும் நூற்றுக்கு அறுபதுவீத மாக அநுசரிக்கின்றார் ஓவியர்மணி, இராச இரவிவர்மா முதல் இன்று இந்தியாவில் வாழ்ந்துவரும் ஓவி யர்கள் அனைவரும் காலப்போக்கிற் கமைய தங்கள் ஓவியப் பாணி களை மாற்றி தீட்டிவருகின்றனர். இருவகை ஓவியர்களும் தேசத்தின் கலைவளர்ச்சிக்கு முக்கியமானவர் கள் தாம்.

இவை இருக்க, "குருவிக்குத் தக்க இராமர் சரம்" என்பார்களே அந்த அளவுகூட இல்லை இலங்கை யின் தமிழ் பிரதேசத்திலே. என்ன சாபத்தீடோ காரணம் அறியோம். தென்னிலங்கையிலே, டொக்டர் அமரசேகரா, மஞ்சுஸ்ரீ, பீலிங், டேவிட்பெயின்ரர், கெயிட்போன்ற இன்னும் எத்தனையோ சிறந்த ஓவியர்கள் உலகப் பிரசித்தியோடு வாழ்ந்து வருகின்றார்கள். வடபகுதி யிலும் கிழக்குப் பகுதியிலும் இன் னும் ஓவியத் துறையில் விடிவே ஏற்படுவதாயில்லை. வடபகுதி, கனக சபை என்ற சித்திர வித்தியாதரிச கரைப் பார்த்துவிட்டு, தேவநாய கம் என்ற சித்திர வித்தியாதரிசக ரைப் பார்த்துக்கொண்டிருக்கிறது. கிழக்குமாகாணத்தில் அவர்களது பார்வை படிந்ததே யல்லாமல் அந்த மாகாணத்திற்கு இன்னும் புதிதாகச் சித்திர வித்தியாதரிச கரை அரசாங்கந் தேடிக் கண்டுபிடி யாமல் அவஸ்தைப் படுகிறது. இப்பொழுது முயற்சிகள் நடந்து வருகிறதாம். இந்த நிலைமையில் தமிழர் பிரதேசத்தில் ஓவியக் கலை வளருகிறது ... ... ...!





சங்கத் தமிழ்நூல்களிலே தங்கத் தமிழ் உளமும் வளமும் காணும் எழுத்தாளர் புத்தொளி இக்கட்டுரையிலும் அக்காலப் புவிமன்னர்கட்கும் கவிமன்னர்கட்கும் இருந்த தொடர்புச் சிறப்பை விளக்குகிறார் புறநானூற்றுப் பாடல்கள்மூலம்.

# அறனெனப்பட்டதே அரசாட்சி

புத்தொளி

அரசாட்சி என்பது, குடிகளை ஓர் அரசன் நல்வழி நடத்துவதாகும். ஆட்சி அரசனுக்கன்றிக் குடிகளுக்காகவே. பிறர் இன்ப வாழ்வுக்காகவே அரசன் அதிகாரமுள்ளவனாக விளங்குகிறான். அவன் போர் செய்தலும் புலவர்க்குப் பெரும் பொருள் கொடுத்தலும் பொதுநலத்தின் பொருட்டேயாம்.

உலகில் யாரும் பிறர் உதவியின்றி உயிர் வாழ்தல் அரிது. ஒருவருக்கொருவர் உதவியாக இருக்கும் கூட்டுறவு முறையிலே உலகியற்கை நடைபெறுகின்றது. குடிகள் பகைத்தால் அரசன் ஆட்சி செய்ய இயலாது. ஏழை அழுத கண்ணீர் கூரிய வாளுக்குச் சமமன்றோ? எனவே குடிகளின் நல்வாழ்வும் மேம்பாடுமே அரசனின் நோக்கமாக இருக்கவேண்டும். தம்மை மதிப்போர் எளியராயினும் அவர்களை மதித்து அணைத்துக் கொள்ளுதல் அரசர்க்கு இன்றியமையாதது. நடுவு நிலைமையும், அருளெண்ணமும், வீரமும் அன்பும், கொடைப் பண்பும், எதனையும் ஆராய்ந்து செய்தலும் அரசர்க்கிருக்கவேண்டிய பண்புகளாகும்.

ஓர் அரசனின் வெற்றிக்குக் காரணம படை வலிமையன்று. அறவழி நிற்றலேயாகும். அறம் என்பது நடுநிலைமை. அதாவது, நம்மவரென்றும் அயலவரென்றும் பேதம் பாராட்டாது தனது கடமையைக் காத்தலேயாகும்.

இன்றைய உலகம் குழப்பம் நிறைந்த உலகமாக விளங்குகிறது. சுதந்திரம் பெற்ற நாடுகளில் சில்லறைத் தகராறுகள் — இன, மொழிக் கூச்சல்கள்; வல்லரசு நாடுகளில் சகிப்புத் தன்மை குன்றி போர் பயமுறுத்தல் தலைதூக்கியிருக்கின்றது. இந்தநேரத்தில் நம்நாட்டிலும் பெரும்பான்மை சிறுபான்மைச் சுலோகங்கள், மொழி வெறிப் பேச்சுக்கள் தலையெடுத்திருக்கின்றன. அதிகார வெறியும் ஆட்பலமுமே இவற்றிற்குக் காரணம். அறநெறி குன்றி, ஆத்மபலம் புறக்கணிக்கப்பட்டு, அதிகாரவெறி பரவிவரும் இன்றைய உலகின் ஆட்சி முறையையும், சங்ககால அறநெறி ஆட்சி முறையையும் பார்த்தால் மலைக்கும் மடுவுக்குமுள்ள பேதம் காணப்படும்.

சங்ககாலத்தில் அரசர்கள் அறிஞர்களாகச் சான்றோர்களாகவிளங்கினர். புலவர்களாக வாழ்ந்த அவர்கள் அருமையான பாடல்களைப் பாடினர். அக்காலப் புலவர்களுக்கும் அரசனிடம் நல்ல செல்வாக்கிருந்தது. புலவர்கள் சிறந்த கொள்கையும் உயர்ந்த ஒழுக்கமும் உடையவர்களாய் இருந்தார்கள். அரசர்கள் புலவர்களைத் தமது உயிராக மதித்தனர். நீடுகாலம் வாழக்கூடிய சக்தியுள்ள நெல்லிக்கனியை அதியமான் என்ற அரசன் ஔவையாருக்குக் கொடுத்த சம்பவம் பொன்னெழுத்துக்களாற் பொறிக்கப்படவேண்டியதாகும்.

மதுரை மருதனிள நாகனார் என்னும் புலவர் அக்காலத்தில் அரிய புலவராக வாழ்ந்தார். அவர் காலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னன் பெயர் ''பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன்''.

பாண்டிய மன்னனுக்கு அரசியலில் ஏற்படும் மன அலைவுகளைக் கண்டு புலவர் ஆறுதல்கூற எண்ணினார். பெரியோர்களின் அறிவுரைகளைக் கேட்டு நல்வழி நடப்பதே அரசர்களின் பண்பாக இருந்தது. புலவர்களும் நற்போதனைகளைச் செய்து அவர்களையும் நாட்டையும் நல்வழிப்படுத்துவார்கள்.

மதுரை மருதனிளநாகனார் அரசனுக்கு அறிவுரை கூறுகின்றார். ''அழகிய மலர்மாலைகளை அணிந்திருக்கும் மாற! ஓர் அரசனுக்கு நால்வகைப் படைகளும் இருப்பதாக வைத்துக்கொள்வோம். கடுஞ்சினத்தோடு கூடிய கொல்கின்ற யானைகளாகவும், விரைவான ஓட்டமுடைய மனம் செருக்கின குதிரைகளாகவும், நீண்ட கொடியையுடைய உயர்ந்த தேர்களாகவும், அஞ்சா நெஞ்சையுடைய போர்விரும்பும் வீரர்களாகவும் அவை விளங்குவதாக வைத்துக்கொள்வோம். ஆனாலும் அரசாட்சியின் வெற்றி, அறநெறியையே அடிப்டையாகக் கொண்டுள்ளது''.

''அதனால், நம்மவர்களென்று ஒருபக்கமாய்ச் சாய்ந்தும், அயலாரென்று அவர்கள் நற்குணங்களைப் பாராட்டாமலும் நீ இருக்கக் கூடாது. நடுநிலைமை என்னும் அறநெறியை நீ கடைப்பிடித்திருக்க வேண்டும்.

மேலும், வீரங்கொள்ள வேண்டிய இடத்தில் நீ ஞாயிற்றைப் போன்று கொடிய வலிய ஆண்மையுடையவனாக இருக்கவேண்டும். அன்பு காட்டவேண்டிய இடத்தில் நிலாவைப் போலக் குளிர்ச்சியும் மிகு மென்மையுமுடையவனாக

விளங்கவேண்டும். உதவி செய்ய வேண்டிய இடத்தில் மழையைப் போலப் பயன்கருதாமலும் எல்லார்க்கும் ஒப்பவும், தாராளமாகவும் வளங்கும் வள்ளன்மையுடையவனாகவும் இருக்கவேண்டும். இந்த மூன்று குணங்களும் நீ ஒருங்கே உடையவனாக இருந்தால் நினது நாட்டில் செல்வமில்லாதவரே இருக்க மாட்டார்கள். எல்லாரும் நலம் நிறைந்தவர்களாயிருப்பார்கள்.

வேந்து மேம்பட்ட பூந்தார் மாற!
கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய
[கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய
புகல்மறவரும்என
நான்குடன் மாண்ட தாரினும் மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்;
[அதனால்
நமரெனக் கோல் கோடாது
பிறரெனக் குணங் கொல்லாது
ஞாயிற்றன்ன வெந்திறல் ஆண்மையும்
திங்களன்ன தண்பெரும் சாயலும்
வானத்தன்ன வண்மையும் மூன்றும்
உடையையாகி இல்லோர் கையற
நீநீடு வாழிய, நெடுந்தகை!

நெய்தலங் கானல் என்பது ஓர் ஊர். "சோழன் இளஞ்சேட் சென்னி" என்னும் அரசனுக்கு அந்த ஊர் உரியது. ஒருநாள் ஊன் பொதி பசுங்குடையார் என்னும் புலவர்பிரான் அவனிடம் சென்றார். அரசனின் குணநலன்களை எடுத்துப் பாராட்டி அவனோடு அளவளாவி மகிழவேண்டுமென்று அவருக்கு விருப்பமேற்பட்டது.

"பெருமானே! உன் நினைவின் வழியே நடந்துகொள்கின்றவர்களை நீ விரைவாய்த் தெரிந்து அணைத்துக்கொள்கிறாய். பிறரிடமுள்ள குற்றங்களை மட்டும் பிரித்தெடுத்துச் சொல்லுகின்றவர்களின் சொற்களில் நீ நம்பிக்கை வைப்பதில்லை. நீ ஆராய்ந்து தீர்மானித்தபடி ஒருவன் குற்றமுடையவனாகக் கண்டால் அதற்குத் தக்கபடி அவனைத் தண்டிக்கிறாய். அவன் தன் தவறை நினைந்து திருந்தித் தக்கவழி நடந்து உன்னை வந்தடைவானானால் நீ அவனிடம் அன்புகாட்டி அருள்கூர்ந்து தண்டனையை நீக்கி விடுகின்றாய்.

வழிபடுவோரை வல்அறி தீயே;
பிறர்பழிகூறுவோர் மொழிதேறலையே;
நீமெய்கண்ட தீமை காணின்
ஒப்பநாடி அத்தக ஒறுத்தி;
வந்துஅடிபொருந்தி முந்தை நிற்பின்
தண்டமும்தணிதிநீ பண்டையின்
[பெரிதே;

இத்தகைய அரியபெரிய நல்லியல்புகள் அரசனிடமிருந்தால் குடிகள் மகிழ்ச்சியடைவர். கொள்கை தவறாத ஆட்சி கோல் கோடாத ஆட்சியின் பயனால்தான் தானும் அறவாழ்வு வாழ்ந்து குடிகளையும் அறவாழ்வில் ஈடுபடுத்துவான். அரசன் எவ்வழி குடிகளும் அவ்வழியல்லவா?

அன்றைய மக்கள் தலைவர்களாக மிளிர்ந்த மன்னரின் மாட்சியை இன்றைய மக்கள் தலைவர்களாக விளங்கும் பாராளுமன்ற உறுப்பினர் — அமைச்சர்கள், நன்குணர்ந்து குடிகளின் மிடிமை போக்கி ஒருசாராரை அடிமைகளென எண்ணும் மடைமைசாடி யாவரும் போற்றும் அறவழியில் செல்வார்களாக!



வழி தெரியவில்லையே?

தேசியசேமிப்பு
சூதாடல்
வீண் தமாஷ்
மது பானம்

நல்வழி

தேசிய சேமிப்பே



அந்த எழில் ரோஜாவை முள்ளில் கிடத்திவிட்டு மூலையில் தூங்க அவளுக்கு என்ன துணிவு? கவிஞன் கிள்ளி எழுப்புகிறான். துள்ளியெழுந்தவள் சொல்லும் விளக்கத்தை நயமாகச் சொல்லுகிறார் கிழக்கிலங்கைக் கவிஞர் "நீலாவணன்"!



## பனித் துளி

நீலாவணன்

கள்ளும் கசந்திடச் சொல்லும் மழலையின்
காவியத் தேன் சுவையை — எழில்
ஓவியத் தா மரையை — ரோஜா
முள்ளில் கிடத்தியே உள்ளந் துணிந்திவள்
மூலையில் தூங்குவதா? — மகள்
காலையில் ஏங்குவதா! — எனத்
துள்ளி எழுந்தொரு கிள்ளு விடுத்தனன்
"கீச்"சென வேஎழுந்தாள் — உயிர்
போச்சென வேவிழுந்தாள்! — அங்கு
பள்ளி அறைதனில் பிள்ளை மொழிவதை
கேட்டபின் தான்சிரித்தாள் — மலர்ச்
சேட்டையென் றேஉரைத்தாள்!

*

சன்னல் அருகினில் வண்ணரோசாச்செடி
பெண்மையும் பூத்திருக்கு — பனிக்
கண்மணி போர்த்திருக்கு!
சின்ன மகளவள் வன்ன முகத்தினில்
சிந்துகண் ணீர்துளியாம் — எனும்
சிந்தனை தான் பிழையாம்! — இந்த
உண்மை உரைத்தனள் என்னவள் செங்கதிர்
ஊற்றிய செவ்வொளியும் — இது
உண்மையென் றேமொழியும் — மகள்
கன்னத்தில் ஒன்றுவைத் தேயந்தக் காட்சியை
கண்டு மிகரசித்தேன் — கவி
ஒன்றை இதோ சமைத்தேன்.



"கலைஞனுக்கு வசதிகளை அளிப்பதுதான் உண்மையான சேவை! பணவசதியில்லையென்று புருக்கூடுகள் கட்டாதீர்" என்று திறந்த வெளிநாடக அரங்கைப்பற்றி சுருக்கமாக அளவுகள் புள்ளிவிபரங்களுடன் விளக்குகிறார் 'தேவன்'.

யாழ்ப்பாணத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் - விஞ்ஞானக் கட்டுரைகள், சிறுகதைகள் தொடர்கதைகள் நாடகங்கள் எழுதுபவர் தேவன் என்று இவரை அறிமுகப்படுத்தவேண்டுமோ தொண்டன் வாசகர்களுக்கு?

# திறந்த வெளியரங்கு

தேவன்—யாழ்ப்பாணம்

நாடகம் புனருத்தாரணம் பெறுகிறது. தேசியக் கலைகள் முக்கியத்துவம் பெறுகின்றன. சனசமூக நிலையங்களுக்கு திறந்த வெளியரங்குகள் தேவைப்படுகின்றன. அவற்றை அமைப்பது எப்படி? வருங்காலத் தேவைகளுக்கு ஏற்றவாறு உருவாக்கவேண்டுமே என்று யோசிப்பவர்களுக்கே இதில் கூறப்படுபவை. பணவசதி யில்லையென்று புருக்கூடுகள் கட்டாதீர். திருத்தியமைக்க வாய்ப்பாக இடம் வைத்துத் திட்டமிடுங்கள்.

தரை ஒரேசீராக இருந்தால், மேடைக்கு முன்னா லிருப்பவர்களுக்கு மட்டும்தான் மேடை 30 அடிக்கு அப்பாலிருப்பவர்களின் கழுத்துக்கு ஆபத்துத்தான். ஆகவே தரை, வேறு தேவைகளுக்கும் உபயோகப்படுத்தப்படாவிட்டால், 10 அடிக்கு ஒரு அடி என்ற ரீதியில் சாய்வாக இருக்க வேண்டும். படிப்படியாக வெட்டியிருப்பதானாலும் சரியே.

மேடையின் முன்புறத்தில் திறந்திருக்கும் பாகம் 24 அடிக்கும் 28 அடிக்கும் இடையில் இருக்க வேண்டும். பக்க வாட்டுக்கு இருக்க வசதியிருக்கின்றதே, அங்கிருப்பவர்களும் பார்க்க வசதியாக அகலத்தையும் கூட்டலாமே என்று நினைக்கக்கூடாது. உட்காருகிற இட அகலத்தைக் குறைக்கலாம். மேடையின் முன்புறத்திறந்த பகுதியின் அகலத்தைக் கூட்டக் கூடாது. திறந்த பகுதியின் உயரம் 11 அல்லது 12 அடி போதுமானது. மேடையின் முன்புறத்திலிருந்து பின்புறம் (ஆழம்) 24 அடியிருக்கவேண்டும். 30 அடியிருந்தால் நவீன தந்திரக்காட்சிகளுக்கு வசதியாயிருக்கும். ஆனால் நடிப்புக்குரிய பகுதி 16 அடி மட்டுந்தான்.



மேடை முழுவதன் அகலம், முன்னால் தெரியும் 24 அல்லது 28 அடியை விட, இருபுறமும் எட்டெட்டு அடியாவது இருக்க வேண்டும். இன்னும் கொஞ்சம் கூட்டமுடிந்தால் நன்று. பக்கச் சுவர்களோ சபையின் அகலத்துக்கு நேரே வரவேண்டுமே யன்றி மேடையின் முழு அகலத்துக்குப் பக்கத்தில் சுவரை எழுப்பக்கூடாது.

மேடையின் உயரம் 3 அடி 8 அங்குலம் இருக்கவேண்டும். சபையோருக்கு படி கட்டியிருந்தால் அல்லது சாய்வான தரை (முன் சொன்னபடி)யிருந்தால் 3 அடியே போதுமானது. மேடையைத் தாங்கும் தீராந்திகள் பக்கவாட்டுக்கும் பலகைகள் முன்னிருந்து பின்னுசையும் பொருத்தப்படவேண்டும். நடுமேடையில் 6 அடி நீளம் 3 அடி அகலத்தில் திறக்கக்கூடிய பகுதியிருப்பது நன்று. மேடையின்மீது கட்டாயமாக ஒரு மெல்லிய கம்பளம் விரிக்கப்பட்டிருக்க வேண்டும்.

மேடையின் பின்புறம் உயரமாயும் முன்புறம் பதிவாயும் ஒருபோதும் அமைக்கக்கூடாது. மேடையிலிருந்து கூரை குறைந்தது 19 அல்லது 20 அடி உயரத்திலிருக்க வேண்டும். பின் சுவரில் ஜன்னல் முதலியன ஒன்றுமிருக்கக்கூடாது. அச்சுவர் அழுத்தமானதாயும்வெண்மையாயு மிருக்கவேண்டும்.

மேடையின் பின்புறத்துக்கு வருவதற்குரிய படிகள் மேடைக்கு முன்னால் இருக்கவேகூடாது. இரு பக்கங்களிலும் வேண்டுமானால் இருக்கலாம். கதவுகள் யாவும் அகலமாயிருத்தல் வேண்டும். 3 அடிக்கு குறையக்கூடாது.

இப்படி எவ்வளவோ சொல்லிக் கொண்டே போகலாம். இவ்வளவிருந்தாலே போதாதா? அனுபவத்தையும் கற்றுணர்ந்ததையும் ஆதாரமாகக் கொண்டு இந்த அளவுகள் தரப்பட்டுள்ளன. நாடகக் கலையை வளர்ப்பதென்றால் நடிப்பதற்கு சந்தர்ப்பங்களை உண்டுபண்ணுவதெனப் பலர் நினைக்கிறார்கள். அப்படியல்ல. கலைஞனுக்கு தேவையான வசதிகளை அளிப்பதுதான் உண்மையான ஆக்க சேவை.

## ஒரு தமிழ்ப் பெண்

வண்டிச் சில்லில் தொற்றிக்கொண்ட பல்லிபோல என் துணைவனோடு இன்றுவரை அவரோடு ஒட்டி இவ்வுலகப் பயணத்தை முடித்தேன். அவரது பிணத்தை அடக்க தாழி வனைபவனே! இன்னும் கொஞ்சம் அகலமாக வனைவாயாக; அதனுள் எனக்கும் இடம் வேண்டுமே! —புறநானூற்றிலே

போரில் மாய்ந்த ஒருவனின் மனைவி கூற்று.



"ரேயல் தியேட்டரில் நான்கண்ட கிட்டப்பா இன்றும் என்மனதில் நடித்துக்கொண்டிருக்கிறார்".

"கண்டதும் கேட்டதும்" என்ற முறையிலே அக்கால நாடகக் கலை வளர்ச்சியின் அனுபவங்களை விளக்குகிறார், கலைஞர், உள்ளூராட்சி விசாரணையாளர், சமூகத் தொண்டன் மலர்க்குழு அதிபர் திரு. வி. சி. சண்முகம் அவர்கள்.

# நாடகக் கலை

வி. சி. சண்முகம்

உலக மொழிகள் பலவற்றிற்கு மில்லாத எத்தனையோ சிறப்புக் களைக் கொண்டதாகத் திகழ்கின்றது நம் இன்பத்தமிழ். அச்சிறப்புகளுள் எல்லாம் தலைமை சான்று விளங்குவது இயல், இசை, நாடகம் என்ற முப்பிரிவுகளையும் கொண்டதாய் அது விளங்குதலேயாகும்.

பண்டைத் தமிழர்தம் பண்பு களைப் பாருக்குணர்த்தும் பரிபாடல் என்னும் பழந்தமிழ் நூல் "தெரிமாண் மும்மைத் தமிழ்......" எனத் தெரிவிக்கின்றது.

ஆதியும் அந்தமுமில்லா எம் மிறைவனையே ஆடும்பிரானகக் கண்டு ஆனந்தித்தவர்கள் தமிழர்கள் என்று சொல்லும்போது நாடகக்கலைக்கும் அவர்களுக்குமுள்ள ஈடுபாடு நன்கு துலங்குவதைக் காணலாம். தொன்மை வாய்ந்ததாகத் திகழும் நாடகத்தமிழ் பற்றிய குறிப்புக்கள் போதுமான அளவுக்கு இன்று நமக்குக் கிடைப்பதாயில்லை. என்றாலும் பண்டைய உலக இலக்கியங்களோடு உன்னத நிலையில் நிற்கும் தமிழிலக்கிய, இலக்கண நூல்களிடையே இது

பற்றிய செய்திகள் விரவிக்கிடக்கின்றன.

பழமையும், பெருமையும் மிக்க தமிழ்நாடகக் கலையின் வரலாற்றை நாமறிந்துகொள்வதற்குரியபெருஞ் சாதனமாக இன்று விளங்குவது சிலப்பதிகாரமென்னும் செந்தமிழ்க் காப்பியமேயாகும். இளங்கோவடிகள் இயற்றிய சிலப்பதிகாரமும் சோழர்காலக் கல்வெட்டுக்களும், மற்றும் இலக்கியங்களும்தான் தமிழ் நாடகக்கலை ஏற்றம் பெற்றிலங்கியதென்பதற்கு ஏற்ற சான்றுகளைக் கொண்டதாய் விளங்குகின்றன.

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியமென்னும் பழந்தமிழிலக்கணநூலில் அகத்திணைச் சூத்திரமொன்று "நாடகவழக்கினும் உலகியல் வழக்கினும்" என்றேதொடங்குகிறது. இதிலிருந்து நாடகக்கலை தொல்காப்பியர்காலத்திருந்தே ஏற்றம் பெற்றிருந்ததென்பது நன்கு புலனாகின்றது.

"பாடல் ஓர்ந்தும் நாடகம் நயந்தும்" என்று பட்டினப்பாலையில் வரும் அடிகள் பழந்தமிழ் நாட்டு மக்களுக்கும் நாடகக்கலைக்குமுள்ள தொடர்பினை நன்கு விளக்குகின்றன. முறுவல், சயந்தம், செயிற்றியம், குணநூல், பரதசேனாபதியம், அகத்தியம் முதலிய நாடக இலக்கண நூல்கள் அக்காலத்திலிருந்தன. நாடகக்கலையின் சிறப்பினை அவை நன்குரைத்தன. சிலப்பதிகாரத்தில் நடிப்புக் கலையைப் பற்றியும், நாடக அரங்கமைப்பைப் பற்றியும், காட்சித் திரைகளைப்பற்றியும் அழகாகக் கூறப்படுகிறது. அடியார்க்கு நல்லார் தமது குறிப்பில் நாடகத் தமிழைப்பற்றிக் கூறும் பல நூல்கள் இருந்தன என்றும் அவை அழிந்துவிட்டனவென்றும் கூறுகின்றார். இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் குமரிமுனையை அடுத்து இலெமூரியாக் கண்டம் எனப் பெரியதோர் நிலப்பரப்பு இருந்ததாகவும், அங்கு பாண்டிய மன்னர் சங்கம் நிறுவித் தமிழாராய்ச்சி நடத்தினரெனவும், பெருங் கடல்கோள்களினால் அந்நாடு நகரங்கள் அழிவுற்றபோது நாடக இலக்கண நூல்கள் பல அழிந்துபோய்விட்டனவென்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

இத்தகைய ஆராய்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு நோக்குங்கால் மிகப் பழங் காலந்தொட்டே தமிழில் இலக்கண நூல்கள் பல இருந்தனவென்பதும், அக்கால மக்கள் நாடகத் தமிழில் மிக்க ஈடுபாடுடையராய் நாடகக் கலையைப் போற்றி வளர்த்தனரென்பதும், காலவெள்ளத்தில் அகப்பட்டு நாடகக்கலை இடைக்காலத்தே சிறிது வளர்ச்சி குன்றிற்றென்பதும் புலனாகின்றது. இந்நிலையில் நாடகக்கலையின் இன்றைய நிலை குறித்துச் சிறிது சிந்தித்தல் ஏற்புடைத்தாகும்.

நாடகத்தின் வெற்றியும் தோல்வியும் நடிகர்களிலேயே பெரிதும் தங்கியிருக்கின்றதென்பதை நாமறிவோம். எனவே அக்கால நடிகர்களின் சிறப்பியல்புகளையும், திறமைகளையும் சிறிது நோக்குவாம். அக்காலத்து நடிகர்களிற் பலரும் தங்க



ளுடைய கலைக்கு வேண்டிய கல்வியறிவும், மனோதர்மமும் நிறைந்தவர்களாய்த்திகழ்ந்தார்கள். வெறும் பாடத்தை ஒப்பிக்கும் பள்ளிப்பிள்ளைகளைப்போன்ற நடிகர்களல்ல அவர்கள். இலக்கியங்களை இஷ்டப்படி மாற்றமாட்டார்கள். நாடக மேடையை மக்களுக்கு அறங்களைப்புகட்டி சமுதாயத்தைப் பண்படுத்தும் ஒரு சாதனமாக எண்ணினர். முதலாளியின் விருப்பு வெறுப்புக்கு ஏற்றபடி கதையை மாற்றியும், சுருக்கியும், டைரக்டர்களுடைய விருப்புக்காக நடிப்புகளைச் செய்தும், நாடக லட்சணங்களை அறியாமல் வார்த்தை விளங்காத பாட்டுக்களைப் பாடியும், உணர்ச்சியில்லாத ஓசைகளைக் கிளப்பியும் ஜீவனில்லாமல் ஓடும் பல சினிமாக்களைப் போன்றதல்ல அக்காலத்து நாடகங்கள்.

பேசுவதையும் பாட்டாகவே பேசி, சிரிப்பதையும் பாட்டாகவே சிரித்து, அழுவதையும் பாட்டாகவே அழுது பாவங்கள் அனைத்தையும் பாட்டிலேயே நடிப்புடன் சேர்த்து, பார்ப்பவர்களை அப்படியே பரவசப்படுத்திவிடக்கூடிய அதி அற்புதமான ஒரு முறையினை அக்காலக் கலைஞர்கள் கையாண்டனர்.

உதாரணமாக யாழ்ப்பாணம் றோயல் தியேட்டரில் நான் கண்ட கிட்டப்பா இன்றும் என்மனத்தில் நடித்துக்கொண்டிருக்கிறார். அப்போது கேட்ட பாட்டுக்கள் இன்றும் என் காதுகளில் ஒலித்துக்கொண்டேயிருக்கின்றன. தமிழ் மிகவும் இனிமையான மொழி என்று சொல்லுகிறார்களே! அந்தத் தமிழின் இனிமையைக் கிட்டப்பாவின் பாட்டில்தான் நான் கேட்டேன். சொற்களை முறிக்காமல், சங்கீதம் குறையாமல், பாவம் பழுதுபடாமல் அருமையாகப் பாடுவார். அக்காலக் கலைஞர்களின் திறமைக்கு இவையே மூலகாரணமாகும்.

கண்களைக் குத்திக் காதைத் துளைக்கின்ற பக்கமேளங்கள் அந்தக் காலத்தில் இல்லை. சிற்சில சமயங்களில் வீணை, முகர்சிங், மிருதங்கம், தபேலா, கடம், கஞ்சிரா, தப்பளாக்கட்டை, முதலான பலவிதப் பக்கமேளங்களும் உண்டு. எல்லாம் திரைமறைவில் தானிருக்கும். அழகிய திரைகளும் அப்போதைக்கப்போது தயாராகும். ஒருவருக்கொருவர் போட்டியிட்டுக் கொண்டு தங்கள் திறமையைக் காட்டிய பல சித்திரக் கலைஞர்கள் தமிழ் நாட்டில் தோன்றியது அப்போதுதான். கவிஞர்களும் பாட்டுக்களைப் புனைந்து கொடுப்பர். அப்போதிருந்த நடிகர்களும் சர்வசாதாரணமாக ஆறு கட்டைச் சுதிக்கு விடிய விடியப் பாடுவார்கள். இந்த ஆறுகட்டைச் சுதிக்குப் பக்கவாத்தியங்கள் ஒன்றோடொன்று இசைந்து அவற்றுடன் நடிப்பும், பாட்டும், பாவமும் குறையாமல் நிற்கின்ற நேரத்தில் உண்டாகின்ற உணர்ச்சிகளைத் தற்போதுள்ள நாடகங்களில் காண முடியாது. அந்தக் காலத்து நாடக மேடையின்பாணியே அலாதிதான்.

நாடக மேடையில் பக்கமேளங்களுடன் அந்தக் காலத்தில் நாட

கங்களில் நடிக்கும் நடிகர்களுக்கு எவ்வளவு முக்கியத்துவம் உண்டோ அவ்வளவு பிற்பாட்டுக்காரர்களுக்குமுண்டு. இவர்கள் நடிகர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்களாகவே இருப்பார்கள். இவர்களின் பிற்பாட்டு தேன்மாரியென்றே சொல்லலாம். ஊரடங்கியபின் இவர்களுடைய பிற்பாட்டு ஒருமைல் தூரத்துக்கு மேல் கேட்கும்.

நாடக மேடையில் ஒவ்வொரு நடிகனும் தன்னை மறந்து தன் வேடத்திற்கு ஏற்ற ஆளாக மாறிவிடவேண்டும். அப்போதுதான் அவனிடமிருந்து உணர்ச்சியும், உயிர்த்துடிப்புமுள்ள சிறந்த நடிப்புக் கிளம்பும். மொழிப் புலமை, இசைப்புலமை, நடிப்புத் திறமை ஆகிய மூன்றும் ஒரு நடிகனிடம் காணவேண்டும். முன்பெல்லாம் நடிப்பு நாடகத்தில் மட்டும் காணப்பட்டது. தற்போது வியாபாரிகள், எழுத்தாளர்கள், பேச்சாளர்கள், சீர்திருத்தத் தொண்டர்கள் எல்லாரிடத்தும் நடிப்பைக் காண முடிகிறது. நாட்டில் நிலவும் வறுமை காரணமாகப் பிச்சைக்காரர்கள் பலர் நொண்டி, முடம் போன்று பல்வேறு வேடங்களைத் தாங்கி திறம்பட நடிக்கின்றனர். நாடக மேடையில் நாம் காண்பதை விடப் பல நிகழ்ச்சிகளை நாட்டில் பார்க்க முடிகிறது. ஆனால் அவற்றில் கலையைக் காணமுடியாது.

நாடகக் கலையின் இன்றைய நிலையினை நாமனைவரும் நன்கறிவோம். இந்நிலையில் அதன் வளர்ச்சிக்காக நாம் மேற்கொள்ளவேண்டிய பணிகளை மாத்திரம் இங்கு சுட்டிக் காட்டினால் போதுமென்றே கருதுகிறேன். சமுதாய வாழ்வு வளம்பெறவேண்டுமானால் நாடகக் கலை நமது வாழ்வின் ஒரு முக்கிய அங்கமாக ஆகியே தீரவேண்டும். நாடகங்களைத் தகுந்த முறையில் மேடையிடவும், நடிகர்கள், தயாரிப்பாளர்களைப் பயிற்றுவிக்கவும் நாடகங்களுக்குரிய உபகரணங்களைச் சேகரித்து வைக்கவும், நாடக நூல்கள் கொண்ட நூல்நிலையமொன்று வைத்து நடத்தவும் வல்ல ஒரு தேசிய நாடக ஸ்தாபனமும் மிக அவசியம்.

தமிழ் நாடகம் இன்று விருத்தியடைதற்குப் போதுமான நாடக மேடைகள் இல்லாமையே காரணமாகும். பழைய நாடக மேடைகள் எல்லாம் சலனப் படம் காட்டும் கொட்டகைகளாக மாற்றப்பட்டு விட்டன. ஆங்காங்கு நாடகக்கலை கற்பிக்கப்படுதற்குப் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப்பட வேண்டும். அங்கு பயில்வோரைப் பரீட்சித்து உரிய தராதரப் பத்திரங்கள் வழங்கவேண்டும். சிறந்த நடிகர்களை மேல்நாடுகளுக்கு அனுப்பி அங்குள்ள சிறந்த நடிகர்கள் எப்படி நடிக்கிறார்கள் என்பதைப் பார்த்துக் கற்க வசதியளிக்கவேண்டும்.

மற்ற மொழிகளில் உள்ள நாடகங்களை மொழிபெயர்த்து தமிழில் அரங்கேற்றவேண்டும். ஆடவரும், பெண்டிரும் நாடகமாடுவதை இழிதொழிலாகக் கருதாதிருத்தல் வேண்டும். குடும்பப் பெண்



கள் நாடக மேடைகளில் ஆடும் வழக்கம் பரவவேண்டும். நாடகக் கருத்து அரங்குகள் கூட்டிக் கலை ஞர்களின் கருத்துக்களை அறிய வேண்டும். தேசிய நாடக விழாக்கள் நடத்தித் திறமான நாடகங்கள் ளுக்கும், நடிகர்களுக்கும் பரிசில்க ளும் பாராட்டிதழ்களும் வழங்க வேண்டும்.

மேலே கூறப்பட்ட ஆலோசனைகள் நிறைவேற்றப்பட்டால் நாடகக்கலை மீண்டும் மறுமலர்ச்சி பெறுமென்பது திண்ணம். சனசமூக நிலையங்களும், அறிஞர் பெருமக்களும் இவ்விடயத்தில் ஆர்வம் செலுத்தி ஆவனசெய்வார்களாக.

வாழ்க தமிழ்மொழி!
வளர்க நாடகக்கலை!!





எழுத்தாளர் நாட்டின்உயிர்நாடி என்றும் அவர்களில்தான் ஒருநாட்டின் எல்லாத் துறைகளின் வளர்ச்சியும் தங்கியிருக்கின்ற தென்றும் விளக்குகிறார் உள்ளூராட்சி விசாரணையாளர், அறிஞர் பரஞ்சோதி அவர்கள்.

எழுத்தாளர் பணிகளைக் குறிப்பிட்டுச் சமூகத் தொண்டனின் பெரும்பணியையும் சுட்டிக் காட்டும் இக்கட்டுரை சிந்தித்துச் செயலாற்று தற்குரியது.

# எழுத்தாளர் பணி

சு. பரஞ்சோதி

நமது சமாசமானது இன்று கலையின் பல துறைகளிலும் தலையிட்டுழைத்து வருகின்றது. நடனம் நாடகம் நாட்டுப் பாடல்கள், கரகம், கோலாட்டம் காவடியாட்டம், கூட்டுப் பிரார்த்தனை, திருக்குறட்படிப்பு முதலிய பல கலைகள் நாட்டின் நானூறு நிலையங்களிலும் நன்கு வளர்ந்து வருகின்றன. அண்மையில் யாழ்ப்பாண நகரத்தில் நிகழ்ந்த கலைவிழாவில் இக்கலைப் பெருக்கு, நிலையங்களிலிருந்து வெள்ளமாகப் பரந்தது இதற்குச் சான்றாகும். வானொலிமூலமும் இத்திருப்பணி நிகழ்கிறது. இந்தச் சேவைகளைச் செய்யும் சமாசத்தின் திருப்பணிக்குச் சிகரமாக அமைந்தது சமூகத்தொண்டன் இதழ்மூலம் செய்யும் எழுத்துச்சேவை யெனலாம். நாட்டிலே பல எழுத்தாளர்களைச் சமூகத்தொண்டன் ஆக்கி வளர்த்து வருகிறது. தொண்டனிலே முதன்முதல் எழுத ஆரம்பித்த இளம் எழுத்தாளர் பலர் இன்று பிரபல பேனாமன்னர்களாக விளங்குவதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம். இன்றும் அநேக சிறுவர்களும் சிறுமியரும் கூட கதைகள் கட்டுரைகள் கவிதைகள் ஆக்க இது தருணம் கொடுத்து வருகின்றது. இது மிகச் சிறந்த சேவை. ஏனெனில் எழுத்தாளர்களே ஒருநாட்டின் உயிர்நாடி என்னலாம். "வாளிலும் பேனாவலியது" என்று நெப்போலியன் கூறியது இதன் கருத்தைத் தெளிவுபடுத்தும். எழுத்தாளர்களினால் மேல்நாடுகளிற் பல மாற்றங்கள் உண்டாகியிருக்கின்றன. ரூசோ, சாள்ஸ் டிக்கின்ஸ், கால்மாக்ஸ், டால்ஸ்டாய் போன்ற அநேக பேனாமன்னர்களால் ஐரோப்பாவில் பல காரியங்கள் புரட்டப்பட்டிருக்கின்றன. தமிழ்நாட்டிலே பாரதி செய்ததையும் நாம் நினைவுகூரலாம்.



இன்று இலங்கையில் பழையவர்களும் புதியவர்களுமான சுமார் 300 தமிழ் எழுத்தாளர்கள் உளர் என்று கூறப்படுகிறது.

எழுத்தாளர்களை முன்னிறுத்திக்கொண்டு சமூகத்தொண்டன் முதன்முதலாக இம்முறை சிறு கதைப்போட்டி ஒன்றை ஆரம்பித்தது. இதனைப் பல பத்திரிகைகளும் அறிஞர்களும் பலபடப் பாராட்டினர். இது மிகநல்ல பணி. நல்லதரமான கதைகளைப் படைத்துக்கொண்டு எழுத்தாளர் பலர் இப்போட்டியிற் கலந்துகொண்டனர் என அறிகின்றேன். இது போன்ற பணிகள் சில இன்னும் உண்டு. அவைகளுட் சிலவற்றைக் குறிப்பிட விரும்புகின்றேன். யாழ் மத்திய கல்லூரியில் இளம் எழுத்தாளர் சங்கம் என ஒரு சங்கம் அமைக்கப்பட்டு மிக நன்றாக நடத்தப்படுகின்றது. அந்தச் சங்கத்தைப்பல முதிய எழுத்தாளர் ஆதரித்துச் சமூகமளித்து ஆசீர்வதித்து வருகின்றனர். சமூகத்தொண்டனில் தொடர்புடையவர்களும் தொடர்பில்லாதவர்களுமான நூற்றுக்கணக்கான எழுத்தாளர்களைத் தேடி அவர்களை ஓரிடத்திலே கூட்டி ஓர் எழுத்தாளர் மாநாடு நடத்தவேண்டியதும் மிக அவசியமாகும். இளைய எழுத்தாளர்களுக்கு ஒருமாநாடும் முதிய எழுத்தாளர்களுக்கு வேறொரு மாநாடும் நடத்தலாம். இவ்வாறு நடத்தும்பொழுது தமிழகத்திலிருந்தேனும் ஈழநாட்டிலிருந்தேனும் எழுத்தாள அறிஞர்கள் சமூகமளித்து சொற்பொழிவாற்றி வழிநடத்தலாம். கலந்துரையாடி எழுத்து முயற்சியிலே ஊக்கப்படுத்தி விடலாம். ஒருவரோடொருவர் கலந்து கொள்ளும்பொழுது பல அறிவுகள் ஆலோசனைகள் பெற்று வளர்ச்சியடையலாம். ஆண்டுதோறும் இம்மாநாட்டை சமூகத்தொண்டன் கூட்டவேண்டும். சமாசம் அதற்கு உதவி செய்யலாம்.

புதிய பிரச்சனைகள் கஷ்டங்களை இந்த மாநாடு தீர்த்துவைக்க உதவும். கலைவிழாக்கள் வைப்பது போல இந்த எழுத்தாளர் விழாக்களையும் அழகுறத் திறம்படப் பயன்பெற நடத்தலாம். இதனை நாட்டின் தேசப்பணியாக ஆரம்பிக்கவேண்டும்.

இன்று நம்நாட்டில் உற்பத்தியாகும் சுதேசப் பொருட்களை உபயோகிக்கக்கூடிய மனநிலை மக்களுக்கு வரவேண்டும். அதனால், தன்மான உணர்ச்சி, தேசியப் பற்று, பொருளாதார வளர்ச்சி, தொழில் முன்னேற்றம் நாட்டில் உண்டாக வழியாகும். சுதேசப் பொருள் ஆதரவினால் வேலையில்லாத் திண்டாட்டம் சூரியனைக் கண்டபனிபோலாகும். தீப்பெட்டி, சுருட்டு, துணிவகை, செருப்புவகை, பனைப் பொருள்கள், முதலிய நூற்றுக்கணக்கான பொருள்களை

நமக்குப் பக்கத்திலே ஏழைத் தொழி
லாளிகள் உண்டாக்கிக் கஷ்டப்பட்
டுக்கொண்டிருக்கும்போது நாம்
அன்னியநாட்டுப் பொருள்களில்
மயங்குவதுதேசத்துரோகம்மாத்திர
மல்லத் தற்கொலைக்கும் ஒப்பாகும்.
சுதேசப் பொருளின் மகத்து
வத்தை மக்களின்மனதில் உறைக்க
உணர்ச்சியுடன் அழுத்தக்கூடிய
வர்கள் எழுத்தாளர்களே ஆவர்.
இதுசம்பந்தமான கட்டுரைகள்
கதைகள் கவிதைகள் பல அடிக்
கடி புள்ளிவிபரங்களுடன், நல்ல
கருத்து அமைவுடன் பிரசுரமாக
வேண்டும். சமூகத் தொண்டன்
இந்த நாட்டுப்பணியைப் பொறுப்பு
எடுக்கவேண்டும்.

அன்றியும் தீண்டாமை மது விலக்கு, சீதனம், முதலிய பல சமூகசேவைத் துறைகளில் மக்களை எழுப்ப ஊக்கமும் உணர்ச்சியும் கொடுக்கக்கூடியவர்கள் இந்த எழுத்தாளர்களே ஆவர். இதனால் தான் எழுத்தாளர்களின் முன்னேற்றத்தில் தொண்டனும் சமாசமும் பெருமுயற்சி எடுக்கவேண்டுமென்று வற்புறுத்தினேன். இக்காலத்தை எழுத்தாளர் யுகமென்று கூறலாம். செயற்கைச் சந்திரனின் முன்னேற்றமளவு எழுத்தாளர்களின்முன்னேற்றமும் துரிதமாக உலகிலே பல மொழிகளிலும் வளர்ந்து வருவதினால்தமிழ்மொழியிலும்சிறப்பாக ஈழநாட்டிலே எழுத்தாளர் முன்னேற்றம்ஓங்கிஉயரவேண்டும்.

○●○

## பால் சுரந்தது

போரில் வீரமரணம் அடைந்த மறவன் ஒருவனது உடலின் உறுப்புக்கள் சிதைந்து சிதறி அவனது பிணம் உருமாறிக் கிடக்கிறது. அவன் கிடந்த நிலையை தாய்வந்து கண்டுமகிழ்ந்து உணர்ச்சி வசப்பட்டாள். அப்பொழுது வாடிக்கிடந்த அவளது முலைகளிலிருந்து பால் ஊறிச் சுரந்தது.

— புறநானூற்றிலே ஒளவையார்





# சிறுகதைப் போட்டிக்குப்
# பரிசில் அளித்தவர்கள்



திரு. கே. வி. தம்பித்துரை
அவர்கள்



திருவாட்டி உருத்திரா கந்தசாமி
அவர்கள்



வைத்திய கலாநிதி
வி. ரி. வேணுண்டோ அவர்கள்

# அன்று ... ... ...

## இலக்கியம் வளர்த்த மன்னர்கள் போல

# ... ... ... இன்றும்

## புலவரைக் காத்த புரவலர் பரம்பரையிலே ...!

### திரு. கே. தம்பித்துரை அவர்கள்

யாழ்ப்பாணம் "கலைவாணி" அச்சகம், புத்தகசாலை அதிபர், பல கலைநூல்களின் பிரசுரகர்த்தா, தமிழ்ப்பேராசிரியர், சமூக சேவையாளர், கலைவளரக் கொடையளிக்கும் பண்பாளர். கலைஞர்களின் அரிய நண்பர்.



### திருவாட்டி உருத்திரா கந்தசாமி அவர்கள்

மாதகல் கிராம முன்னேற்றச் சங்கம், மாதர் சங்கங்களின் தலைவர், பண்டத்தரிப்பு கிராமச்சங்க உபதலைவர், சமாதான நீதவான், கயரோகத் தடைச்சங்கம் ஆதிய பல சபைகளில் உழைக்கும் உயர்ந்த சமூகத்தொண்டர். ஆங்கிலம் தமிழ் அறிவமைந்த ஆசிரியர். சிறந்த சொற்பொழிவாளர்.



### வைத்தியகலாநிதி வி. ரி. வேணுண்டோ அவர்கள்

தந்த வைத்தியம், கண்வைத்தியம் செய்து யாழ்ப்பாணத்திற் புகழ்பெற்ற வைத்தியகலாநிதி, இனிக்கப் பேசும் கலாரசிகர், கலைஞர்களை வரவேற்பதில் மகிழ்பவர். கலைவளர்க்கப் பல பணி புரியும் தமிழ்ப்பண்பாளர்,



# சிறு கதைப் போட்டியின் கதை

தேசிய உணர்ச்சிகளை யடிப்படையாக வைத்து, ஈழத்துக் கலாசார, இலக்கியமரபுகளையொட்டி சிறுகதைகள் சிருட்டிக்கப்பட வேண்டுமென்ற முனைப்பும் முயற்சியும் சிலகாலமாக நமது நாட்டு இலக்கிய வட்டாரத்தில் மிக உத்வேகமாக நடைபெற்று வருகின்றன. இந்த இயக்கத்துக்கு ஆக்க பூர்வமாக உதவும் வகையில் சிறுகதைப் போட்டி ஒன்றுக்கு ஏற்பாடு செய்வதென்ற முடிவுக்கு வந்தோம்.

பல ஆயிரக்கணக்கான இதழ்களை விற்பனையாகக் கொண்டுள்ள பெரிய பத்திரிகைகளே ஒரு இலக்கியப் போட்டியை ஏற்பாடு செய்து, வெற்றிகரமான பயனைக் காண்பதற்குச் சிரமப்படுகிறபோது, 'சமூகத்தொண்டன்' சிறுகதைப் போட்டிக்கு மட்டும் பெரும் ஆதரவு கிடைத்து விடுமா என எல்லாரையும் போலவே நமக்கும் முதலில் சந்தேகம் ஏற்பட்டதுதான்! ஆனால் ... ... ?

யாழ்ப்பாணத்திலிருந்துமட்டுமல்ல மட்டக்களப்பு, மலைநாடு, கொழும்பு மற்றும் இலங்கையில் தமிழ்ப்பேசும் மக்கள் வாழுமிடங்களிலிருந் தெல்லாம் போட்டிக்குக் கதைகள் வந்தன! பல்கலைக்கழகம், மற்றும் கல்லூரிகளிலுள்ள மாணவர்கள் காட்டிய உற்சாகம் மிக அதிகம் நாம் கொடுத்த குறுகிய தவணைக்குள் கதைகளை எழுதி — இளம் எழுத்தாளர்கள் மட்டுமல்ல, — இலங்கையிலுள்ள பல பிரபல எழுத்தாளர்களும் ஆர்வமுடன் கலந்துகொண்டு தமது படைப்புகளை அனுப்பினர்கள்.

ஈழத்து இலக்கிய உலகின் விழிப்புக் கண்டு பூரிக்கிறேம்! நிற்க.

வந்த கதைகளுள் தரத்தைக்கணித்து 30 சிறுகதைகள் ஆரம்ப பரிசீலனையின் போது தெரிவுசெய்யப்பட்டன. இந்தக் கதைகளை நீதிபதிகள் நுணுக்கமாகப் படித்து 10 கதைகளைத் தேர்ந்தெடுத்தார்கள். பின் இந்தப் பத்துக்கதைகளும் மத்தியஸ்தர்களால் மிகக் கவனமாகப் படித்துப் பரிசீலிக்கப்பட்டு ஒவ்வொரு கதைக்கும் தனித்தனியே புள்ளிகள் கொடுக்கப்பட்டன. முதல் இரண்டு கதைகளையும் தெரிவுசெய்வதில் சில நீதிபதிகள் ஏகோபித்த தீர்ப்பை அளித்தனர் என்பதை இங்கு குறிப்பிட வேண்டும். ஆனாலும் இன்னும் ஒன்றையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேம். இந்தப் போட்டிமூலம் மிகச் சிறந்த படைப்புக்கள் தமிழ் இலக்கியத்துக்குக் கிடைத்துவிட்டதாகப் பெருமைப்பட்டுக் கொள்வதற்கில்லை. இது தமிழ் இலக்கிய வளர்ச்சியில் எழுத்தாளர்கள் ஈடுபட ஒரு தூண்டுதலாக இருக்குமென்பதையும், சமூகத் தொண்டன்' நடத்திய முதற் சிறுகதைப் போட்டி என்பதையும், கருத்திற் கொண்டு நாம் அறிவித்தபடி பரிசில்களை வழங்குகிறேம். தமிழிலக்கியத்தில் அமர இலக்கியங்கள் தோன்றவேண்டும் என்ற ஆர்வத்தால் ஆண்டுதோறும் இந்தப் போட்டியை நடத்த இருக்கிறேம் என்ற நல்ல செய்தியையும் இங்கு சொல்லிவைக்கிறேம்.

**பரிசு விபரம்**

1-ம் பரிசு (100 ரூபா)

"இலவுகாத்த கிளி"

எழுதியவர்;—**கச்சாயில் இரத்தினம்**

2-ம் பரிசு (60 ரூபா)
"வேலி"
எழுதியவர்:—**இ. நாகராசன்**

3-ம் பரிசு (30 ரூபா)
'மனம்'
எழுதியவர்:—**திரு. சிறீஸ்கந்தராசா**

முதலிடம்பெற்ற சிறுகதை இந்த மலரில் வெளியாகியுள்ளது. 2-ஆம் 3 ஆம் பரிசு பெற்ற கதைகளும் தரமான ஏனைய கதைகளும் 'சமூகத் தொண்டன்' மாத இதழ்களில் இடம்பெறும். சமாச ஆண்டுவிழாவிற் பரிசுகள் வழங்கப்படும். பரிசு பெற்ற எழுத்தாளர்களுக்கு நமது நல்வாழ்த்துக்கள்; போட்டியில் கலந்துகொண்ட எல்லோருக்கும் நமது நன்றி.

அடுத்ததாக சிறுகதைப் போட்டிக்குத் திட்டமிட்டபோது இலக்கிய ஆர்வத்தை மட்டுமே மூலதனமாக வைத்திருந்தோம். போட்டிபற்றிய விபரங்களை அறிவித்த பின்பே பரிசுகள் பெறும் வழிபற்றிச் சிந்தித்தோம்! பாரி, பேகன், குமணன் முதலியோரை மூதாதையராகக் கொண்ட தமிழினத்தில் பரிசளிக்கப் பெருந்தகைகள் கிடைக்காமலா போய்விடும்? — பெருமக்களும் கேட்பதற்கு முன்பே நமது திட்டத்தைக் கேட்டு, தட்டிக்கொடுத்ததோடு பரிசுப்பணமும் உவந்தளித்தனர். இந்த வள்ளல்களுக்கு தமிழ் இலக்கிய உலகமும் சமூகத்தொண்டனும் என்றும் கடமைப்பட்டுள்ளன.

**பரிசு உபகரித்தோர்**

முதலாம் பரிசு (100 ரூபா) உபகரித்தவர்;
திரு. கே. வி. தம்பித்துரை அவர்கள் கலைவாணி நிலைய அதிபர் யாழ்ப்பாணம்.

இரண்டாம் பரிசு (60 ரூபா) உபகரித்தவர்:
திருவாட்டி உருத்திரா கந்தசாமி அவர்கள் கிராம முன்னேற்றச் சங்கத் தலைவர், கிராமச்சங்க உபதலைவர்.

மூன்றும் பரிசு (30 ரூபா) உபகரித்தவர்:
தந்தவைத்திய கலாநிதி வி. ர். வேணுண்டோ அவர்கள், யாழ்ப்பாணம்

இந்தச் சிறுகதைப் போட்டிக்கு கீழ்க் கண்டவர்கள், பல வேலை நோக்கடிகளுக்கிடையே சிரமத்தைப் பாராது, பொறுமையோடு கதைகளைப் படித்து பரிசீலித்து மத்தியஸ்தர்களாகக் கடமையாற்றினர்

1 திரு. க. கைலாசபதி, ஆசிரியர், தினகரன்',

2 திரு. தி. ச. வரதராசன் ('வரதர்').

3 திரு. நா. சோமகாந்தன் ('ஈழத்துச் சோமு').

4 திரு. வ. அ. இராசரத்தினம்.

5 திரு. என். கே. ரகுநாதன்.

இவர்களுக்கும், நமது சிறுகதைப் போட்டி பற்றிய செய்திகளை வெளியிட்டு ஒத்துழைத்த சகோதரப் பத்திரிகைகளுக்கும்—சிறப்பாக 'தினகரனு'க்கு —'சமூகத்தொண்டன்' தனது இதயம் கனிந்த நன்றியைத் தெரிவிக்கிறான்.

'சமூகத் தொண்டன்'' முதற் சிறுகதைப்போட்டி வெற்றிகரமாக நிறைவேற ஒத்தாசை புரிந்த அத்தனை சக்திகளுக்கும் குறிப்பாக நமது மாவட்ட சனசமூக நிலையங்களின் சமாசத்துக்கும் மீண்டும் ஒரு முறை நன்றி தெரிவித்து சமூகத்தொண்டனின் எதிர்கால இலக்கியத் திட்டங்களிலும் அனைவரும் ஒத்துழைக்கவேண்டு மெனவும் கேட்டுக்கொள்கிறோம். வணக்கம்.





சமூகசேவி வெள்ளிவிழா மலர்

## பொலநறுவைச் சிவாலயம்

ஈழத்தை அடிப்படுத்திய இராசேந்திர சோழனால் தன் அன்னை "வானவன் மாதேவி"யின் பெயரிலே அன்றைய தலைநகரான ஜனநாதபுரத்தில் இச் சிவாலயம் கட்டுவிக்கப்பட்டது. இதனைப் பிற்காலச் சிங்கள அரசர்கள் பேணிக்காத்தமையினால் இது பண்டைய சிங்களப் பண்பின் சின்னமாயும் நிற்கிறது.

“நான் ஒருபாவி. இலவுகாத்த கிளியடா நான் என்கிருள் அக்கா. எனக்கு அக்கா சொன்னது ஒண்டும் புடிபடவில்லை'' என்று சிறுவன் இராசாவின் மழலைமொழியிலே காதற்கதை ஒன்றை சோகச்சுவை ததும்பப் பின்னுகிருர் கச்சாயில் இரத்தினம்.

தொண்டன் சிறுகதைப் போட்டியில் முதற்பரிசு பெற்ற கதை இது சிறுகதைகள் தொடர் கதைகள் வானெலி நாடகங்கள் எழுதும் மலைநாட்டு எழுத்தாளர் இரத்தினம் சமூகத் தொண்டன் வாசகர்களுக்குப் புதியவரல்லர் அவருக்கு நம் நல்வாழ்த்துக்கள்.



# “இலவு காத்த கிளி”

‘‘கச்சாயில் இரத்தினம்’’

“இராசா, இராசா'' என்டு என்னை என் அக்கா கூப்பிட்டா எனக்கு எண்டால் போல்லாத கோபம் வந்தது. இந்த அக்கா எப்பொழுதும் இப்பிடிததான். பள்ளிக்குப்போனல் அங்க கோஞ்சநேரம் போன்னனேடே சேர்ந்து விளையாடக்கூட விடமாட்டா, வீட்டுக்கு வந்தாலும் அப்பிடித்தான். என்னைக் கூப்பிட்டுத் திண்ணைக்குந்தில் இருந்து ஆனா, ஆவன்னா வைச் சிலேற்றிலே ஒயமல் எழுதிக்கோண்டே இருக்கச் சோல்லுவா. நான் என்ன மரமோ! தடியோ? எனக்கு நெடுக எழுதக் கை உளையாதே! என்ரை அக்கா கூடாத அக்கா,

“டேய் இராசா, இராசா, கூப்பிட்டால் நீ வரமாட்டாய்! இரு உனக்கு நான் செய்யிறன் வேலை'', மீண்டும் இது அக்காவினுடைய அதட்டற்குரல்.

எனக்குத் தெரியும் இண்டைக்கு நான் வீட்டை போனதும் அக்கா நல்ல வடிவாய்க் கைவியளம் தருவா எண்டு.

நான் பயந்துகோண்டு மெதுவாய்ப் பதுங்கிப் பதுங்கி வீட்டிற்கு வந்தேன், நான வந்ததை அக்கா கண்டிட்டா. ‘டேய்! இராசா உனக்கு நான் என்னடா செய்யச்சோன்னனான். நீ எங்கையடா போனநீ. அம்மாவிடம் சோல்லட்டுமா?'' எண்டு அக்கா என்னைப் பயமுறத்தினு. அக்கா அம்மாவிடம் சொன்னு எண்டால் போதும். பேந்து அம்மா என்ரை முதுகுத் தோலை உரிச்சுப்போடுவா. நான் நல்லாய்ப் பயந்துபோனேன். ‘‘அக்கா, நீ என்ரை அருமை அக்கா எல்லே! இண்டைக்குமட்டும் இதை அம்மாவிடம் சோல்லாதே நான் நீ சோனனபடி செய்கிறேன்'' எண்டு அக்காவின்ரை நாடியைத் தடவினேன்.

நான் கூப்பிடக் கூப்பிட நீ பேசாமல் இவ்வளவு நேரமும் எங்கை போனநீ.''

‘அக்கா, எங்களின்ரை எதிர்வீட்டுக்கு ஆரோ தெரியாது. பதுப்புது ஆட்களாய் வந்து இருக்கினம். ஒரு மாமா, ஒரு மாமி,

அவைக்கு ஒரு பெரிய அண்ணையும் இருக்கு. அவை ஒரு நல்ல வடிவான காரும் வைச்சிருக்கினம்.''

''போதும், உனக்கு உந்த மணிய வேலை எல்லாம் தேவையில்லை. யாராவது வந்திட்டுப் போகட்டும். நீ பேய்ப்படி'' — இது அக்கா எனக்கு இட்ட கட்டளை.

நான் மெதுவாக விறுந்தைக்குப்போய் என்ரை சிலேற்றை எடுத்து வைத்துக் கொண்டு ஆனா. ஆனா ஆனா எண்டு பெலத்துச் சத்தம் வைத்து எழுதிக் கொண்டே இருந்தேன். அக்கா குசினிக் குப் போய்விட்டா.

எனக்கு எண்டால் வாய் ஆனா, ஆனா எண்டு சொன்னாலும் மனம் கேட்க வில்லை. எப்படி எண்டாலும் அந்தக் காரைப் போய்ப் பாக்கவேணும் எண்டு மனம் சொல்லிச்சுது.

மெல்ல எழுந்துபோய்க் கதவு இடுக் கிலே அக்கா குசினியில் என்ன செய்கிறா எண்டு எட்டிப்பாத்தேன். அவ வெங்காயம் மிளகாய் அரிஞ்சுகொண்டு இருந்தா. நான் மெதுவும் அந்தக் காரைப் பாக்க ஓடிப்போனேன்

என்னைக் கண்டதும் அந்த வீட்டுக்கு வந்து இருக்காரே ஒரு அண்ணை. அவர் 'இந்தா தம்பி'', எண்டு ஒரு டைக்கற் சொக்கிளற்றை எனக்கு நீட்டினார். எனக்கு அதை வாங்க வெட்கம், நான் பேசாமல் பாத்துக்கொண்டு நின்றேன் அந்த மாமி என்னைப் பாத்துத் 'தம்பி, பெரிய மனுசர் தாறதை வேண்டவேணும், பேசாமல் நிற் கக்கூடாது வேண்டு அதை எண்டா''.

அவவைப்போலேதான் எனக்கு எல் லாரும் சொல்லுவினம். ''ஆர் எண்டாலும் வயதுக்கு மூத்தவை தந்தால் வேண்டாம் எண்டு சொல்லக்கூடாது. இரண்டு கையை யும் நீட்டி வாங்கிக்கொண்டு மெத்தப்பெரிய உபகாரம் எண்டு சொல்லவேணுமெண்டு''

நான் அதை வேண்டிக்கொண்டு ''மெத்தப்பெரிய உபகாரம்'' எண்டேன்

''எட! உன்னைப் பார்த்தால் ஒரு விழுக்காய் இருக்கிறாய்! உனக்கு நன்றி கூற வும் தெரியுமா? எண்டார் அந்த அண்ணை. எனக்கு வெட்கம் வந்துட்டுது. மெதுவாய் அந்த இடத்தை விட்டு நழுவி எங்கள் வீட் டுக்கு வந்தேன்.

நான் வந்ததை அக்கா கண்டிட்டா. ''இராசா, நான் உன்னட்டை என்னடா சொன்னனான். நீ என்ரை சொல்லைக் கேட்கமாட்டாயோ!'' எண்டு கோபத் தோடே கேட்டா,

எனக்கு எண்டால் சரியான பயம் வந்துட்டுது. ''என்ரை அக்கா எல்லே! இந்த ஒருமுறை மட்டும் என்னை ஒண்டும் செய்யாதே! இனிமேல் நான் உன்ரை சொல்லைக் கேட்காதுபோனால் நீ என்னை நல்ல வடிவாய் அடி'' எண்டேன்.

என்ரை சட்டைப் பொக்கற்றில் இருந்த சொக்கிளேற் பைக்கற்றை அக்கா கண்டிட்டா. இராசா, உன்ரை சட்டைப் பொக்கற்றிலே கிடக்கிறது என்னடா? எண்டு கேட்டா.

''சொக்கிளேற். புதுவீட்டு அண்ணை தந்தார். அவர் நல்ல அண்ணை எண்டேன்

அக்காவின்ரை முகம் சிவந்து விட் டது. ''டேய்! உன்னை யாரடா கண்டவை. நிண்டவை எல்லாரிடமும் சொக்கிளேற் வாங்கச் சொன்னது. இரு! இண்டைக்குத் அம்மாவிடமும் அப்பாவிடமும் சொல்லி



உனக்கு அடிவாங்கி வைக்காது போனால் என்ரைபேர் நவமலர் அல்ல'' எண்டா,

எனக்கு எண்டால் பயத்திலே மேல் கால் எல்லாம் நடுங்கத் தொடங்கியது. 'அக்கா! நீ என்ரை ஆசைஅக்கா எல்லே! இண்டைக்கு மட்டும் சொல்லாதே! இனி மேல் நான் எவரிட்டையும் வாங்கமாட் டேன்'' எண்டு அக்காவின்ரை அரையைக் கட்டிப்பிடிச்சுக் கெஞ்சினேன்.

சரி, இனிமேல் உப்பிடி எவரிடமும் எதையும் வேண்டாதே! போய்ப் படி எண்டா. நான் ஒருவிதமாய்த் தப்பி விட் டேன். ஓடிப்போய்ப் படிக்கத் துவங்கி னேன். எப்பிடி எண்டாலும் என்ரை அக்கா நல்லவ,

x x x x x

நானும் அக்காவும் பள்ளிக்குப் படிக் கப்போனோம். அங்கே எனக்குச் சொக்கி ளற் தந்தாரே அண்ணை! அந்த அண்ணையும் எங்களின்ரை பள்ளியில் படிக்கிறதுக்கு வந்து இருந்தார். அவர் பெரிய ஆள். அக்காவின்ரை வகுப்பிலேதான் அவரும் படிப்பார் எண்டு நான் நினைச்சன், நான் நினைச்சது சரி. அவரும் அக்காவின்ரை வகுப்பிலே எஸ். எஸ். ஸி. யில்தான் படிச் சார். என்னைக் கண்டதும் அவர் சிரிச்சார். நானும் சிரிச்சேன். அக்கா நாங்கள் இர ண்டுபேரும் சிரிச்சதைக் கடைக்கண்ணாலே பாத்தா, அந்த அண்ணை அக்காவைப் பாத்தார், அக்கா உடனே தலையைக் குனிஞ்சிட்டா. அவ அந்த அண்ணையைப் பாத்தால் என்ன! ஏன் அவ அப்பிடிப் பயப்பிடவேணும். அவர் நல்ல அண்ணை எல்லே.

புதுவீட்டு அண்ணை படிக்க வந்ததி லிருந்து அக்கா என்னை அந்த அண்ணை வீட்டுக்குப் போகவேண்டாம் எண்டு மறிக்கிறதில்லை. அக்கா இப்ப நல்ல அக்கா. அண்ணையை மாமா எண்டு சொல்ல வேணும் எண்டு சொல்லித்தந்தா.

நான் பள்ளியாலே வீட்டுக்கு வந்த தும் சாப்பிட்டுவிட்டு முன்வீட்டு மாமா வோடு விளையாடப் போய்விடுவேன். அவர் எனக்கு நல்ல வடிவான படங்கள் எல்லாம் கடதாசியிலே கீறி நல்ல வடிவாய்க் கலர் குடுத்துத் தருவார். மோட்டைச்சயிக்கில் கீறித்தருவார். அவருக்கு என்னில் நல்ல பிரியம். அவருக்குப் பேர் நவரத்தினமாம். அக்காதான் எனக்கு மெல்லமாய்ச் சொன் னவ நல்ல வடிவான பேர்.

அக்கா என்னைத் ''தம்பி இங்கே வா' எண்டு கூப்பிட்டா. நான் ''ஏன் அக்கா என்னைக் கூப்பிட்டாய்'' எண்டு கேட்டுக் கொண்டு ஓடிப்போனேன்.

''தம்பி, இந்தத் துண்டைக் கொண்டு போய்ப் பத்திரமாய் எதிர்வீட்டு மாமாவிடம் குடு, அவர் ஒரு புத்தகம் தருவார், அதை வாங்கிக்கொண்டு ஓடிவா எண்டா.

நான் அக்கா தந்த துண்டைக் கொண்டுபோய் நவம் மாமாவிடம் குடுத் தேன். அவர் துண்டை வாங்கி வாசித்துப் பாத்துவிட்டு இதை யார் தந்தது? எண்டு கேட்டார், நான் அக்கா தந்தவ எண் டேன், உடனே அவர் ஒரு பென்னம் பெரிய இங்கிலீசுப் புத்தகம் ஒண்டை எடுத் துத் தந்தார். எனக்கு அதை ஒருகையில் தூக்க முடியவில்லை. ''ஏன் மாமா? இந்தப் புத்தகத்திலே படங்கள் இல்லையோ?'' எண்டு நான் ஆசையோடு கேட்டேன். அவர் என்னைப் பாத்துச் சிரிச்சுப்போட்டு ''இஞ்சை கொண்டா அந்தப் புத்தகத்தை'' எண்டு கேட்டார். நான் இரண்டு கைகளை யும் நீட்டி அந்தப் புத்தகத்தைக் கொடுத் தேன். ''இங்கே பார் இராசு!'' எண்டு

சொல்லி அவர் அந்தப் புத்தகத்தை விரிச்சுக் காட்டினார். அதிலே நல்ல வடிவான மீன், பாம்பு, நண்டு, நத்தை, குதிரை, ஒட்டகம் எல்லாம இருந்தது. நான் இது நல்ல புத்தகம் மாமா எண்டேன். அவர் என்னைப் பாத்துச் சிரிச்சார். சிரிச்சவர் எதையோ நினைச்சுக்கொண்டு, தம்பி, கொஞ்சம் நில் எண்டு சொல்லிப்போட்டு ஒரு காகிதத்தை எடுத்தார். அதில் அவர் தன்ரை வடிவான பவுண்டன் பேனாவாலே எதையோ எழுதினார், பேந்து அந்தக் காகிதத்தை நல்ல வடிவாய் மடிச்சு "இந்தா! இதையும் உன்ரை அக்கா படிக்கக் குடு" எண்டு சொல்லி என்னிடம் தந்தார்.

நான் அவர் தந்த புத்தகத்தையும் காகிதத்தையும அக்காவிடம் கொண்டுவந்து குடுத்தேன். அக்கா புத்தகத்தை வாங்கி மேசைமீது வைச்சிட்டுக் காகிதத்தை மட்டும் கையோடை எடுத்துக்கொண்டு அறை உள்ளுக்குப் போனா. நான் போய்ச் சைக்கில் ஓட்டி விளையாடினேன்,

"இராசா, இராசா," எண்டு பேந்தும் அக்கா என்னைக் கூப்பிட்டா. நான் ஓடிப் போனேன். "இந்தா, இந்தக் காசிதத்தை நீ புத்தகம வேண்டிக்கொண்டு வந்தியே நவம் மாமா! அவரிடம் ஒருத்தருக்கும காட்டாமல் குடுத்துப்போட்டு வா; நீ நல்ல பிள்ளை எல்லே" எண்டுசொல்லி ஒரு வடிவான காகிதத்தை நல்ல வடிவாய் மடிச்சுத் தந்தா; அதில் கம, கம எண்டு நல்ல வாசம் மணத்தது.

நான் அதைக் கொண்டுபோய் நவம் மாமாவிடம் குடுத்தேன். அவர் அதை வாங்கித் தன்ரை மேசை லாச்சிக்குள்ளே வைச்சுவிட்டு எனக்கு ஒரு கை நிறைய இனிப்புத் தந்தார். நான் அதை வாங்கிக் கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

அதுக்குப்பிறகு அக்கா என்னை ஒரு நாளும் அடிக்கமாட்டா. எதுக்கும் கொஞ்சிக் கொஞ்சித்தான் என்னோடு பேசுவா. நான் எதையும் செய்யமாட்டேன் எண்டு சொன்னால் அவ என்னைப் பாத்து என்ரை தம்பி எல்லே! எண்டு கெஞ்சுவா. அப்ப அவவின்ரை முகம நல்ல வடிவாய் இருக்கும். எனக்கு அக்காவிலே நல்ல விருப்பம். நான் எதைக் கேட்டாலும் இல்லை எண்டு சொல்லாமல் தருவா. வீட்டுப் பாடம் எழுதிக்கொண்டு பள்ளிக்குப் போக வேணும். விளையாட்டுப் பிராக்கில் நான் அதை மறந்துபோய்விடுவேன். மற்றநாட் காலையில் பள்ளிக்குப் புறப்படுகிறபோதுதான் மாஸ்ரர் சொன்னது நினைவுக்குவரும். நான் மாஸ்ரர் அடிப்பார் எண்டு பயந்து அழுவேன், அக்கா 'அழாதே! இங்சே வா. நான் எழுதித் தாறன்' எண்டு சொல்லிச் சிலேற்றிலே என்ரை எழுத்தைப்போலே கிறுக்கிக் கிறுக்கி எழுதித் தருவா. அக்காவுக்கு என்னைப்போலே எழுத எப்பிடித் தெரியும்? அக்கா நல்ல கெட்டிக்காரி.

அக்கா சோதினை பாஸ்பண்ணிப் போட்டா. நவம் மாமாவும் சோதினை பாஸ் பண்ணிப்போட்டு வேறே எங்கேயோ தூரத்துக்குப் படிக்கப் போய்விட்டார். லீவுக்குத்தான் வீட்டுக்கு வருவார், அக்கா பேந்து படிக்கப் போகவில்லை. அவவை அப்பா படிச்சது போதும் எண்டு சொல்லி வீட்டிலே மறிச்சுப் போட்டார். அக்கா வீட்டிலேதான் இருந்தா.

நவம் மாமா கொழும்பிலிருந்து லீவுக்கு வீட்டுக்கு வருவார். அவர் வருகிற ஒவ்வொரு முறையும் எனக்குக் கனக்கச் சொக்கிளேற், அப்பிள், முந்திரிகைப்பழம் எல்லாம் வேண்டிக்கொண்டு வந்து தரு-



வார். அக்காவுக்கும் நான் குடுப்பேன், அவ வேண்டமாட்டா. "நீ தின்" என்பா.

அக்கா வீட்டில் ஏதாவது பலகாரம் தேடினால் என்னைக் கூப்பிட்டுத் தம்பி, இதைக்கொண்டுபோய் ஆருக்கும் காட்டாமல் நவம் மாமாவிடம் குடுத்திட்டு வா எண்டு சொல்லித் தருவா. எனக்கு தின்னுகிறதுக்கு வடை, முறுக்கு எண்டு கை நிறையத் தருவா.

ஒரு நாள் நவம் மாமா வீட்டிற்கு இரண்டு கார் நிறைய ஆரோ புது ஆட்கள் எல்லாரும் வந்து இருந்தார்கள், அவை ஒருத்தரையும் எனக்குத் தெரியாது. எங்கையோ அவை தூரத்திலிருந்து வந்து இருக்கவேணும், அவை கொண்டுவந்த கார் இரண்டும் புதுக்கார். நல்ல வடிவான கார். நான் அதைப் பார்த்துக் கொண்டு நிண்டேன். நவம் மாமாவின் கார் கூடாது. அது பழைய ஓட்டைக்கார். றோட்டிலே ஓடினால் குர்! எண்டு பெரிய சத்தம் போட்டுத்தான் ஓடும்,

நவம் மாமா நல்ல வடிவான புதுக் கால்சட்டை சப்பாத்து எல்லாம் போட்டுக்கொண்டிருந்தார் அடிக்கடி அவர் சீப்பாலே தன்ரை தலையைச் சீவி அழகுபாத்தார், அவரின்ரை சுருண்ட தலைமயிரைப் பாக்க எனக்கும் ஆசையாய் இருந்தது,

அம்மா என்னைக் கூப்பிட்டுக் கேட்டது, நான் ஓடிப்போனேன். "அங்கை ஏனடா போனனீ, அவைவீட்டுக்கு யாரோ வந்திருக்கினம், உனக்கு அங்கே என்ன வேலை. நீ அங்கை ஆரும் ஆட்கள் வந்து இருக்கிற நேரத்திலே போகக்கூடாது" எண்டா அம்மா.



அவை ஆர் அம்மா! எண்டு நான் கேட்டேன். "அவை யாரோ? எவையோ! உனக்கு என்னத்துக்கு அது எல்லாம். நீ போய்ப்படி' எண்டு அம்மா கோபத்தோடு என்னைப் பாத்து முழிசினா. நான் பயந்து போனேன். ஓடிப்போய்த் திண்ணைக் குந்தில் இருந்து படிச்சேன்.

x x x x

நான் நல்ல நித்திரை. என்ரை காதுக்கு நல்லவடிவாய் நாகசின்ன ஒலி கேட்டது. நான் கண்ணை முழிச்சேன். எவ்வளவு அழகாய் இருந்தது அந்த நாகசின்னச் சத்தம். அதை அப்படி ஊதுகிறவர் எம்மட்டுக் கெட்டிக்காரராய் இருப்பார். எனக்கும் நாகசின்னம் ஊத ஆசை, அப்பா வாங்கித்தரமாட்டார்.

படுத்துக்கிடக்க எனக்கும் மனம் கேட்கவில்லை. படுக்கையை விட்டு மெல்ல எழுந்து படலைக்கு வந்தேன். எங்கும் பட்டப்பகல்போலே 'லைட்' வெளிச்சம். படலையிலே அப்பாவும் அம்மாவும் புதினம் பாத்துக்கொண்டு நிண்டினம். அம்மா என்னைக் கண்டதும் "இராசா, கொக்கா எங்கையடா? அவள் வரவில்லையா? அவளுக்கு இந்த மேளச்சத்தம்கூட காதுக்குக் கேட்கவில்லையாக்கும். நீ போய் அவளை எழுப்பிக் கூட்டிக் கொண்டு வா! உன்ரை நவம்மாமாவுக்கு இண்டைக்குக் கலியாணமாம்" எண்டா.

எனக்குப் புழுகு தாங்கமுடியவில்லை. நவம் மாமாவின்ரை மாமியைப் பாக்க வேணும் எண்ட ஆசை என்ரை மனத்தை அரித்துக்கொண்டே இருந்தது. படுக்கை அறைக்கு ஓடிப்போனேன். அக்கா, அக்கா எண்டு அக்காவை எழுப்பினேன். அக்கா

பேசாமல் கிடந்தா. கிட்டப் போய்ப் பாத்தேன். அக்கா தலைகணியில் முகத்தைப் புதச்சுக்கொண்டு குப்புறக் கிடந்தா. நான் "அக்கா, அக்கா, சுறுக்கு எழும்பி வா. நவம் மாமாவும் மாமியும் ஊர்வலம் வரப் போகினம்" எண்டேன். அதைக்கேட்டதும் அக்கா விம்மி, விமமி அழத் தொடங்கினு. எனக்கும் அழுகை அழுகையாய் வந்திட்டுது.

அக்கா, உனக்கு என்ன. வயுத்துக்கே குத்துகுதா! எண்டு நான் கெஞ்சிக் கேட்டேன். அக்கா ஒண்டுமே பேசவில்லை. ஒரே அழுகையாய் அழுதா. நானும் சேந்து அழுதேன். கொஞ்சநேரம் இரண்டுபேரும் அழுதோம்.

அம்மா "இராசா! இராசா!! எண்டு என்னைக் கூப்பிட்டா. நான் அக்காவின்ரை கண்ணீரைத் துடைத்து "வா, அக்கா சுறுக்காய் அம்மா கூப்பிடுகிறு" எண்டேன்.

அக்கா, "நான் என்னத்துக்கு இராசா அங்கே வர. நான் ஒரு பாவி. இலவு காத்த கிளியடாநான்" எண்டு விக்கி விக்கி அழுதுகொண்டே சொன்னு. எனக்கு அக்கா சொன்னது ஒண்டும் புடிபடவில்லை.

"என் அக்கா, நீ இலவுகாத்த கிளி எண்டால் நவம் மாமாவையும் மாமியையும் பாக்கக்கூடாதோ?" எண்டேன்.

"ஓ! பாக்கக்கூடாதுதான். நீ போய் அம்மாவிடம் சொல்லு. நான் வரவில்லை எண்டு.".

நான் பேந்து அங்கை நிக்கவில்லை. ஓடிப்போனேன் வாசலுக்கு நவம் மாமாவையும் மாமியையும் பாக்க.

முற்றும்.

★

### தடவும் கைகள்

எனக்கு உணவும் பரிசிலும் தருவதோடமையாது தனது நறுமணம் வீசும் கரத்தால் எண்ணையின்றித் தூசுபடிந்து புலால்மணம் நாறும் என் தலையைத் தடவி மகிழ்வான். புலவர்க்குத் தந்தைபோல் விளங்கிய அதிகமான் அஞ்சியை இனி எங்கு காண்போம்.

—புறநானூற்றிலே ஔவையார்.




# அன்னை சமாசமும்



# அதன் நிலையங்களும்



வடமராட்சி உபசமாச நிருவாகசபை 1960—61.



卐 சமாசத்தைக் கருவாக்கி உருவாக்கி அது தவழ்ந்து நடந்து பருவமெய்தும்வரை — இன்றுவரை தந்தையாய்த் தாயாய் வளர்த்து — இதன் வளர்ச்சிகண்ட மகிழ்வினுல் முதுமையில் இளமை எய்திவரும் முதலியார் தியாகராசா அவர்கள் தாயைப் பேணும் நிலையங்களை வாழ்த்திக் கருத்தமைந்த ஆலோசனைகளும் தருகிருர்.

## சமாசத் தந்தை — அரசவாயில் முதலியார்

# சி. தியாகராசா அவர்களின் செய்தி

**ஆ**ண்டு விழாவைக் கொண்டாட ஆயத்தம செய்யும் யாழ்ப்பாண மாவட்ட சனசமூக நிலையங்களுக்கச் சமாசச் ச ர் பில் ஆசிச்செய்தி அனுப்பக் கிடைத்தது எனக்கு மகிழ்ச்சி. நிலையப்பணிகள் வளர்க!

இலங்கை சுதந்திரமடைந்தபோதிலும் அரசியல் பொருளாதாரம், சமூக உயர்வாகிய பல துறைசளில் இன்னும் முன்னேற வேண்டியிருக்கிறது. நாட்டின் சனசமூக நிலையங்சள் சமூக உயர்வு ஆதிய துறைகளில் நல்லபணி செய்யக்கூடும் என்பது மிகையன்று.

நாட்டின் இன்றைய கல்விமுறை "படித்த பேதையரை" ஆக்கிக்கொண்டிருக்கிறது. இந்நிலை மாறவும் நற்கல்விமுறையில் மக்களை வளர்த்து நல்ல பிரசைகளை ஆக்கவும் நமது நிலையங்கள் இன்னும் அதிகம் பணிபுரியலாம்.

நாட்டின் பிரசைகள் பல வேறுபாடுகளினுல் பிரிந்துபோகாதபடி ஒரே ஐக்கியத்தில் வாழப்பண்ணவும் இத்தகைய பல பிரச்சனைகளை நீக்கித் தப்பபிப்பிராயங்களைப்போக்கி நல்ல சனநாயகத்தை ஆக்கி வளர்க்கவும் நமது நிலையங்சள் பெரும்பணி புரியவேண்டும். எதிர்காலத்தில் இத்தகைய பிறர்சேவையில் நமமை முழுதும அர்ப்பணித்து நாட்டுப் பணியில் முன்னேற நமது நிலையங்கள் பேருதவி செய்வதாக. சேவைப்பணி உயர்க! சனசமூக நிலையங்கள் வாழ்க.

அயோத்தியா, மானிப்பாய். — சி. தியாகராசா



* சமூகத்தொண்டன் திங்கள் தோறும் மலராவும் ஆண்டு மலராக மலரவும் காரணமாக ஓங்கி வளர்ந்துயர்ந்து நின்று நாட்டுக்குக் கலை நிழல் கொடுக்கும் நல்ல மரமாகிய யாழ் மாவட்ட சனசமூக நிலையங்களின் சமாசத்தின் கதையை சுவை ததும்ப எழுதுகிறார் தொண்டனின் துணையாசிரியருள் ஒருவரான எழுத்தாளர் ஆனந்தன்.

# சமாசத்தின் சாதனைகள்

ஆனந்தன்

தனது இலட்சியப் பயணத்தில் பதினொரு ஆண்டுகளைக் கடந்து நிற்கும் யாழ்ப்பாண மாவட்ட சனசமூக நிலையங்களின் சமாசம் இன்று, தான் கடந்து வந்த பாதையை ஒருகணம் திரும்பிப் பார்க்கின்றது. பதினொராவதாண்டின் இறுதிக்கட்டத்திலே சமாசம் தனது பழைமை நிலைமைகளை எண்ணிப் பார்க்கின்றது. பதினொரு ஆண்டுகள்! ஆம். ஒரு தாபனத்தின் வளர்ச்சியைப் பொறுத்தவரை இக்காலத்தை நாம் இலகுவில் மறந்துவிட முடியாது. தேச சேவையே தெய்வத்தொண்டென்ற இலட்சியத்துடன் தன்னை வளம் படுத்த அல்லும் பகலும் அயரா துழைத்தவர்களை, செயல்வீரர்களை, சிந்தனைச் சிற்பிகளை, உறுப்பினர்களை, பெரியோர்களை சமாசம் ஒரு கணம் எண்ணிப்பார்க்கிறது. பெருமைப்படுகிறது!

''பணிபுரி; பலனை எதிர்பாராதே'' என்ற இலட்சிய சேவைக்காகக் காத்து நிற்கும் சமூகத்தைப் பார்க்கிறது. நிலையங்களின் எழுச்சிமிக்க சேவைகளைக் காண்கிறது. பூரிப்படைகிறது!

யாழ்ப்பாண மாவட்டத்தில் எங்கோ மூலைமுடுக்குகளில் ஒருசில சனசமூக நிலையங்கள் இயங்கிக் கொண்டிருந்த காலமது. கலாச்சாரப் பணி புரியவேண்டும் என்ற ஆர்வத்துடன் உருவாக்கப்பட்டுக் காலவெள்ளத்தின் தாக்குதல்களுக்கிலக்காகி நிலையங்கள் நிலைகுலைந்து நின்றவேளையது. 1949-ம் ஆண்டு யாழ்ப்பாண மாவட்டத்தில் உயிர் ஊசலாடிக்கொண்டிருந்த நிலையங்களுக்குப் புத்துயிரளிக்கப்பட்டது. எங்கும் புதியதோர் விழிப்புணர்ச்சி உருவாயிற்று. கிராமங்கள்தோறும் நாட்டின் மூலைமுடுக்குகளெங்கும் சனசமூக நிலையங்கள் பற்றிய பேச்சே அடிபட்டது. இருந்தாற்போலிருந்து கிராம மக்கள் எல்லாம் சனசமூக நிலையங்கள் வேண்டுமென்ற புதிய குரலை ஒலிக்கிறார்களே என்று எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். அந்தப் பேராச்சரியத்தை மக்களிடையே ஊட்டுவதற்கு வித்திட்ட பெருமை நமது சமாசத் தந்தை, இராசவாசல் முதலியார் திரு. சி. தியாகராசா அவர்களுக்கே உரியது. மானிப்பாயில் அவர் தாபித்த சனசமூக நிலையம்தான் இத்துறையில் கிராம மக்களுக்கு மாத்திரமன்றி, நகர மக்களுக்கும் வழிகாட்டிற்றென்று கூறின் அது மிகையல்ல. இவ்வாறு நாளடைவில் யாழ்ப்பாண மாவட்டத்தின் நாலாதிக்குகளிலும் முளைத்தெழுந்த நிலையங்களுக்கு நீர்ப்பாய்ச்சி அவற்றை நிலைபெறச் செய்யும் பெரும் பணியினை ஆற்றுவதற்கு அவையனைத்தையும் அடக்கிய சமாசமொன்று அமைக்கப்பட வேண்டும் என்ற எண்ணம் சேவைமனப்பான்மை படைத்த சிந்தனைச் செல்வர்களின் மனதில் உதித்தது. உள்ளங்களில் உருவாய எண்ணம் வெகுவிரைவில் செயலாகப் பரிணமித்து, சமாசம் பிறந்தது. கடந்த பதினொரு ஆண்டுகளாக கலை, கலாச்சாரத் துறையில் மாத்திரமன்றிச் சமுதாய முன்னேற்றத்திற்கான சகல துறைகளிலும் மக்களை யீடுபடுத்தும் மகத்தான கருவியாக சமாசம் விளங்கிவந்துள்ளது — வருகின்றது. காலத்திற்குக்காலம் நிலையங்களுக்கு ஊக்கமளித்து, முன்னேற்றப் பாதையில் அவற்றை விரைந்து செல்லத் தூண்டும் பணியினைச் சமாசம் செய்து வருகின்றது. எனவே சமாசத்தின் முக்கிய சாதனைகள் சிலவற்றை மாத்திரம் இங்கு குறிப்பிட விரும்புகின்றேன்.



ஒன்றுபடுத்தியது.......!

மூலைக்கு மூலை பிரிந்து நின்ற நானூற்றுக்கு மேற்பட்ட சனசமூக நிலையங்களனைத்தையும் ஒன்றுசேர்த்து ஒரே அணியின் கீழ் கொண்டு வருவதென்பது இலகுவான காரியமல்ல. இந்த இருபதாம் நூற்றாண்டில் இத்தகைய பணியிலீடுபடுவதொன்றே மகத்தான சாதனையாகக் கருதப்படுகிறது. யாழ்ப்பாண மாவட்டத்தின் நாலா திக்குகளிலுமுள்ள சனசமூக நிலையங்களனைத்தையும் ஒன்றுசேர்த்துச் சமாசத்தினது உறுப்பினராக்கிய மாபெரும் சாதனையை நமது சமாசம் சாதித்துள்ளது.

ஏதோ பெயரளவில் இயங்கிக் கொண்டிருக்கும் ஒருசில நிறுவனங்களைப் போலன்றிக் காலத்துக்குக் காலம் நிலையங்களைச் செயலாற்றத் தூண்டும் பணியில், அவற்றிற்கு உயிரூட்டும் முயற்சியில் நமது சமாசம் தீவிர கவனம் செலுத்தி வருகின்றது. அரைகுறை உயிரில் ஊசலாடிக்கொண்டிருக்கும் நிலையங்களைத் தட்டியெழுப்பிச் சேவையாற்ற ஊக்குவிக்கும் தொண்டனாகவும் சமாசம் இன்று விளங்கிவருகின்றது.

சமாசத்தின் ஊக்கத்தாலும், இடைவிடாத தூண்டுதலாலும் உயிர்பெற்ற நிலையங்கள் பல.

இவ்விதழின் பிறிதோரிடத்தில் கூறப்படும் அவற்றின் வரலாறுகளே இதற்குச் சான்று பகருகின்றன. சமாசத்தின் சாதனைகளில் இதுவுமொன்று.

கலைவளர்ச்சியில் … …!

அன்னிய ஆட்சிக் காலத்தில் அயல்மொழி, நாகரிகப் பண்பாடுகளில் நம்மவர்கள் நாட்டம் செலுத்தியதின் பயனாக நமது தேசியக் கலாச்சாரம் கவினிழந்து காணப்பட்டது. சுதந்திரம் பெற்ற பின்னர் "நாமிருக்கும்நாடு நமது" என்ற உணர்ச்சி மக்களிடையே உருவாயபோது அவர்கள் தம் தேசியக்கலை, கலாச்சாரப் பண்பாடுகளைப் போற்றிப் பாதுகாக்கவேண்டியதன் அவசியத்தை உணரத் தொடங்கினர். எனினும் தேசியக் கலை. கலாச்சாரப் பண்பாடுகளைப் போற்றிப் பாதுகாக்கும் பணியில் அவர்களை ஈடுபடுத்துவதற்கு ஏற்ற தாபனங்கள் அக்காலத்தில் நன்கு நிலைகொள்ளவில்லை. இந்நிலையில் கலைவளர்ச்சியில் நாட்டம் செலுத்தும் மக்களை அதற்கானதுறையிலீடுபடுத்தச் சனசமூக நிலையங்கள் கைகொடுத்துதவின. நமது சமாசம் இத்துறையில் நிலையங்களைத் தூண்டி வந்ததன் பயனாகத்தான் இன்று யாழ்ப்பாண மாவட்டமெங்கும் கலைத்துறையில் புதியதோர் மறுமலர்ச்சி உருவாகியுள்ளதென்பதை அனைவருமறிவர்.

அன்னிய ஆட்சிக்காலம் முதல் இன்றுவரை தமிழ் மொழியையும், தேசிய கலாசாரப் பண்பாடுகளையும் போற்றி வளர்த்த பெருமை கிராம மக்களுக்குத்தானுண்டு. அவர்களது இந்த அரிய பணியினை நாம் என்றுமே மறந்துவிட முடியாது. அத்தகைய கிராம மக்களிடையே நிலவிய கிராமிய இலக்கியங்களை மக்கள் மத்தியில் மலரச் செய்யும் பணியில் சனசமூக நிலையங்கள் இன்று நற்பணியாற்றி வருகின்றன. கிராமிய இலக்கியங்களைப் போற்றிப் பேணவும், மறைந்து வரும் நாட்டுப் பாடல்கள், நாட்டுக்கூத்துகள் என்பனவற்றிற்குப் புத்துயிரளிக்கவும் இன்று நிலைபயங்கள் பணியாற்றுகின்றனவென்றால் நமது சமாசம் அளித்த ஊக்கமும், உணர்ச்சியும் தான் அதற்கு மூலகாரணமென்பதை நாம் மறந்துவிடக்கூடாது. கலை, கலாசாரத்துறையில் நமது சமாசம் ஆற்றிய மகத்தான சேவைகளுக்குத் தக்கதோர் எடுத்துக்காட்டாக இது இலங்குகின்றது.

"காவியம் செய்வோம் நல்ல
காடு வளர்ப்போம்
கலை வளர்ப்போம் கொல்லர்
உலை வளர்ப்போம் … "

என்ற அமரகவி பாரதியின் வாக்குக்கிணங்கக் கலைத் துறையில் நமது சமாசம் இன்னும் பல அரிய பணிகளை ஆற்றி வருகின்றது.

சமாச விழாக்கள்!

ஆண்டுதோறும் யாழ்ப்பாண மாவட்டமெங்குமுள்ள சனசமூக நிலையங்களுக்கிடையே இயல், இசை, நாடக, விளையாட்டுத் துறைகளில் போட்டிகளை ஏற்படுத்தி நிலையங்களை அத்துறைகளிலீடுபடச் செய்து அதன்மூலம் பொதுமக்களிடையே இயல், இசை, நாடக விளையாட்டுத் துறைகளில் புதியதோர் விழிப்புணர்ச்சியையும் உத்வேகத்தையும் ஊட்டி வருகின்றது. யாழ்ப்பாண மாவட்டத்தின் பல்வேறு காரியாதிகாரிகளின் பிரிவுகளில் நடைபெறும் உபவிழாக்களும், யாழ் நகரத்திலே நிகழும் சமாச விழாவும் கலை, கலாச்சார விளையாட்டுத் துறைகளில் நமது நிலையங்கள் எந்த அளவில் பணியாற்றுகின்றன வென்பதை எடுத்துக்காட்டுகின்றன. இத்தகைய ஓர் அரிய சந்தர்ப்பத்தை ஏற்படுத்தி ஆண்டுதோறும் நிலையங்களின் சேவைகளையும் கலைத் தொண்டுகளையும் ஒருமுகப்படுத்தி யாவரும் கண்டு களிக்கும் வாய்ப்பினை நமக்களித்து வருகின்ற சமாசத்தை நாம் பாராட்டாமலிருக்க முடியாது.



விளையாட்டுத் துறையில்

தேசிய விளையாட்டுகளுக்குப் புத்துயிரளிக்கும் பணியில் சனசமூக நிலையங்களை நமது சமாசம் ஈடுபடுத்தி வருகின்றது. நமது தேசிய விளையாட்டுக்களை மறந்து அன்னிய விளையாட்டுக்களைப் பயின்று வந்த இளைஞர்களிடையே தேசிய விளையாட்டுக்களைப் பயிலவேண்டுமென்ற உணர்ச்சியை ஊட்டிய பெருமையும் நமது நிலையங்களுக்கே உண்டு. ஆண்டுதோறும் நமது சமாசத்தின் ஆதரவில் நடைபெறும் விளையாட்டுப் போட்டிகள் இதற்கு நல்லதோர் எடுத்துக்காட்டாகும். முழுக்கமுழுக்கத் தேசிய விளையாட்டுக்களுக்குத்தான் இப்போட்டிகளில் முக்கிய இடம் அளிக்கப்பட்டு வருகின்றது, மறைந்துவரும் தேசிய விளையாட்டுக்களுக்கு மறுமலர்ச்சி அளிக்க வேண்டுமென்பதே இதன் காரணமாகும்.

நமது சமாசம் விளையாட்டுத் துறையில் இன்னுமொரு அரிய பணியினைச் செய்து வருகின்றது. பெரும்பாலான கிராமங்களில் பொது விளையாட்டு மைதானங்கள் இல்லாமையால் மக்கள் தம் ஓய்வு நேரங்களில் விளையாட்டுத் துறையில் ஈடுபடமுடியாது கஷ்டமுறுகின்றனர். இக் குறைபாட்டை அகற்றும்பொருட்டுக் கிராமங்கள் தோறும் பொதுவிளையாட்டு மைதானங்களை அமைப்பதற்கு அரசினரிடமிருந்து நிலையங்களுக்கு நிதியுதவி பெற்றுக்கொடுக்கும் முயற்சியில் சமாசம் இப்பொழுது தீவிர கவனஞ் செலுத்தி வருகின்றது. இதன்பயனாகச் சில நிலையங்களுக்கு விளையாட்டு மைதானத்திற்கென விசேட நன்கொடைப் பணமும் கிடைத்துள்ளது. அண்மையில் வட பகுதிக்கு விசயம்செய்த உள்ளூராட்சி அமைச்சர் அவர்களைப் பேட்டிகண்ட நமது சமாசச் செயற்குழுவினர் கிராமங்கள் தோறும் பொதுவிளையாட்டு மைதானங்களை அமைப்பதற்கு நிலையங்களுக்கு விசேட நன்கொடைப்பணம் வழங்க வேண்டுமென வலியுறுத்திக் கேட்டுக்கொண்டமை இங்கு குறிப்பிடத் தக்கது. நமது சமாசம் விளையாட்டுத் துறையிற் செலுத்தும் தீவிர கவனத்திற்கு இது நல்லதோர் எடுத்துக்காட்டாகும்.

நமது நிலையங்களின் விழாக்களிலும் பொதுக் கூட்டங்களிலும் ஒலித்துக்கொண் டிருந்த நாட்டுப் பாடல்களை யெல்லாம் — ஆண்டாண்டு காலமாகக் கிராம மக்களிடையே செவி வழிப்பரவி வந்த கிராமியச் செல்வங்களை யெல்லாம் இலங்கை வானொலியில் ஒலிபரப்ப ஏற்ற வாய்ப்பினை அளித்தபெருமை நமது சமாசத்திற்கே உரியது. நமது நிலையங்களிற் பல இந்த வாய்ப்பினைப் பயன்படுத்தி வானொயில் குரல் கொடுத்த பொழுதெல்லாம் நமது சமாசத்தின் சாதனையினை நினைந்து நினைந்து நாம் பேருவகை கொண்டோம். இத்தகைய ஒலிபரப்பின்மூலம் மறைந்து வரும் நாட்டுப் பாடல்களைப் போற்றிப் பாதுகாக்கவேண்டியதன் அவசியத்தையும் அவற்றின் அருமையையும் மக்கள் உணர வழிபிறக்கிறது. இத்துறையில் மென்மேலும் நமது சமாசம் நிலையங்களுக்கு நல்ல வாய்ப்பினைப் பெற்றுக் கொடுக்கும் என்பது திண்ணம்.

சமூகத்தொண்டன்!

சமாசத்தின் குரலாகவும் சன சமூக நிலையங்களின் அன்புத் தொண்டனாகவும் விளங்கும் "சமூகத்தொண்டன்" குறித்தும் இங்கு குறிப்பிடவேண்டியது மிகவும் அவசியமாகும். கடந்த பத்து ஆண்டுகளாகச் "சமூகத் தொண்டனை" நமது சமாசம் பல்வேறு கஷ்டங்களுக்கிடையே சிறப்புற நடாத்தி வருவதொன்றே அதன் மகத்தான சாதனையாகும். மாதாமாதம் நிலையங்களுக்கு ஏற்ற விடயங்களைத் தாங்கிவரும் "சமூகத் தொண்டன்" ஆண்டுக்கொருமுறை சிறப்பு மலரொன்றையும் நம்கைக்குக்கொண்டு வருகின்றான். ஈழத்தில் எழுத்துத் துறையில் முன்னணியில் நிற்கும் பேனா மன்னர்களுக்கு மாத்திரமன்றிக் கிராமங்கள் தோறும் அரும்பி வரும் இளம் எழுத்தாளர்களைத் தட்டிக் கொடுத்து அவர்களை முன்னணிக்குக் கொணர்ந்து கைதூக்கிவிடும் கைங்கரியத்திலும் நமது தொண்டன் துணைபுரிந்து வருகிறான். தொண்டனின் இம்மகத்தான சேவையினை எழுத்தாளர் உலகு பன்முறையும் பாராட்டிற்று. தமிழகத்து எழுத்தாளப் பெருமக்களும் ஈழநாட்டின் இணையற்ற எழுத்தாளர்களும் இதன் பணியினைப் பாராட்டிய குறிப்புக்கள் பல உண்டு. இத்தகைய நற்புகழ் பெற்ற ஒரு தொண்டனை நமது சமாசம் தொடர்ந்து நடத்தி வருவதொன்றே அதன் சாதனைகளில் மிக முக்கியமான தென்றுகூடக் கூறலாம்.

நூல்நிலையங்கள்!

நாட்டு முன்னேற்றத்திற்கு உயிர்நாடிபோல் துலங்கும் நூல்நிலையங்கள் கிராமங்கள்தோறும் விரிந்த அடிப்படையில் நிறுவப்படவேண்டுமென்ற இலட்சிய தாகத்துடன் நமது சமாசம் அருந்தொண்டாற்றி வருகின்றது. சனசமூக நிலையங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வோர் நூல்நிலையம் அமைக்கப்படவேண்டுமெனச் சமாசம் நிலையங்களுக்கு ஆலோசனை அளித்ததுடன் அதற்கான முயற்சிகளில் நிலையங்களை ஈடுபடுத்தியும் வருகின்றது.



காலத்துக்குக்காலம் நூல்நிலையங்களுக்கு வேண்டிய பிறநாட்டுச் சஞ்சிகைகள், செய்தித்தாள்கள் நூல்கள், படங்கள் ஆகியவற்றை நமது சமாசத்தின் சார்பில் சமாசத் தந்தைஅரசவாயில் முதலியார் திரு. சி. தியாகராசா அவர்கள் வினியோகித்து வருகின்றார்கள். கிராம மக்களின் கல்வி வளர்ச்சிக்கு இது பெருந்துணை புரிந்து வருகின்றதென்றால் அது மிகையல்ல. இது மாத்திரமன்றிக்காலத்துக்குக்காலம் இலங்கையிலுள்ள வெளிநாட்டுத் தூதுவராலயங்களின் தகவற் பகுதியினைச் சேர்ந்த திரைப்படப் பிரிவினரை அழைத்து நிலையங்களில் இலவசமாகத் திரைப் படங்களைக் காண்பிக்கவும் அவர் கடந்த பல வருட காலமாக ஏற்பாடு செய்து வருகின்றார். இத்தகைய அரிய பணியினை ஆற்றிவரும் திரு. தியாகராசா அவர்களின் பொதுநல மனப்பான்மையை எவரும் போற்றாமலிருக்கமுடியாது.

சமாசத்தின் சாதனைகளில் ஒரு சிலவற்றையே இங்கு எடுத்துக் காட்டியுள்ளேன். சமாசம் ஆற்றி வரும் சேவைகள்பற்பல. அவற்றை விரிக்கிற் பெருகுமென்றஞ்சி விடுக்கின்றேன். கடந்த பதினொரு ஆண்டுகளாகச் சமாசத்தைக் கட்டிக் காத்து வளர்த்த பல பெருந்தகைகளுக்கும் உத்தியோகத்தர்களுக்கும் உள்ளூராட்சி ஆணையாளர்கள் உள்ளூராட்சி விசாரணையாளர்களுக்கும் நன்றி செலுத்தும் இவ்வேளையில் முகாந்திரம் இ. பி. இராசையா அவர்களும் முதலியார் வை. மகேசன் அவர்களும் சுமார் 10 வருடம் செயலாளராகவும் பொருளாளராகவும் இருந்து பணியாற்றிய பெருமையையும் சுட்டிக் காட்டாது இதனை முடிக்க இயலாது. சமாசத்தின் மூளையெனப் பெயர்பெற்றிலங்கிய முகாந்திரம் இராசையா அவர்களும் பணத்தின் நிதானமான பாதுகாவலராக இருந்த முதலியார் மகேசன் அவர்களும் சமாசத் தந்தையின் இருகரங்களாக இருகண்களாக விளங்கினர் என்று கூற வேண்டும். இன்றும் இவர்கள் உபதலைவர்களாக இருக்கின்றமை சமாசத்துக்குப் பெரும்பேறாகும். உள்ளூராட்சி விசாரணையாளராய் நாட்டிலே நற்சேவை செய்து சமூகத் தொண்டன் மலர்க் குழுவுக்கும் அதிபராய், சமாசத்தின் நண்பராய் அன்புப்பணி செய்து அண்மையில் வவனியா மாவட்டத்துக்கு மாறிச் சென்ற திரு வி சி. சண்முகம் அவர்கட்கும் நமது சமாசம் மிகக் கடப்பாடும் நன்றியுமுடையதாயிருக்கின்றதென்பதையும் இங்கு குறிப்பிட வேண்டியது.

யாழ்ப்பாண மாவட்ட சனசமூக நிலையங்களின் சமாசம் நாம் குறிப்பிடும் இலட்சியத்திற்கு ஏற்ற பல பணிகளை நல்ல முறையிற் செய்து ஓர் உன்னத நிலையைப் பெற்று விளங்குகிறது. சேவையாற் சிறப்புற்று விளங்கும் இச்சமாசத்தை மென்மேலும் சிறப்புற வளர்க்கும் சீரிய பணியில் நிலையங்களனைத்தும் ஈடுபடவேண்டிய தவசியமாகும். நமது சமுதாய வாழ்வு வளம்பெற, கலை கலாசாரப் பண்பாடுகளனைத்தும் மறுமலர்ச்சி பெற, மக்கள் வாழ்வில் மகிழ்ச்சி பொங்க நமது சமாசம் வழிகாட்ட வேண்டுமென வாஞ்சிக்கின்றோம். "முயற்சி திருவினையாக்கு"மென்ற வள்ளுவர் வாய்மொழிக் கேற்ப நமது இடையறாத உழைப்பின் மூலம் சமாசத்தின் இலட்சியங்கள் ஈடேற வழிவகுப்போமாக!

சேவை பலவாற்றுவோம்!
செந்தமிழைப் பேணுவோம்!!

# வாழ்த்துப் பாமாலை

நமது சமாசத்தின் உபதலைவரும் முன்னாள் செயலாளருமாகிய முகாந்திரம் இ. பி. இராசையா அவர்கள், கலாமன்ற நாட்டுப்பாடல் நடன நாடகக்குழுத் தலைவராய், கயரோகத்தடைச் சங்கம், கஷ்டநிவாரணசங்கம், சென்யோன்ஸ் அம்புலன்ஸ் சங்கம், விசேட நகரகாவலர் மன்றம், சைவபரிபாலனசபை முதலிய பல்வேறு சங்கங்களிலே உத்தியோகத்தராய் நிர்வாக உறுப்பினராய்ச் செய்து வரும் நாட்டுப்பணி கண்டு வியந்து அரசினர் சமாதான நீதிபதிக் கௌரவம் அளித்தஞான்று நவாலிகிழார், செந்தமிழறிஞர், புலவர், இளமுருகனார் வாழ்த்திய வாழ்த்துப்பாமாலை இது.



**முகாந்திரம். இ. பி. இராசையா, ஜே. பி அவர்கள்**
( யா. மா. ச, ச. நி, சமாச உபதலைவர் )

**அறுசீர்விருத்தம்**

க. சீரேறுஞ் சைவநெறித் திருமுருகன்
வள்ளிபடர் செம்பொற் குன்றம்
ஏரேறுங் கருணைநில வெறிக்கின்ற
சேவடிக்கே யிதய மென்றுன்
காரேறு தலைகுனியக் கற்பகம்போல்
வழங்குமருட் சைத்த லத்தான்
பாரேறு புகழ்முகாந் திரச்செம்மல்
இராசையன் பாரில் வாழி!





உ. இலங்கையர சன்னார்தந் தகவுடைமை
வாய்மைநெறி யிணைய நோக்கி
நலங்கிளருஞ் சமாதான நீதிபதி
யெனும்பட்டம் நல்கிற் றுமால்
அலங்கிளருங் குலத்தண்ணல் திருப்பொன்னம்
பலவனருள் அருமை மைந்தன்
வலங்கிளரத் திருவோங்கப் பல்லாண்டு
மங்கலமாய் வாழி வாழி!



ஙு. ஊர்மன்றம் உறுப்பறைகள் துணைமன்றம்
கலைமன்றம் உலவா தோங்கிச்
சீர்மன்ற நிகழ்த்திவருந் திருவாளன்
கைம்மாறு சிறிதும் நோக்கான்
ஆர்மன்றத் தவர்தமக்குங் கண்ணினொடு
கவசமுமா யமைந்த சீலன்
தார்மன்றல் மணிபார்பன் சமாதான
நீதிபதி தழைத்து வாழி!



ச. பண்டிருந்த வரக்கரைப்போ லழிவுசெயும்
பாழ்க்சயநோய் பாரில் நீங்சத்
தொண்டிருந்தே யாற்றிவரும் அறத்தோன்றல்
துவ்வாதார் துன்பங் காணிற்
கண்டிருந்த மொழிபேசிக் கையிருந்த
பொருணல்குங் கருத்து மிக்கான்
வண்டிருந்த நறுங்கூந்தல் வல்லியுடன்
மங்கலமாய் வாழி வாழி!



ரு. தாமரையின் பொலிவிருந்த முகத்திருவுந்
தமனியத்துத் தரளம் பெய்த
காமருபுன் னகைதவழும் மணிவாயும்
நெஞ்சமலி காதல் பம்பிப்
பூமருவுந் தென்றலெனக் குளிர்ந்தினிமை
புதிதூறும் புலமைப் பேச்சும்
பாமருவும் புலவோர்க்குப் பரிசில்தரு
பண்பாடும் பன்னாள் வாழி.

**சோ. இளமுருகனார்**

இ யாழ்ப்பாணத்திலே நகரங்களிலும் கிராமங்களிலும் ஆண்டுதோறும் கலைக் கலகலப்பை யுண்டாக்கும் உபசமாசக் கலை விழாக்கள் பற்றியும், வாழ்வை வளம்படுத்தும் வள்ளுவத்தின் சிறப்புப் பற்றியும் அப்போட்டிகள் பற்றியும் சுருக்கமாக எழுதி செய்ந்நன்றி பாராட்டுகிறார், ஊக்கமும் உழைப்பும் துடிப்புமுள்ள சமாசச் செயலாளர் திரு. உ. ந. தேவகடாட்சம் அவர்கள்.



# உப விழாக்களும் போட்டிகளும்

உ. ந. தேவகடாட்சம்

ஆண்டுதோறும் நடத்தும் சமாசக் கலைவிழாவின் முன்னேற்பாடாக ஒவ்வொரு காரியாதிகாரிப் பிரிவுகளிலும் உப சமாசங்களை அமைத்து உபவிழாக்கள் நடத்தும் வழமைப்படியே இவ்வாண்டும் உபசமாசங்கள் அமைக்கப்பட்டன. இந்த உப விழாக்கள் ஆங்காங்கு நிகழ்ந்தபோது கிராமங்களில் கலைப்பெருக்கு பிரவாசித்ததென பத்திரிகைகளும் எழுதிப் புகழ்ந்தன. இவைகளை இவ்வாறு எழுச்சிபெற நடத்திய உபசமாசங்களின் உத்தியோகத்தர்களுடைய பெயர்களைக் கீழே குறிப்பிடுகின்றோம். இவர்களின் புகைப்படங்கள் இதன் பிறிதோரிடத்திற்காணலாம். இந்த உத்தியோகத்தர்கட்கும் நிருவாகிகட்கும் இதற்குத் தோன்றாத்துணையாகநின்றுழைத்த உள்ளூராட்சிவிசாரணையாளர்களாகிய இரட்டையர்களுக்கும் சமாசச்சார்பில் மிக நன்றிக் கடப்பாடு கூறுகின்றோம்.

கட்டுரைப் போட்டியும் திருக்குறள் மனனப்போட்டியும் சமாசம் நடத்தியபோது பல நிலையங்கள் பங்குபற்றின. இப்போட்டிப் பரீட்சைகளை நடத்தி உதவி செய்த அறிஞர்கள் பண்டிதர் க. யோ. ஆசிநாதன் அவர்கட்கும் சமூகத்தொண்டன் ஆசிரியர் திரு க. பே. முத்தையா அவர்கட்கும் நன்றிக்கடன் உரியது

இன்றைய நம் சமுதாயப் பிணிக்குக் குறள் அமுதமே நன்மருந்தென்பதை உணர்ந்த சமாசம் திருக்குறள் அமுதத்தை நாட்டில் பரப்ப பல்லாற்றானும் முயன்று வருகின்றது. இந்த முயற்சியில் நமது நிலையங்கள் நன்கு ஒத்துழைத்து இப்போட்டிகளிலும் பங்கு கொண்டமைக்கும் உப சமாச விழாக்களைத் திறம்பட நடத்தியமைக்கும் நமது நிலையங்கட்கு மனமார்ந்த நன்றி கூறுவதுடன் வானொலி நிகழ்ச்சிகளிலும் பங்கு கொண்டு சமாசத்துக்கு நற்புகழ் ஈட்டித்தந்த நிலையங்கட்கும் நன்றி கூறுகிறோம். நாட்டிலே கலைப்பெருக்கம் தன்னலமற்ற சமுதாயப் பணியும் வள்ளுவத்தின் வளம்பெற்ற வாழ்வும் முன்னேற சனசமூக நிலையங்களின் சேவை உயர்க.



## I
## சமாச உபவிழா வட்டார உத்தியோகத்தர்கள்

### காரியாதிகாரிப் பிரிவுகள்

**1 யாழ்ப்பாணம்**

தலைவர்: திரு. நீ. எஸ்தாக்கி
செயலாளர்: திரு. இ. க. குமரையா
பொருளாளர்: திருமதி. கிளாடிஸ் புண்ணிய புவிராசசிங்கி

**2 தீவுப்பகுதி**

தலைவர்: பண்டிதர் வீ. வ, நல்லதம்பி
செயலாளர்: திரு. வ. நடராசா
பொருளாளர்: திரு. என். கந்தப்பு (நாரந்தனை கி. ச. தலைவர்)

**3 வலிகாமம் வடக்கு**

தலைவர்: திரு. ஏ. முதலித்தம்பி
செயலாளர்: திரு. இ. முருகையா
பொருளாளர்: திரு. இ. ஆறுமுகம்

**4 வலிகாமம் கிழக்கு**

தலைவர்: திரு. ஜே. ரி. சபாபதிப்பிள்ளை (காரியாதிகாரி)
செயலாளர்: திரு. கே. இராசரத்தினம் (கோப்பாய் கி. ச. தலைவர்)

**5 வடமராட்சி**

தலைவர்: திரு. சி. மாணிக்கவாசகர் (புலோலி கி. ச. தலைவர்)
செயலாளர்: திரு. க. விஞசித்தம்பி
பொருளாளர்: திரு. கே. குமாரசாமி

**6 தென்மராட்சி**

தலைவர்: திரு. எஸ். கே. செல்லையா (கச்சாய் கி. ச. தலைவர்)
செயலாளர்: திரு க. சரவணமுத்து (வரணி கி. ச. தலைவர்)
பொருளாளர்: திரு. ரி. வி. தியாகராசா (சாவகச்சேரி கி. ச தலைவர்)

**7 வலிமேற்கு**

தலைவர்: முதலியார் வை. மகேசன் ஜே. பி.
இணைச்செயலாளர்: திரு. பொ. துரைசிங்கம்
திரு. எஸ். கைலாயபிள்ளை
பொருளாளர்: திருமதி பேளி அத்தனசியார்

**8 கிளிநொச்சி**

தலைவர்: திரு கா, நாகலிங்கம்
செயலாளர்; பண்டிதர் க. யோ. ஆசிநாதன்
பொருளாளர் திரு. த, நல்லதம்பி

ஓ

## II கட்டுரைப் போட்டி

யாழ்ப்பாண மாவட்ட சனசமூக நிலையங்களின் சமாசச்சார்பில் 1960-ம் ஆண்டு ஐப்பசித் திங்கள் 29 ஆம் நாள் வண்ணை வைத்தீஸ்வர வித்தியாலயத்தில் குறித்த கட்டுரைப்போட்டித் தேர்வு நடைபெற்றது.

கீழ்ப்பிரிவுக் கட்டுரைப் போட்டியில் 43 பேரும் மேற்பிரிவுக் கட்டுரைப்போட்டியில் 47 பேருமாக மொத்தம் 90 பேர் பங்குபற்றினர்.

### போட்டித் தேர்வுப் பேறு

**கீழ்ப்பிரிவு:**

1-ம் இடம்: செல்வி. கா. இந்திரா, வடலியடைப்பு ச. ச நிலையம்

2-ம் இடம்: செல்வன் நா. தில்லைநாதன் சிவகாமசுந்தரி ச. ச. நிலையம் இணுவில் கிழக்கு.

3-ம் இடம்: செல்வி க. சுகுணா, ஸ்ரீ சுப்பிரமணிய மாதர் ச. ச. நி, நீர்வேலி.

**மேற்பிரிவு:**

1-ம் இடம்: செல்வி. பத்மாவதி சிவகடாட்சசர்மா, அரியாலை ச. ச. நி.

2-ம் இடம்: செல்வன் இ. சிவசம்பு, முருகானந்த ச ச. நி நவாலி.

3-ம் இடம்; செல்வி. கா. பரமேசுவரி, சரசாலை ம. ச. ச. நி.

## III திருக்குறள் மனனப் போட்டி

யாழ்—ம வட்ட ச.ச.நிலையம் 29-10-60 இல் நடத்திய இப்போட்டியில் பல நிலையங்கள் பங்குபற்றின, பெருந்தொகையானோர் பங்குபற்றினபோதிலும் பலர் தகுந்த ஆயத்தமின்றித் தோற்றியமை வருந்தத்தக்கது. சில நிலையங்கள் மிகுந்த கரிசனையுடன் பங்குபற்றின,

### போட்டி முடிபு

**கீழ்ப்பிரிவு:**

1-ஆம் இடம்: செல்வி தி, சிவயோகநாயகி சரசாலை, ச. ச. நி,

2-ஆம் இடம்: செல்வி, க. சிவகாமசுந்தரி, சரசாலை, ச. ச. நி,

3-ஆம் இடம்: சி. யோகேஸ்வரி அரியாலை, ச. ச. நி.

**மேற்பிரிவு:**

1-ஆம் இடம்: செல்வி. அ, வேல்நாயகி நவாலி, முருகானந்த ச, ச, நி.

2-ஆம் இடம்; செல்வி. கா. பரமேஸ்வரி சரசாலை. மத்திய ச. ச. நி.

3-ஆம் இடம்: செல்வி. சி. தவமணி வடலியடைப்பு மாதர் ச ச. நி.

---

### பழைய பசுமை நினைவு

எமது இளமைக் காலத்தில் தண்கயம் ஆடும் மகளிரொடு கைபிணைந்து தழுவி மகிழ்ந்தோம். உயர்ந்தமருத மரத்தில் ஏறி, குளத்தில் பாய்ந்து அடியில் உள்ள மணலை எடுத்து எமது வீரம் காட்டினோம். இன்று பூண் கட்டிய தண்டினை ஊன்றி இருமல் வருத்த சில வார்த்தைகளே பேசும் நிலையில் முதுமையை எய்தினோம். அக்காலம் இனி வருமோ?

— புறநானூற்றிலே தொடித்தலை விழுத்தண்டினார்.



# தொழிலும் கலையும் நாட்டின் கண்கள்

ஒருநாட்டின் கண்கள் தொழிலும் கலையும் என்றும் கூறலாம். மனவளர்ச்சி தருவது கலை; பொருளாதார வளர்ச்சி தருவது தொழில். மனப்பண்பும் பொருள் வளமுமிருப்பின் அந்நாடு விண்ணுடாக மிளிரும். தொழில் முன்னேற சுதேசிய உணர்ச்சி வளர வேண்டும். மக்களின் சுதேசப்பொருள் ஆதரவின்றி அந்நாட்டின் தொழிலை முன்னேற்ற முடியாது. சுதேசிய உணர்ச்சி வளரும்போது அயல்நாட்டின் பகையுணர்ச்சி வளர வேண்டியதில்லை. தொழில் வகையில் குடிசைக் கைத்தொழில் இரு நன்மைதரும. பொருள் வளர்ச்சியுடன் நாட்டில் அழிந்து கழியும் சில மூலப் பொருள்களும் பயன்படும் தன்மையுடையது. தொழில் வளரும்போது வேலையில்லாத் திண்டாட்டம் நீங்குகிறது. "நமது பொருள் இது" என்ற மனச்சாந்தி உண்டாகிறது. சுதேசப்பொருள் ஆதரவை சுதந்திரப் போராட்டத்துடன் காந்தி மகாத்மா இணைத்தது இதனால்தான்போலும்!

**கோட்டடியிலே .... ...**

யாழ்ப்பாணம் கோட்டடியிலே மாதம் 1500 டசின் மேஸ்பெனியன்களும் கால் மேசுகளும் உருவாகின்றன. சுமார் 30 பெண்களும் 25 ஆண்களும் வேலை செய்கின்றனர், இந்திய நிபுணர்கள் மூவர் உதவி செய்கின்றனர். இரண்டு லட்சம் ரூபா பெறுமதியான இத்தாபனம் மாதம் 6000 டசின் பெனியன்களை உற்பத்தி செய்யும்நாள் தூரத்திலில்லையென்று அதன் அதிபர் திரு. ஏ. எம். யோசேப் கூறுகிறார். 'லைடன்" எனும் பெயர் பொறித்த இந்தப் பெனியன்களையும் கால்மேசுகளையும் உபயோகிப்பது நாட்டின் பொருளாதாரம் வளர வேலையில்லாத் திண்டாட்டம் நீங்க வழிகோலுவதாகும். உயர்ந்த பதவிகளைவிட்டு திரு. யோசேப், திரு. நிச்சேட் எனும் இந்த இரட்டையர்கள் செய்யும் துணிகரமான முயற்சியை நாம் ஆதரிப்பது நாட்டுப்பணியெனலாம். யாழ்ப்பாணம் பிறவுண்வீதியிலும் இதே தொழில் வளர்கிறது.

**அத்தியடியிலே ... ...**

யாழ்ப்பாணம் அத்தியடி வீதியில் தீப்பெட்டித் தொழிற்சாலை ஒன்று திறம்பட இயங்குகின்றது. "தீப்பந்தம்" அடையாளமிடப்பட்ட தீப்பெட்டிகளையே நாம் உபயோகிப்போம் என்று சபதம் செய்வது மொழிக்காகப் போராடும் தூயமுயற்சியிலும் பார்க்கக் குறைந்ததன்று.

**பூலோக கற்பகதரு .... ...**

பனைப்பாகு, பனைப்பானம் முதலிய பனைப்பொருள்கள் மேனாட்டு முறையிலே தயாராக்கி வைத்தனர், அண்மையில் நிகழ்ந்த யாழ்ப்பாணக் கலைப்பொருட் காட்சிவிழாவிலே — இவைகளைக் கண்டு சுவைத்துத் தென்னிலங்கை அமைச்சர்களும் வியந்து சென்றனர். இன்று தாழ்வு மனப்பான்மை தமிழர்களிடமிருந்து நீங்குமானால் பனைப்பொருள்கள் நாட்டிற் பொலிந்துமலிந்து உடற்சுகமும் பொருள் வளமும் கொடுக்கும் என்பது நிச்சயம்.

கைத்தறித் துணிகள் நாட்டில் பல இடமும் உற்பத்தியாகின்றன. அந்நிய துணிகளை நீக்கி இவைகளால் எமது மானத்

தைக் காத்தால் நமது சொந்தநாட்டின் மானமும் காக்கப்படும். நமது நாட்டிலே செய்யப்படும் செருட்டு வகைகளையும் மறக்கக்கூடாது. ஒருநாளில் இரண்டரை லட்சம் சிகரட்டுகளை இங்கே நமது புகையர்கள் புகைக்கிறார்களாம். தெற்கே போகும் சுருட்டுக்களுக்கு வழிகாட்ட இந்தச் சிகரெட்டுத்தாசர்கள் முன்வரவேண்டும்



''வர்த்தகவித்தகர்'' **திரு. எஸ். குலசிங்கம் அவர்கள்**

**கூட்டுவணிகமும் குலசிங்கமும்........**

இவ்வாறு பல குறிப்புகளை எழுதும்போது யாழ்ப்பாண நாட்டிலே சென்ற40வருடத்துக்கு மேலாக ஓங்கிநிமிர்ந்துவளரும் ஒரு வணிக தாபனத்தைப்பற்றிக் குறிப்பிடாமல்இருக்க முடியவில்லை. ''நாம் தனிப்பட்ட முறையிலே வணிகம் செய்து பொருளை நன்ருக ஈட்டுவோம், ஆனல் பலர் சேர்ந்து பங்குப்பணம்போட்டு ஒரு கம்பனியாக எதைத் தொடங்கினாலும் அது இடையிலே முறிந்து சிதைந்து போவது வழக்கம்'' என்று கூறப்படுவதற்கு விதிவிலக்காக **யாழ்ப்பாண ஐக்கிய வியாபாரச் சங்கம்** எனும் இந்தத் தாபனம் ஓங்கி வளர்கிறது 1918-ஆம் ஆண்டில் ஆறுபேர் கூடி 1833 ரூபா முதலுடன் ஆரம்பித்த இந்தத்தாபனம் ஆலம் விதையிலிருந்து ஆகாயத்தை எட்டும் விருட்சம் வந்ததுபோல இன்று கோடிக்கணக்கிலே முதலுடையதாயும் இலட்சக் கணக்கிலே இலாபமுடையதாயும் வளர்ந்துவிட்டது இது 194 இல் பெரிய தெருவில் கிளை ஒன்று தாபித்து மறுபடி மூன்றும் இடமாக சுமார் ஐந்து லட்ச ரூபாவில் கட்டடம் அமைத்து வளர்ந்திருக்கிறது **பலர் கூடி நடத்தும் தாபனம் ஒன்று முன்னேறிய புதுமை வடபகுதியின் அழியா மகிமைச் சின்னமாதலால் இதனைத் தமிழரின் வணிகத் தொழிலின் மேன்மைக்காகக் குறிப்பிட வேண்டியதாயிற்று.**

எந்தக் கூட்டுத் தாபனத்துக்கும் ஒருஆள்தான் பிரதானம். அதனைச் செலுத்தும் சாரதியிலேதான் அதன் வளர்ச்சியும்தளர்ச்சியும்தங்கியிருக்கின்றன. 1942 ஆம்ஆண்டில் இதன் மனேச்சராக வந்து 1953-இல் மனேச்சிங் டிறக்றராகி, இதன் முதுகெலும்பாகி நின்று தன் சொந்தத் தாபனம்போல உணர்ந்துழைத்துத் திறம்பட



நடத்திவரும் வணிக நிர்வாகி திரு. எஸ். குலசிங்கம அவர்களை வயார வாழ்த்த வேண்டும், யாழ்ப்பாணக் கல்லூரியின் பேர்பெற்ற அதிபர்களாகிய பிறவுண், பிக்னல் எனும் பண்பாளரிடம் பயின்ற பணபுடைமையும் கொழும்பு ''வாக்கர்'' கம்பனியில் ஐரோப்பிய நிர்வாகிகளுடன் பழங்கிய நிர்வாகப் பண்பும் பரம்பரை நேர்மையும் முயற்சியும் கலந்துருவமைந்தவர். மனச்சாட்சியும் நேர்மையுமுள்ள நெஞ்சு! நிர்வாகத் திறனுள்ள மூளை! நெஞ்சிருக்குமிடத்தில் மூளை இருப்பதில்லை. மூளைஇருந்தால்நெஞ்சிராது. ஆனல்இவரோ நெஞ்சும் மூளையும்ஒருங்கேபொருந்தியவர். இவர் இக்கமபெனியின் தாயாய், தொழிலாளரின் தந்தையாய் விளங்குகிருரெனலாம், தொழிலாளர்ச் சட்டங்கள் வருமுன்பே எட்டுமணி நேரமும் தொழிலாளர் சகாயநிதி முறையும் வருடாந்த நன்கொடைகளும் தொழிலாளருக்குக் கொடுக்க ஆரம்பித்த இவர் தொழிலாளரின் நல்ல அன்பராஞலும் அவர்களிடம் நேர்மையையும் முயற்சியையும் எதிர்பார்ப்பதில் மிகக் கடினமுடையவர். இந்த அன்பும் கடினமும் கலந்த நிர்வாகம் தொழிலாளரின் உள்ளங்கவர்ந்து இலட்சக்கணக்கான ரூபாய்களை ஆண்டுதோறும் இலாபமாக்குகின்றது. கூட்டு வணிகத் தொழிலும் குலசிங்கப் பெரியாரும் தமிழ்ச் சமுதாயத்தின் உயர்வுச் சின்னங்கள், நம்நாட்டிலேகூட்டு வணிகத் தொழில் வளம்பெற்றுயரவேண்டும்.

**நாட்டுக் கூத்து**

யாழ்ப்பாணப் பிரதேசக் கலாமன்றம் நடத்திய கலை, கைப்பணி விழாவிலே கரகம், காவடி,நாட்டுக்கூத்து, நாட்டுப்பாடல், நாட்டு நடனம், கும்மி கோலாட்டம் முதலிய நமது பண்டைத்தமிழ்க் கலைகள் புத்தொளி பெற்றன. கலைஞர்கள் பலர் தமது கைவரிசைகளைக் காட்டி ஆயிரக் கணக்கான மக்களை ஆனந்தக் கடலுள் ஆழ்த்தினர். இசை, நாடகம், நாட்டுப்பாடல், வாத்தியம் முதலிய பல துறைகளிலே பல கலைஞர்கட்கு விருந்துகளும் அளிக்கப்பட்டன. பல சனசமூக நிலையங்கள் இக் கலை முயற்சியிலே மிகத்திறமை காட்டின. சென்ற இருபத்தைந்து வருடமாக நாட்டுக் கூத்துக் கலைக்கே தம்மை அர்ப்பணித்துவரும் நாடகக்கலைஞர் திரு. ம. யோசேப்



''சங்கிலி'' அரசன்

**திரு. ம. யோசேப்**

அவர்கள் ''சங்கிலி'' அரசனக நடித்து அரசாங்க அதிபர் தலைமையிற் புகழ்பெற்றமை குறிப்பிடத்தக்கது.

**வளரும் இளங்கலைஞன்**

நடனக் கலையிலே முன்னேறி வரும் மத்தியகல்லூரி மாணவச்சிறுவன் ச. யோகநாதனுக்கு நடனக் கலையிலும் மிருதங்க

வாத்தியக்கலையிலும் அவர் காட்டிய திறமைக்கு அரசாங்க அதிபர் திரு. ம. சிறீ கந்தா பரிசளிக்கும் படம் இது.



யோகநாதன் பரிசு பெறுகிறுர்

இவரது நடனக்கலை யாழ்ப்பாணம், கொழும்பு, திருமலை, மலைநாடுகளிலே மாத்திரமன்று சென்னையிலே வழுவூர் இராமையா பிள்ளை அவர்களாலும் பாராட்டப்பட்டதென்பது குறிப்பிடத்தக்கது. மரத்திலே, கடதாசியிலே, சிப்பிகளிலே அழகிய நுண்கலைப் பொருள்களாக்கும் திறமையும் உடைய இம்மாணவக் கலைஞன் மாணவ உலகுக்கே கலைவழிகாட்டியெனலாம்.

யாழ்ப்பாணத்தின் தொழில் வளத்துக்கும் கலைவளத்துக்கும் சில எடுத்துக்காட்டுக்கள் இவை. யாழ்ப்பாணக் கலைவளர்ச்சி பற்றியும் இன்றுவாழும் முதிய கலைஞர்களைப்பற்றியும் எழுதுகில் ஒரு புத்தகமே எழுதலாமே.

## படையின் நீளம் ஆறு மாதம்!

சோழன் நலங்கிள்ளியின் படை மிக நீண்டது. முன்னணி வீரர் பனை மரத்தின் நுங்குகளைப் பறித்து உண்டு செல்ல இடையில் உள்ளோர் பனம் பழத்தை உண்பர். ஈற்றில் உள்ள படை வரும் பொழுது நுங்குக் காலம்போய் பனம்பழம் முடிந்து பனங்கிழங்குக் காலமாய்விட அவர்கள் அங்கே பனங்கிழங்கைச் சுட்டுத் தின்பர். இவ்வாறு நீண்ட படையையுடைய நலங்கிள்ளி இறந்தபின் அவனது வெற்றி முரசமும் வலம்புரிச் சங்கமும் தூக்கணாங் குருவிக்கூடு போலச் சும்மா தூங்குகிறதைக் கண்டு என் வயிறு பற்றி எரிகிறதே!

— புறநானூற்றிலே ஆலத்தூர்கிழார்





தென்மராட்சி உபசமாச நிருவாகசபை 1960—61.



யாழ். மாவட்ட சனசமூக நிலையங்களின் சமாச நிருவாகசபை 1960 — 61.

# பேசும் நிலையங்கள்

யாழ்ப்பாண மாவட்டத்திலே சுமார் 450 சனசமூக நிலையங்கள் உண்டு. அவற்றுள் உயிரிழந்த நிலையங்களை உள்ளூராட்சி விசாரணையாளர்கள் அடக்கம் செய்து வருகின்றனர். குறையுயிரில் கிடந்து துடிப்பன சில. அவற்றுக்கு ஊசிமருந்தேற்றுகிறார்கள். ஆனால் உன்னத சேவை செய்யும் உயிருள்ள நிலையங்கள் மிகப் பல உள; அவற்றுட் சிலவற்றின் குரல்களே இங்கே ஒலிக்கின்றன. இங்கே பேசாத நிலையங்கள் நாம் அழைத்தபோது நித்திரையிலிருந்தனவே யன்றி உயிரற்றவைகளல்ல.

## மானிப்பாய்ச்சபை — சனசமூக நிலையம்

மானிப்பாய் மக்களின் முன்னேற்றத்திற்காக உழைக்கும் இந்நிலையம் 1943-ம் ஆண்டு ஆரம்பமாயிற்று. இதைப்போன்ற சிறந்த முன்மாதிரியான நிலையம் இதற்கு முன் யாழ்ப்பாணத்தில் மட்டுமல்ல இலங்கை முழுவதிலும் ஸ்தாபிக்கப்பட்டவில்லை.

பல மக்கள் வந்து வாசித்துப் பயன் பெறக்கூடிய பொது வாசிகசாலை இருக்கிறது. இதற்கு இருபத்தொரு வார, மாத சஞ்சிகைகளும், பதினைந்து புதினப்பத்திரிகைகளும் வரவழைக்கப்படுகின்றன. அங்கத்தவர் வீட்டிற்கு எடுத்துச்சென்று வாசிக்கக்கூடிய நூல்நிலையம் இருக்கிறது. இரண்டு விளையாட்டு மைதானங்கள் பண்படுத்தப்பட்டு விளையாடுவதற்கேற்ற ஒழுங்காக இருக்கின்றன இளைஞர் விவசாயக் கழகம், விளையாட்டுக் கழகம், தொண்டர் படை எனப் பல குழுக்களாகப் பிரித்து சங்கத்தினர் கடமை செய்கின்றனர். கிராமத்திற் சிறு சண்டைகளேற்பட்டால் சமாதான முறையாய் அவர்களை ஒப்புரவு செய்தல், பிரஜைகளுக்கு புத்திமதி கூறல், பகிரங்க சொற்பொழிவுகள் செய்வித்தல், இலவச படக்காட்சிமூலம் அறிவைப் பெறச் செய்தல் முதலிய பல துறைகளில் உதவியளிக்கின்றது.



நிர்வாகசபையினர்

இந்நிலையத்திற்கு விஜயம் செய்த மகா தேசாதிபதி, மந்திரிமார் மாகாண அதிபர் முதலிய பல பிரமுகர்கள் "இந்நிலையம் ஏனைய நிலையங்கட்கு முன்மாதிரியாக இருக்கிறது" எனக் குறிப்பிட்டுச் சென்றமையே இந்நிலையத்தின் வளர்ச்சிக்கு எடுத்துக்காட்டாகும்.

## வீரகத்தி விநாயகர் நிலையம் — உடுப்பிட்டி

வீரகத்தி விநாயகர் கோவில் நிர்வாகிகளின் முயற்சியினாலும், உடுப்பிட்டி ஐக்கிய மட்கல சங்க அங்கத்தினரின் ஆர்வத்தாலும் 1952-ம் ஆண்டு இந்நிலையம் ஆரம்பமாயிற்று. 'முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்' என்பதற்கிணங்க, நிலைய அங்கத்தவர்களின் முயற்சியினால் இதுஒரு நிலையான கட்டடத்தில் அமைந்துள்ளது. அரசாங்க நன்கொடைப்பணமும் பெற்று வருகிறது.

கலைத்தேவியின் திருநாளாகிய நவராத்திரி விழா மிகமிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. தீபாவலித் திருநாள், பொங்கற் பண்டிகை என்பனவும் கொண்டாடப்படுகின்றன. விளையாட்டுப் போட்டி நடத்தப்படுகிறது சமாசவிழாப் போட்டிகளிலும் பங்குபற்றி வெற்றியீட்டியிருக்கிறது. ஒருநாளாவது ஓய்வெடுக்காமற் கடமைசெய்யும் இந்நிலையம் வளர்ந்தோங்குமென்பதில் ஐயமில்லை.



## நகுலேஸ்வர நிலையம் — கீரிமலை

பல்வேறு சிறப்புக்களும் பெற்ற கீரிமலையில் தினமும் வந்துசெல்லும் பல்வேறு இன மொழி மக்களுக்கும் சேவை செய்வதையே பெருநோக்காகக் கொண்டமைந்ததே இந்நிலையம்.



செயலாளர்

ஏறக்குறைய அரை நூற்றாண்டுகளுக்கு முன்பு 'இரேனுகாஸ்ரம்'' என்ற பெயருடன் பிறந்து, 'சிவானந்த ஐக்கிய சங்கம்' என்னும்பெயருடன்தவழ்ந்துஇன்று'நகுலேஸ்வர நிலையம்'எனும்பெயருடன்நடக்கிறது. காலஞ்சென்றபிரதமர் எஸ். டபிள்யு. ஆர், டி. பண்டாரநாயக்க அவர்கள் ஸ்தல ஸ்தாபன மந்திரியாக இருந்த காலத்தில் அரசாங்கத்திடம் விண்ணப்பித்துக் கேணியைத் திருத்துவித்து, அன்னாரை அழைத்து முறைப்படி திறந்து வைக்கச் செய்தமையும், யாத்திரிகர்களின் வசதிக்காக, நிழல் மரங்கள், ஆசனங்கள், மின்சார வெளிச்சம் அமைக்கச் செய்தமையும். மகாத்மா காந்தி அவர்களின அஸ்தி கரைக்கக் கொண்டு வந்தபோது செய்த தொண்டுகளையும் பிறதேசப் பிரமுகர்கள் யாவரையும் வரவேற்று உபசரிப்பதையும், இன்னும் இவைபோன்ற பலவற்றையும் இந்நிலையத்தினர் செய்திருக்கின்றனர்.

கீரிமலையிற் பண்டுதொண்டு வைரவர் கோயில், அம்மன்கோயில் ஆகியவற்றில நடைபெற்று வந்த உயிர்ப்பலியிடுதலை நிறுத்திய பெருமையும், கீரிமலை வரலாறு என்ற சரித்திர ஆராய்ச்சி நூலை வெளியிட்ட பெருமையும் இச்சங்கத்தைச் சார்ந்ததேயாகும்.

## திருவள்ளுவர் நிலையம் — கொக்குவில்

கோக்குவில் கிழக்கிலே ஆடியபாத வீதியிலே 14-4-52 ல் உருவாகிய வாசிகசாலை இன்று திருவள்ளுவர் நிலையம் என்னும் பெயரோடு நிகழ்கின்றது.

கிராமச்சங்கத் தலைவராலும், உதவிஉள்ளூராட்சி உபஅதிபர் அவர்களின் முயற்சியாலும் இன்று அரசாங்க நன்கொடை பெற்று வருகின்றது. திருவள்ளுவர் தினம், பொங்கற் பண்டிகை, விளையாட்டுப் போட்டி முதலிய பல கொண்டாட்டங்களை ஆண்டுதோறும் கொண்டாடுகின்றது. இச்சங்கம் செய்த செயல்களுள் திரு C. அருளம்பலம் அவர்களுக்குச் சமாதான நீதிபதிப் பட்டம் கிடைத்ததையொட்டி ஏற்பாடு செய்த உபசரணை விழாவும், 1956-ல் நடாத்திய களியாட்ட விழாவும் முக்கிய மானமை.

இந்நிலையம் ஒரு நிரந்தரமான இடத்தில் அமைவதற்காக திரு. ம. சுப்பையா அவர்கள் நன்கொடையாக ஒருபரப்பு நிலம் உதவினர். கட்டடம் கட்டப்பணஞ் சேர்க்கு முகமாக நடைபெற்ற களியாட்டு விழாவினாலும், பெரியோர்கள், அங்கத்தவர்களின் நன்கொடையாலும் கட்டடத்திற்கு ரூபா 2994-02 சதம் கிடைத்தது. நிரந்தரக் கட்டடமமைக்கும் வேலை இதுவரை தடைபட்டுவிட்டது. இவ்வேலை விரைவிற் கைகூடி நிலையான ஒரு கட்டடத்தை அமைத்து கோக்குவில் கிழக்கில் சிறந்து விளங்குமென எதிர்பார்க்கிறோம்.

## சங்கிலியரசன் நிலையம் — நல்லூர்

அங்கிலயர் ஆதிக்கம ஒழிக்கப் பாடுபட்ட வீரத்தமிழ் அரசனின் நாட்டுப் பக்தியை நினைவூட்டுதற்காகவே இப்பெயர் இந்நிலையத்திற்கிடப்பட்டது, சென்ற ஆண்டுகளாக நிகழ்ந்துவரும் இந்நிலையம் தாய்ச்சமாசத்தின் எல்லாக் கடமைகளிலும் ஒத்துழைதது வருவது இதன் வளர்ச்சிக்கோர் எடுத்துக்காட்டாகும.

பொதுமக்கட்கு இலவச படக் காட்சிகள் காட்டும் பணி செய்து வருகின்றது. ஒலிபெருக்கி பூட்டி எல்லாப் பிரசங்கங்களையும் மறக்கக் கூடிய முறையில், பன்னிரண்டு பேச்சாளர்களைப் போட்டுகுழந்தைகளின் ஊக்கத்தைக் கொலைசெய்யும் ஆண்டு விழாக்களிலே எமது நிலையத்திற்கு நம்பிக்கையில்லை. ஆதலால் அதனை நிறுத்திப் பொதுக்கூட்டங்கள், நிர்வாகசபைக் கூட்டங்களை மாத்திரம் நடத்தி சுமார் 25 பத்திரிகைகளை அங்கத்தவர்கள் வாசிக்கும் படி செய்து வருகின்றது.

இந்நிலையம் சமய நூல்களை வாசிக்க ஊக்கப்படுத்துகின்றது. இங்கே நடன வகுப்பு ஒன்றுரம்பிக்கப்பட்டது இந்தியநடனக் கல்லூரியிற் பயிற்சிபெற்ற நடன ஆசிரியர் இதனைப் பொறுப்பெடுத்த போதிலும



உத்தியோகத்தர்கள்

பொருளாதார இடர்ப்பாட்டினல் இதுநிறுத்தப்பட்டு விட்டது. விளையாட்டுப் போட்டிகள் ஆண்டுதோறும் நிகழ்ந்து வருகின்றன.

இளைஞர்களாலே நிருவகிக்கப்பட்டு வரும் இந்நிலையத்தின் கலை வளர்ச்சியைக் கண்டு சிறுகுழந்தைகள் ஊக்கம் பெற்று வருகின்றமை வருங்கால் ஒளிக்கு முன்னறிவிப்பாகும்,

## விவேகானந்தா நிலையம் — கொக்குவில்

மேற்படிநிலையம் கொக்குவில்கிறிஸ்தவ ஆலயத்திற்கருகில் 1957-ல் ஆரம்பமாயிற்று. அதிட்டச்சீட்டு ஒன்றின் மூலம் பணம் சேர்க்கப்பட்டு நிலையான கட்டடம் அமைத்தது.

சமுகத்தொண்டின் மகிமையை கிராம மக்கள் அறியாமையால் அங்கத்தவர்கள் தோகை குறைவாக இருந்தது. ஆனல் இப்போது அங்கத்தவர் தொகை நாளுக்குநாள் அதிகரித்த வண்ணமேயிருக்கிறது. அங்கத்தவர் தேகப்பயிற்சிபெற கைப்பந்தாட்டம் நடக்கிறது. பொதுமக்கள் அறிவு பெறுதற்கு நாளாந்த, மாதாந்தப் பத்திரிகைகள், சஞ்சிகைகளோடு நூற்றுக்கணக்கான புத்தகங்களும் வாங்கி வைக்கப்பட்டிருக்கின்றன. இந்நிலையம் தோடங்கிய காலந்தொட்டு சமய குரவர்களுடைய குருபூசைகளும், பல பெரியார்களின் தினங்களும் சிறப்பாகக் தோண்டாடப்படுகின்றன. தாய்ச்சமாசத்திலும் அங்கம் வகித்து விழாக்களில் பங்குகோள்கிறது.



## சனசமுக நிலையம் — நல்லூர் வடக்கு

சுதந்திரத் தாயின் கருணையைப் பெற்றுவிட்ட ஈழமக்கள் டல துறையிலும் முன்னேறவேண்டிய காலகட்டத்தில் மக்களின் முன்னேற்றத்தையே உயிர்நாடியாகக் கொண்டு பிறந்தது நம் சனசமுக நிலையம். 1949-ஆம் ஆண்டு உதயமாகிய நமது நிலையம் இன்றுவரை பெயரளவிலன்றிச் செயல் முறையிலே பல சாதனைகளைச் செய்து வந்திருக்கின்றது.

அரசியல் பொருளாதார சமூக சமயத் துறைகளில் மக்கள் அநுபவமும் அறிவும் பெறுவதற்கான புதினப் பத்திரிகைகளையும் அரசியல் இலக்கிய சமயநூல்களையும் எமது நிலைபத்திலுள்ள நூல்நிலையம் மூலமாகப் பெற்று மக்கள் நன்மையடைகிருர்கள்.

எமது நிலையம் தமிழ்காத்த பெரியோர்களாகிய சமயகுரவர்கள், வள்ளுவர், பாரதி, ஆறுமுகநாவலர் போன்ற பெரியார்களின் விழாக்களையும், தாகூர், காந்திஜி போன்ற உலகப் பெரியார்களின் விழாக்களையும். கொண்டாடி வந்திருக்கிறது எமது விழாக்களில் குன்றக்குடி அடிகளார் போன்ற இந்தியப் பெரியார்களும் நமது நாட்டு மந்திரிகளும் வந்து கலந்து எமது நிலையத்தைப் டல துறைகளிலும் ஊக்குவித்திருக்கின்ருர்கள். இலங்கையின் முன்னுள் மந்திரி சபையில் அங்கம் வகித்த திரு. நுகவெல அவர்கள் எமது விழாவிற் கலந்துகோண்டு, "கீழைத்தேச கலாசாரத்தை வளர்ப்பதற்கு இந்நிலையம் முன்னேடியாக அமைந்திருக்கின்ற"தென்று குறிப்பிட்டார். சமாச விழா ஆரம்பகாலந் தோடக்கம் அவ்விழாக்களில் பங்குபற்றிப் பல பரிசுகளையும் எமது நிலையம் பெற்றுவந்திருக்கின்றது. இலங்கையில் ஒரு ஐக்கியசமூகம் உருவாக வேண்டுமென்பதே எமது நிலையத்தின் பேரவாவாக இருக்கின்றது.

## கலா மன்றம் — திருநெல்வேலி




1948-ஆம் ஆண்டு வைகாசி மாதம் திருநேல்வேலியில் ஆரம்பிக்கப்பட்ட கலா மன்றம் பல்வேறு துறைகளில் வளர்ச்சியடைந்து வருகிறது. சமய வளர்ச்சியில் இச்சனசமூக நிலையம் எடுத்துவரும் முயற்சிகளில் கூட்டுப் பிரார்த்தனை முதன்மையான இடம் பெற்றள்ளது. வெள்ளிக்கிழமைதோறும் நடைபெறும் கூட்டுப் பிரார்த்தனைகளில் சிறியோர் தொடக்கம் முதியோர்வரை பலரும் பங்குபற்றுகின்றனர்,

இச்சனசமுக நிலையத்தின் இடைவிடாத உழைப்பால் திருநேல்வேலி வடக்கில் அரசினர் விறகுகாலையும், தபாற் பெட்டியும் அமைக்கப்பட்டுள்ளன. யாழ்ப்பாணப்பகுதி சனசமூக நிலைய சமாசப்பகுதி

யால் நடத்தப்பட்ட விளையாட்டுப் போட்டிகளிலும் இயல் இசை நாடகப் போட்டிகளிலும் கலாமன்றம் பங்குபற்றி கூடுதலான வெள்ளிக்கிண்ணங்களையும் பரிசுப் பத்திரங்களையும் பெற்று திருநெல்வேலி கிராமத்துக்குப் பெரும் புகழை ஈட்டித் தந்துள்ளது. 1960-ஆம் ஆண்டில் நடைபெற்ற யாழ்ப்பாண மாவட்ட சனசமூக நிலையங்களின் விளையாட்டுப் போட்டியில் கலாமன்றமும் பங்குபற்றி இரண்டாவது ஸ்தானத்தைப் பெற்றது.

கலாமன்றத்தின் ஆதரவில் மாதம் இருமுறை நடைபெறும் மாணவர் தேர்ச்சிச் சங்கக்கூட்டங்களில் பேச்சு நடனம் நாடகம் முதலியவைகள் இடம்பெறும். மாணவர்கள் பலரும் நிகழ்ச்சிகளில் பங்குபற்றித் தங்கள் திறமையைப் புலப்படுத்துவார்கள்.

---

## மத்திய சேவாசங்கம் — சரசாலை

இலங்காதேவியின் புண்ணியபுத்திரர்களில் ஒருவனய்1950-ஆம் ஆண்டு இப்பெயருடன் பிறந்தான். பிள்ளைப் பிராயத்திலேயே "தனக்கெனவாழாப் பிறர்க்குரியாளன்" எனப் பல பெரியோராலும் பாராட்டப்பெற்ருன்.

யோகி ஸ்ரீ சுத்தானந்தபாரதியார் அவர்களின் திவ்ய தரிசனத்தால் இக்குழந்தை பாலர் அரிட்டங்களில் இருந்தும், பல்வேறு அரசியற் தாக்கங்களிலிருந்தும் பிழைத்து இன்று பத்தாட்டைப் பிராயத்தனுக விளங்குகிறன் இவனது பெருமையைக் கேள்வியுற்ற டெல்கிப் பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர் எஸ். ஆர். இரங்கநாதன் அவர்கள் முத்தமிட்டுப் பரிசும் கொடுத்தார். இதை அறிந்த பண்டிதமணி கணபதிப்பிள்ளை அவர்கள் நேரில் வந்து புகழ்மாலை சூட்டி ஆசிர்வதித்தார்.

இவனது வயதுக்கு மிஞ்சிய திருப்பணிகளின் சிறப்புகளை யறிந்த பாராளுமன்றப் பிரதிநிதிகள், சட்ட நிபுணர்கள், தமிழ் வித்துவான்கள் வாயார வாழ்த்தி உற்சாகமூட்டிச் சென்றனர். ஓர் ஏழைக் கிராமத்திலே அழகும், அறிவும், பண்பும் நிறைந்த ஒரு சற்புத்திரன் தோன்றி நாற்றிசையும் புகழ் பரப்பி வருவது இக்கிராமத்துக்கே மிகப் பெருமையாகும்.

கடுகு சிறிதென்றாலும் காரம் பெரிதென்பர். தென்மத்திய கிராம முன்னேற்றச்சங்கம், மாதர் கிராம முன்னேற்றச் சங்கம், மகளிர் தையற் சங்கம், மாதர் ஐக்கிய நாணய சங்கம், இளம் விவசாயிகள் சங்கம் ஆகிய ஐந்து சங்கங்களும் தோன்றுவதற்கு இவ்விளஞ்சிறுவன் காரணமாயிருந்தான் என்றால் இவன் பெருமை சொல்லுந்தரமன்றே.

---



## ஸ்ரீ விநாயகர் நிலையம் — நீர்வேலி

இந்நிலையம் பன்னிரண்டு ஆண்டுகளாகத் தொண்டாற்றி வருகிறது. அங்கத்தவரின் நன்முயற்சியைக்கண்டு வியந்த திரு. க. செல்லையா என்பவர் இதற்கு ஒரு காணியை நன்கொடையாக அளித்தார். அக்காணியில் ஒரு நிரந்தரமான கட்டடத்தில் இப்போது இயங்கி வருகிறது.

சமயகுரவர் பூசை, சரஸ்வதிபூசை, பெரியார்களின் தினங்கள் முதலியன சிறப்பாகக்கொண்டாடப்படுகின்றன. வருடந்தோறும் நடைபெறும் சமாச விளையாட்டுப் போட்டி, கோப்பாய் பொலிசுப் பகுதியினரால் நடாத்தப்படும் தேசிய விளையாட்டுப் போட்டி முதலியவற்றில் பங்குபற்றி வெற்றியீட்டியுள்ளது. வெள்ளிக்கிழமை தோறும் விநாயகர் ஆலயத்தில் கூட்டுப்பிரார்த்தனை நடத்துகின்றது.

சிறுவர்க்கென பால் நிலையம் ஒன்று அமைக்கப்பட்டு சிறந்தமுறையில் உடல்நலம் பேணப்படுகிறது. அரசாங்கத்தினரால் அளிக்கப்பட்ட வானெலிக் கருவி எத்தனையோ ஏழைகள் செய்திகளை அறிய உதவுகின்றது. இந்நிலையம் குறிக்கப்பட்ட அளவில் இராது இன்னும் விஸ்தரிக்கப்படுதற்கு வேண்டிய ஆக்க முயற்சிகள் நடைபெறுகின்றன.

---

## தம்பான் நிலையம் — வடவரணி

விநாயகர் அடிதொழுது எடுக்குங் கருமம் சிறப்புறும் என்பதற்கு இணங்க கம்பிட்டான் புவிவிநாயகராலய மண்டபத்தில் ஆரம்பிக்கப்பட்ட இந்நிலையம் பன்னிரண்டு வருட காலமாக நற்சேவை செய்து வருகிறது.

ஆலய வீதியிலேயே விளையாட்டு மைதானத்தை அமைத்து பிறதேச விளையாட்டுக்களையும் தேசிய விளையாட்டுக்களையும் நடத்தி வருகிறது. விநாயகர் ஆலய விசேட காலங்களில் கூட்டுப்பிரார்த்தனையும் பஜனையும் பெரியபுராணப் பிரசங்கமும் நடைபெறுகின்றன. பிரமஸ்ரீ வே. சுந்தரேசுவரக் குருக்களால் இந்நிலையச் சார்பாக கந்தபுராணத்திற்குப் பயன் சொல்லுதல் பழக்கப்பட்டு வருகிறது. அரசாங்கத்தாரால் நன்கொடையாகக் கொடுக்கப்பட்ட வானெலிக் கருவியும் சிறந்த முறையில் உபயோகிக்கப்பட்டு வருகிறது. இக்கிராமவாசிகள் சமயசம்பந்தமான புத்தகங்களை வாசிக்கவும். சமயசம்பந்தமான சொற்பொழிவுகளைக் கேட்கவும் ஊக்கமளித்து வருகிறது.

இச்சங்க ஆதரவில் ஆக்கப்பெற்ற தம்பான் மாதர்சங்கம், பெண்களை சமய வளர்ச்சியிலும் திருத்தொண்டுகளிலும் முன்னேறச் செய்கிறது. இளைஞர் விவசாயக் சழகம், விவசாயிகளுக்கு பல புதிய முறைகளில் ஊக்கம் கொடுத்து வருகிறது. இந்நிலையம் இன்னும் பல துறைகளில் தனித்தனி கழகங்களைத் தன்னுள் அமைத்து சிறந்து விளங்குமென எதிர்பார்க்கிறேம்,

## மத்திய மகளிர் நிலையம் — தொல்புரம்

இந்நிலையம் "என்கடன் பணி செய்து கிடப்பதே" என்றபொன் மொழியை மேற்கொண்டு தொண்டாற்றி வருகிறது. நிலையம் ஆரம்பித்த சிலநாட்களில் தையல் மன்றமும் நிறுவப்பட்டது.

தையல் மன்ற நிர்வாகிகளின் தளராத ஊக்கத்தாலும், பெரியோர்களின் பொருளுதவியாலும தொல்புரம் மகளிர் தையற்கலையில் வளர்ந்து வருவதைக்கண்டு மகிழ்ச்சியடைகிறது. ஓர் ஆசிரியையும் நாற்பத்தைந்து மாணவிகளும் தினமும தங் கடமையைச் செய்கின்றனர். நிலையத்தில் திருவள்ளுவர் விழா, பாரதி விழா என்பன சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. சமாசப் போட்டியிலும், சங்கீதம், நடனம், பேச்சு, கட்டுரைப் போட்டிகளிலும, இலங்கை வானொலிப்பகுதி நாட்டுப் பாடலிலும் பங்குபற்றி வெற்றியும் பெற்றுள்ளது. சமாச உபதலைவர் முகாந்திரம் ஈ. பி. இராசையா அவர்களுக்கு அளிக்கப்பட்ட சமாதான நீதிபதிப் பட்டத்தைப் பாராட்டித் தேநீர் விருந்துடன் கூடிய வரவேற்பு வைபவத்தையும் கொண்டாடியது.

உள்ளூராட்சி உப அதிபர், சமாச உபதலைவர், உள்ளூராட்சி விசாரணையாளர், சமாசக்காரியதரிசி என்போரும் இன்னும் பல பெரியோர்களும் அவ்வப்போது நிலையத்துக்கு வருகை தந்து ஊக்குவித்தமைக்கு என்றும் நிலையம் நன்றியுள்ளதாக விளங்கும்.

----

## அம்பாள் நிலையம் — பண்ணாகம் வடக்கு

இளைஞர் தேசிய இயக்கம் என்னும் பெயருடன் 1946-ஆம் ஆண்டு கொட்டிலிலே பிறந்த இந்நிலையம் இளைஞர்களின் ஊக்கத்தினலும் பெரியோர்களின் பேருதவியினலும் நிரந்தரமான கட்டடத்தில் நடக்கிறது. இளைஞர் தேசிய இயக்கமாக இருந்து வந்த சங்கம் 1951-இல் சனசமூக நிலையமாகப் பதிவுசெய்யப்பட்டது.

ஆண்கள் மாத்திரம் முன்னேறினல் கிராமம திருந்தாது. பெண்களும் முன்னேறவேண்டும் என்றநோக்கத்தினல் மாதர் முன்னேற்றச்சங்கம் ஆரம்பிக்கப்பட்டு பணி செய்கிறது. மகளிர் நெசவுசாலை, இந்து இளைஞர் சங்கம், பலநோக்குக் கூட்டுறவுச் சங்கம் உபதபாற்கந்தோர் என்பன ஆரம்பிக்கப்பட்டு மக்களின் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவி வருகின்றன. இப்பகுதியில் இலவச வைத்தியசாலை ஒன்றை அமைப்பதற்கும் அங்கத்தினர் ஆக்க முயற்சிகள் செய்து வருகின்றனர்.

எல்லாக் கிளைச்சங்கங்களும் சேர்ந்து, ஆண்டுவிழா, விளையாட்டுப் போட்டி, கலைப்போட்டி என்பவற்றை வருடந்தோறும் நடத்திவருகின்றன. சமாசவிழா நடத்தும போட்டிகளிலும, சுழிபுரம் கிராமச் சங்கத்தின் ஆதரவில் நடைபெறும் கலைவிழாப் போட்டிகளிலும் பங்குபற்றி வெற்றி பெற்றிருக்கிறது. முதியோர் கல்விக்காக முதியோர் வகுப்பொன்றை ஆரம்பித்து, அதில் முக்கிய கவனம செலுத்துகிறது.





தீவுப்பகுதி உபசமாச நிருவாகசபை 1960—61.



வலிவடக்கு உபசமாச நிருவாகசபை 1960—61.

## சன்மார்க்க நிலையம் — உடுவில்

உடுவிற்பதிவாழ் பெருமக்கள் சிலரின் பெருமுயற்சியால் 1949-ஆம் ஆண்டில் ஆரம்பமாயிற்று. மக்களின் அறிவு வளர்ச்சிக்கு மாத்திரமன்றி கலை, கலாச்சாரம், சமூக முன்னேற்றம் எனப் பல துறைகளில் பணி புரிகிறது.

காலஞ்சென்ற பிரதமர் எஸ். டபிள்யு. ஆர். டி. பண்டாரநாயக அவர்கள் யாழ்ப்பாணத்திற்கு வந்த போது இந்நிலையத்திற்கும் வந்து "இது ஈழநாட்டிற்கே முன்மாதிரியாக விளங்குகிறது எனக் குறிப்பிட்டுச் சென்றமையே இந்நிலையத்தின் பெருமைக்குச் சான்றாகும். ஆயுர்வேத வைத்தியசாலை ஒன்றையும இந்நிலையம் மிகச்சிறந்த முறையில் நடாத்தி வருகிறது. கிராமப் பாதுகாவற் சேவை, கிராமச் சுகாதார சேவை, தேசிய சேமிப்பு இயக்கம் என்பன இயங்கி வருகின்றன.

தீவிர முன்னேற்றம் அடைந்து வந்த இந்நிலையத்தின் வரலாற்றில் கடந்த சில ஆண்டுகள் இருள் சூழ்ந்ததாக அமைந்தது. நிலைய நிர்வாகிகள் சிலரின் திடீர் மறைவினாலும் சில வசதியீனங்களாலும் நிலையம் செயலற்று இருந்தது எனினும் தற்போது இருள் அகன்று புதிய ஒளி ஏற்பட்டிருக்கிறது. புதிய நிர்வாகிகள் இந்நிலையத்தை மனமுவந்து கையேற்றிருக்கின்றனர். உடுவில் மக்களுக்கு இப்புத்தூக்கம் மிக்க மகிழ்ச்சி கொடுத்து நிலைய வருங்கால ஒளியாக அமைந்துள்ளது.

-----

## சரஸ்வதி நிலையம் — மந்துவில்

1948-ஆம் ஆண்டு தென்மராட்சிப் பகுதிக்கு கலங்கரை விளக்காய் இந்நிலையம் அமைந்தது. அடுத்த ஆண்டில் "அற்ஹோப" ஒன்றை ஆரம்பித்து, பொருளாதாரத் துறையில் துன்புற்ற மக்களுக்கு கொடுத்து உதவியதன் மூலம் சமூகத் தொண்டின் புனிதத் தன்மையை விளங்க வைத்தது.

வருடந்தோறும் தாய்ச் சமாசம் நடத்தும் விழாக்களில் இயல், இசை, நாடகம், விளையாட்டு முதலிய பல துறைகளில் பங்குபற்றி வெற்றியீட்டியிருக்கிறது. இக்கிராம மக்களிடம இருந்தே நூல்நிலையத்திற்கு வேண்டிய பல நூல்களும் சேர்க்கப்படுகின்றன.

இந்நிலையத்தின் வளர்ச்சிக்கு சான்று பகருவது இந்நிலையத்தின் கிளையாக விளங்கும் சரஸ்வதி நாடக மன்றமாகும். "சாவித்திரி சத்தியவான்" பவளக்கொடி" "கற்புக்கரசி கண்ணகி" முதலிய நாடகங்களை கலை வளம் நிரம்பிய பண்டைய நாகரிகத் திற்கேற்ப நடத்தி நற்பெயர் பெற்றிருக்கின்றது இந்நிலைய அரங்கில் மாத்திரமன்றி வேறு இடங்களுக்கும் சென்று நாடகங்களை நடத்தி ஆயிரக்கணக்கான மக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்றிருக்கிறது. கலங்கரை விளக்காய் அமைந்த இந்நிலையம சமூகத்தொண்டின சிறப்பை யாவருக்கும் அறிவிக்கும் என்பதில் ஐயமில்லை.

## மத்திய நிலையம் — மாவிட்டபுரம்

மாவிட்டபுரக் கிராமத்தின் முன்னேற்றத்திற்கு எடுத்துக்காட்டாக அமைவது இந்நிலையம். மாவிட்டபுரம் கிராமத் தலைமைக்காரர் திரு. இ. துரைச்சாமி அவர்களைப் போஷகராக ஏற்று 1958-இல் ஆரம்பமாயிற்று.

ஆண்டுவிழா, பொதுக்கூட்டம், நிர்வாகசபைக் கூட்டம் முதலியவற்றைச் சிறப்பாக நடத்தி வருகிறது. அமரர் சு. வன்னியசிங்கம், புலவர் கா. வேல்முருகன் போன்ற பல பெரியோர்களின் சொற்பொழிவுகளை கிராம மக்கள் கேட்டு இன்புறச் செய்திருக்கின்றது. நிலையத்தின் ஆதரவில் மாவை மத்திய இளம் விவசாயிகள் கழகமொன்று செயற்பட்டு வருகின்றது. விளையாட்டுக் கழகம் ஒன்றையும் அமைத்து சிறுவர்களை விளையாட்டுப் போட்டிகளில் பங்குபெறச்செய்து பரிசில்கள் வழங்கி வருகிறது.

1959-ஆம் ஆண்டில் இப்பகுதியிலுள்ள சிறுர்களுக்கு இந்நிலையம் பால் விநியோகிக்க முன்வந்தது. ஆனால் சிலகாலத்துள் பிள்ளைகளின் வரவு குறைந்ததினால் பால் விநியோகம் நிறுத்தப்பட்டுவிட்டது. மழை காலத்தில் இங்குள்ள கிறிஸ்தவ சோயிலடி வாய்க்காலில் வெள்ளம் மேவிப் பாய்வதால் பொதுமக்கள் போக்குவரத்துக்குக் கஷ்டப்பட்டனர். இப்போது அவ்வாய்க்கால் முன்னொருபோதுமில்லாதவாறு ஆழமாக வெட்டுவிக்கப்பட்டது இந்நிலையம் செய்த சிறந்த சேவைகளில் ஒன்றாகும்.

------

## மத்திய நிலையம் — தொல்புரம்

இந்நிலையம் தொல்புரம் மக்கட்கு பதினொரு ஆண்டுகளாகத் தொண்டாற்றி வருகிறது. இந்நிலையத்திற்குரிய கட்டடத்தைத் தந்துதவிய திரு. நா. கிருஷ்ணசாமிக்கு நிலையம் என்றும் கடமையுள்ளதாய் விளங்கும்.

வருடந்தோறும், திருவள்ளுவர், நாவலர், பாரதியார், மகாத்மாகாந்தி என்னும் பெரியோர்களின் விழாக்கள் கொண்டாடப்படுகின்றது. நவராத்திரி, திருவெம்பாவை, என்ற சமயசம்பந்தமான விழாக்களும் நடைபெறுகின்றன. வெள்ளிக்கிழமைதோறும் விசேட பசனையும், கூட்டுப்பிரார்த்தனையும் நடத்தப்படுகின்றன. இக்கிராமத்தில் அநேக ஆண்டுகளாக நடைபெற்று வந்த பலியிடும் வழக்கம் இந்நிலைய இளைஞர் முயற்சியால் ஒழிக்கப்பட்டதையிட்டு நிலையம் பெருமைப்படுகிறது.



செயலாளர்

தாய்ச் சமாசத்தால் நடத்தப்படும் பேச்சு, எழுத்து, விளையாட்டுப் போட்டிகளில் பங்குபற்றி வெற்றிகளை யீட்டியுள்ளது. கைப்பந்தாட்டம், உதைபந்தாட்டம், 'கிரிக்கட்' என்னும் விளையாட்டுக்களில் ஏனைய நிலையங்களுடன் போட்டியிட்டு வெற்றிபெற்றுள்ளது. இந்நிலையத்திற்கு ஒரு விளையாட்டு மைதானத்திற்காக அரசாங்கம் 4500 ரூபாவைக் கொடுத்துதவ முன்வந்துள்ளது.



இந்நிலையம் செய்யும் வேலைகளை இன்னும் ஊக்குவித்தற்காக நிலையத்திற்கு விஜயஞ் செய்து நற்போதனைகள் தந்த பெரியோர்களுக்கும் நன்றி கூறுகிறது.

------

## ஜனசக்தி நிலையம் — நல்லூர்

இந்நூல் நிலையம் அரசடி நல்லூர்ப் பகுதியிலுள்ள தொழிலாளர்களால் ஏறக்குறைய பத்து வருடங்களாக நடாத்தப்பட்டு வருகிறது. வருடந்தோறும் ஆண்டுவிழா புதுவருடப்பிறப்பு, சரஸ்வதிவிழா என்பன கொண்டாடப்படுகின்றன. நடனம், நாடகம், சங்கீதம், பேச்சு என்பன இந்நிலையக் கலையரங்கில் சிறப்பாக இடம் பெறுகின்றன.

கைப்பந்தாட்டக் கோஷ்டியும் காற்பந்தாட்டக் கோஷ்டியும் இளைஞர்களுக்கு உடலுறுதியளிக்கின்றன. இளைஞரின் ஊக்கம் சிறுவர்க்கு நிலையத்தில் ஆர்வத்தை ஊட்டுகிறது. சிறுவர்க்கென அமைக்கப்பட்ட பால்நிலையம் தினந்தோறும் ஏராளமான பிள்ளைகளை வரவழைத்துக்கொண்டிருக்கிறது.

1956-ஆம் ஆண்டு வெள்ளப்பெருக்கால் இப்பகுதி மக்கள் பெரிதும் பாதிக்கப்பட்டபொழுது இந்நிலையத்தினர் சீர் உதவி கொடுத்து உணவு சேகரித்துக் கொடுத்தனர். பின்னர் அரசாங்கத்திடமிருந்து இருவாரங்கட்குப் போதிய உணவு வகைகளும் பெற்றுக் கொடுத்தனர். வீடிழந்தோருக்கு ரூபா 50 முதல் 300 வரை பெற்றுக் கொடுத்த பெருமையும் இந்நிலையத்திற்குரியதேயாகும். நல்லூர்த் திருவிழாக் காலங்களில் நிலைய முன்றிலில் இளைப்பாறும் பந்தல் அமைத்து தொண்டர்கள் இளைப்பாறுதற்கும் தாகம் தீர்ப்பதற்கும் உதவி செய்து வருகின்றது.

இந்நிலைய உதவியால் அயலிலுள்ள 13 பேருக்கு மேல் அரசாங்க சகாயநிதி அநாதைச் சம்பளம் பெறுகின்றனர் எனில் இந்நிலையத்தின் சேவை வருங்காலத்தில் சிறப்படையும் என்பதில் ஐயமில்லை.

## விநாயக நிலையம் — பத்தவேணி

அச்சுவேலியிலுள்ள பத்தவேணி
யில் இரண்டாம் வட்டார வாக்காளர்
களின் முயற்சியினால் 1953-ஆம்
ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது இந்நிலை
யம். ஆரம்பத்தில் தற்காலிகக் கட்
டடமொன்றில் காட்சிதந்த இந்நிலை
யம் பொதுமக்களின் உதவியினால்
நிரந்தரக் கட்டடத்தில் விளங்குகிறது.

நூற்றைம்பதுக்கு மேற்பட்ட
அங்கத்தவர்களையுடைய இந்நிலையம்
ஊர்மக்களிடம் வெங்காயச் செய்கை
யின்போது வெங்காயம் பெற்று
வாசகசாலைக்குரிய கருமங்களை நடத்தி
வருகிறது. நாடகமன்றம் உருவாக்
கப்பட்டு "ஜென்மவிரோதி", 'விருப்
பும் வெறுப்பும்'' என்ற நாடகங்களை
யும் சிறப்பாக நடத்தியிருக்கிறது.

வருடாவருடம் தைப்பொங்கல்,
வருஷப்பிறப்பு, தீபாவலி, சரஸ்வதி
பூசை என்பன கொண்டாடப்படுகின்
றன. கைப்பந்தாட்டம், சுதேசவிளை
யாட்டுககளாகிய கிட்டியடித்தல், கிளித்
தட்டு மறித்தல் முதலிய விளையாட்டுக்
களில் வாலிபர்களுக்குத் தகக பயிற்சி
அளிக்கப்படுகிறது. சமாச விளையாட்
டுப் போட்டிகளிலும் பங்குபற்றி
வெற்றிபெற்றிருக்கிறது.

இந்நிலையத்திற்கு அருகிலுள்ள
கோவிலில் திருவிழாக் காலத்தில்
பஜனை செய்து வருகிறார்கள். வீதிக
ளை சுத்தமாக வைத்து தொண்டர்க
ளுக்கு உதவியளிக்கின்றனர். தின,
வார, மாதப் பத்திரிகைகளைப் படிப்ப
தற்கு உதவியளிப்பதுடன் அறிவிற்
குரிய பல புத்தகங்களை வாசிப்பதற
கும் உதவியளிக்கின்றது.

## நேருஜி நிலையம் — கலைநகர்

கலைநகரில் வாழும் மக்கள், சைவமும்,
தமிழும், கல்வியும், அன்பும், பண்பும்
பெற்று வாழவேண்டுமென்ற பெருநோக்
கத்தோடு இந்நிலையம் உருவாக்கப்பட்டது.
இந்நிலையச் சார்பாக நூலநிலையம், வாசிக
சாலை, இயல்மன்றம் சுகாதார மன்றம்,
சமய மன்றம், சமாதான மன்றம், நாடக
மன்றம் என்பன தனித்தனி இயங்குகின்
றன.

''சுத்தம் சோறு இடும்''என்னும் கோள்
கையை மேற்கொண்டு தொண்டு செய்கி
றது. இல்லங்கள் நெருங்கிய இக்கலை நக
ரில் கிழமையில் இருநாளைக்கு ஒவ்வொரு
இல்லமாகச் சென்று சுத்தத்தைப் பரிசோ
திக்கின்றது. சிறுவர்தொட்டு வளர்ந்தோர்
வரை பல துறைகளிலும் வளர்ச்சிபெற மன்
றங்கள் உதவியளிக்கின்றன.

''இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்''.

என்னும் வள்ளுவர் வாக்கே சமாதான மன்
றத்தின் குறிக்கோளாகும். இந்நகரில்
வரும் சில பிரச்சினைகளையும், சிறு சண்டை
களையும் குறிக்கோளின்படி தீர்த்து வைக்கி
றது.

கலைநகரில் வாழும் இளைஞர்களும்,
வாலிபர்களும், முதியோர்களும் இந்நிலையத்
தைக் கலைக்கூட மாக்கவேண்டுமென்ற
எண்ணத்தோடு பணிபுரிகின்றனர். இந்
நிலையத்தைப் பார்த்தாலும், நினைத்தாலும்,
படித்தாலும், பக்கம்நின்று கேட்டாலும்,
பரிந்துணர்ந்தாலும், தமிழையும், சமயத்
தையும், கலையையும், அன்பையும், பண்
பையும் பயக்குமென்பது மெய்ப்பொருள்.



## ஸ்ரீ சிதம்பரேஸ்வர நிலையம் — காரைநகர்

சிவகாமிஅம்மன் கோவில் வீதியி
லுள்ள ஒரு கட்டடத்தில் ''சிவகாமி
அம்பாள் சனசமூக நிலையம்'' என்
னும் பெயருடன் நிறுவப்பட்ட இந்
நிலையம் இன்று இப்பெயருடன்
விளங்குகிறது.

இந்நிலையம் தனக்கெனச் சொந்
தமான கட்டடத்தில் அமைவதற்கு
அங்கத்தவரின் விடாமுயற்சியே காரண
ணமாகும். காணி வாங்குதற்குரிய
பணத்தை சிவகாமிஅம்பாள் ஐக்கிய
பண்டசாலை அங்கத்தவர்களே தந்
துதவினார்கள்.

பிரார்த்தனைச்சபை, இளைஞர்கழ
கம், நாடகமன்றம் மாணவர்கழகம்
ஆகியன நிலையத்திற்கு உப சபைக
ளாக விளங்குகின்றன. இவ்வுபசபை
கள் வருடந்தோறும் விளையாட்டுப்
போட்டிகள் நடத்தி வருகின்றன.
சமாசத்தினால் நடத்தப்படும் போட்
டிகள் நாடகங்களில் பங்குபற்றி
வெற்றி பெற்றுள்ளது. அகில இலங்
கைச் சைவசமயபாடப் பரீட்சைகளி
லும் பங்குபற்றி சித்திபெற்றுவருகின்
றது. தீவுப்பகுதி சனசமூகநிலைய உப
சமாசத்திலும், யாழ்ப்பாண மாவட்ட
சனசமூக நிலைய சமாசத்திலும் அங்
கம்வகித்து வருகின்றது.

## ஸ்ரீ முருகன் நிலையம் — பண்ணாகம் தெற்கு

பண்ணாகம் தெற்கு இளைஞர்க
ளின் நன்முயற்சியால் 1936-ஆம்
ஆண்டு ஓர் இளைஞர் சங்கம் நிறுவப்
பட்டது. இவ்விளைஞர் சங்கம் விசு
வத்தனை முருகமூர்த்தி கோவிலுக்கு
அருகாமையில் இவ்வாசகசாலையை
அமைத்தனர்.

வருடந்தோறும் சமயகுரவர் குரு
பூசைகள் சரஸ்வதிபூசை, தைப்பொங்
கற் பண்டிகை, வருடப்பிறப்பு என்
பன சிறப்பாகக் கொண்டாடப்படு
கின்றன. வெள்ளிக்கிழமைதோறும்
ஐம்பதுக்கு மேற்பட்ட அங்கத்தவர்க
ளைக்கொண்ட குழுவினர் முருகமூர்த்தி
கோவிலில் கூட்டுப் பிரார்த்தனை
நடத்தி வருகிறார்கள். திருவெம்பா
வைக் காலமாகிய பத்து நாட்களும்
நிலையத்தின் சார்பில் பூசைகள் விசே
டமாய் நடக்கின்றன.

அங்கத்தவர்களின் முயற்சியால்
பல தின, வார, மாதப் பத்திரிகைகள்
வரவழைக்கப்படுகின்றன. 300-க்கு
மேற்பட்ட பல புத்தகங்கள் இருக்
கின்றன. இந்நிலையத்தின் தொண்
டர்படையினர் கிராம மக்களுக்கு
உதவியளித்து வருகின்றனர். இவர்
களின் ஊக்கத்தால் இங்கு ஓர் உப
தபாற்கந்தோரும் நடைபெற்றுவருகி
றது.

# அருணோதய நிலையம் — கிளிநொச்சி



நிருவாகசபையினர்

உழவுத் தொழிலை உயிர்த்ததாகக் கொண்ட குடியேற்றப் பகுதியில் இந்நிலையம் தலைசிறந்து விளங்குகிறது. கிளிநொச்சிப் பகுதியில் வசிக்கும் எல்லாப் பொதுமக்களுக்கும், சிறப்பாக கிறிஸ்தவ சமுதாயத்தினருக்கும் நற்பணி புரியும் நோக்கமாக பல சமூக நல்லியக்கங்கள் உருவாக்கப்பட்டன. ஆண்களுக்கு அருணோதய நிலையமும், பெண்களுக்கு அருணோதய மாதர் சங்கமும், இருபாலார்க்குமென அருணோதய ஐக்கிய நாணய சங்கமும் தொண்டாற்றுகின்றன. இவ்வியக்கங்கள் திருமறைப்பணி புரிந்துவந்த கத்தோலிக்க குருமாரின் கண்காணிப்பில் நடைபெற்று வருகின்றன.

இச்சங்கத்தை உருவாக்கி வளர்த்து வந்த திருமறைத்தந்தை எம். இமானுவேல் அவர்களுக்கு சங்கம் என்றும் நன்றியுள்ளது. அன்னார் வேற்றிடம் மாற்றலாகிச் சென்றதும் இந்நிலையம் சிலகாலம் சோர்வுற்றது. சென்ற ஆண்டு தொடக்கம் புத்துயிர் பெற்று விளங்குகிறது. சென் திரேசா மாவித்தியாலய மேல்வகுப்பு மாணவர் பலர் அங்கத்தினராகச் சேர்க்கப்பட்டனர். மாணவர்களுக்கு ஏற்ற சனசமூகப் பயிற்சி கொடுப்பதை நோக்கமாகக்கொண்டே இயங்கி வருகிறது. கலைப்பகுதி, வாசகசாலை விளையாட்டு, சமயவிருத்தி எனப் பல துறைகளில் செயல்கள் நடைபெற்று வருகின்றன.

### மலைச்சாரலிலே ஒரு காட்சி

அணில்கள் துள்ளிஓடும் பலாக்கிளைகளில் உள்ள பெரும் பழங்களைப் பறிப்பதற்குக் குறவர் குடிசைகளை மலைச் சாரலிலே அமைத்தனர். அக்கூரைகள் மேல் வேங்கைப்பூக்கள் விழுந்து சிதறியிருந்தன. அங்கேவந்த மதவேழமொன்று இக்குடிசை ஒன்றைக் கண்டு புள்ளித் தோலமைந்த புலியென்று பட்டு முங்கிற் சாட்டிற்குள் ஓட மூங்கில்கள் சடசடவென்று முறிந்தன.

— அகநானூற்றிலே கபிலர்





# முருகானந்த நிலையம் — நவாலி

இக்கிராம மக்களின் நன்கொடையைக் கொண்டே 1951-ஆம் ஆண்டு இந்நிலையம் ஆரம்பிக்கப்பட்டது. முதலில் 21 அங்கத்தவரைக் கொண்டிருந்த நிலையம் தற்போது 150 அங்கத்தவர்களுடன் விளங்குகிறது.

சனசமூக நிலையங்களின் சமாசப் போட்டிகளில் எமது நிலையம் பங்குபற்றுகிறது. சென்ற ஆண்டு நடாத்திய "சோக்கிறற்றீஸ் நாடகம்" சமாசப்போட்டியில் முதலிடம் பெற்றமையை மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறோம். நிலையங்கள் சார்பாக நடைபெறும் பல போட்டிகளிலும் எமது நிலையம் பங்குபற்றி வருகிறது. 1956-இல் நடந்த கலைவிழாவில் "சேரன் செங்குட்டுவன்" என்னும் நாடகத்தைச் சிறப்பாக நடித்துப் பெருமை தேடிக்கொண்டது.

பத்து ஆண்டு காலமாக நாம் ஆற்றிய தொண்டினால் மக்களால் மதிக்கப்படும் ஒரு ஸ்தாபனமாக வளர்ந்துள்ளது. பொது விடயங்கள் பற்றிய பிரச்சினைகள் நேரும்போதெல்லாம் 'வாசகசாலைக் கூட்டத்திலே பேசி முடிவுசெய்தால் எங்களுக்குச் சரிதான்" என மக்கள் கூறுவதே நிலைய வளர்ச்சிக்கு எடுத்துக்காட்டாகும்.

—————

# சன்மார்க்க நிலையம் — குரும்பசிட்டி

குரும்பசிட்டியில் வாழும் மக்களின் கல்வி, கலை, கலாச்சாரம், ஒழுக்கம், சமய வளர்ச்சி, சுகாதாரம், விளையாட்டுக்கள் என்பவற்றில் விருத்தி செய்ய இந்நிலையம் உதவி அளித்து வருகின்றது. மக்களை நன்னெறிப் படுத்துவதற்குச் சமய வாழ்வு எத்தனை அவசியம் என்பதை இந்நிலையம் மக்களுக்கு அறிவுறுத்துகிறது. சன்மார்க்கசபை மண்டபத்திலும், பிள்ளையார் அம்பாள் கோவில்களிலும் கூட்டுப் பிரார்த்தனைகள், குருபூசைகள் ஆராதனைகள், சொற்பொழிவுகள் முதலியவற்றை நடத்துகிறது. கல்வி கலாச்சார வாழ்விலும் ஊக்கம் காட்டி வருகிறது. மாணவர்களின் திறனை விருத்தி செய்ய வியாசப் போட்டிகள், பேச்சுப் போட்டிகள் நடைபெறுகின்றன. மாணவர்கள் 'சன்மார்க்கம்" என்னும் சிறந்த கையெழுத்துப் பத்திரிகையை நடத்தி வருகிறார்கள். கலை சம்பந்தமாக 1958-ஆம் ஆண்டு இலங்கையிலும் இந்தியாவிலுமிருந்து வெளிவரும் பத்திரிகைகளையும் சேர்த்து ஒரு கண்காட்சி காண்பிக்கப்பட்டது.

கானம், நாடகம் முதலிய கலை நிகழ்ச்சிகளிலும் நிலையம் பணிபுரிகிறது. தாகம் மன்னிப்பு, இருமனம், சங்கிலியன், பழிக்குப்பழி, பகையும் பாசமும் உட்பட பல சரித்திர, சமூக நாடகங்கள் மேடை ஏற்றப்பட்டிருக்கின்றன. கிராமிய நாடகங்கள்,

காவடி, கும்மி, கொட்டகைக் கூத்து என்பனவும் நடைபெறுகின்றன.

வருடந்தோறும் விளையாட்டுப் போட்டி, கைப்பந்தாட்டம், உதைபந்தாட்டம், கிறிக்கற்போட்டி என்பனவும் நடத்தப்படுகின்றன. சுகாதார வாழ்வு, நோய்த்தடுப்பு முறை, மலகூட உபயோகம், குடிசைக் கைத்தொழில், தையல்வேலை, பன்னவேலை, நெசவுவேலை, ஆடு, மாடு, கோழி வளர்த்தல், சேமிப்பு இயக்கம், முதலிய பல துறைகளில் மக்களுக்கு வழிகாட்டுகின்றது. இவற்றிற் கெல்லாம் தொண்டர்படை, நீதிச்சபை என்பன துணைபுரிகின்றன.

இந்நிலையத்தால் வெளியிடப்பட்ட இலக்கியமஞ்சரி, சைவபோதினி என்னும் நூல்கள் கல்விப் பகுதியினரால் அங்கீகரிக்கப்பட்டிருப்பதே இதன் வளர்ச்சிக்கு எடுத்துக் காட்டாகும்.

---

# ஸ்ரீ முருகன் நிலையம் — அச்சுவேலி

1951-ஆம் ஆண்டு ஸ்ரீ முருகன் வாலிபர் சங்கமென்னும் பெயருடன் நிறுவப்பட்ட இந்நிலையம் இன்று ஸ்ரீ முருகன் நிலையமென அழைக்கப்படுகிறது. முதலில் இச்சங்கத்தை நிறுவுதற்கு தனது இல்லத்தில் இடந்தந்த திரு. க. தம்பு அவர்களே சங்கத்திற்கு நிலையான கட்டடம் அமைப்பதற்கும் நிலத்தை நன்கொடையாகத் தந்துதவினர். அவருக்கு நிலையம் என்றும் கடமைப்பட்டிருக்கிறது. அங்கத்தவரின் ஆக்க முயற்சியினால் இன்று நிலையான கட்டடத்தில் விளங்குகிறது.

நிலையத்தில்தினந்தோறும் பெரிய புராணம் படிப்பிக்கப்பட்டு வருகின்றது. இதனைப் பெருந்தொகையானோர் கேட்டு அறிவைப் பெறுகின்றனர், ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் தேவார திருவாசகங்களை பாணவர்களுக்குச் சொல்லிக்கொடுக்கின்றனர். தின, வார, மாதப் பத்திரிகைகள் தருவிக்கப்பட்டு செய்திகளை அறிய உதவுகின்றனர். நிலைய வாலிபர்கள் அதிகமாகச் சுதேச விளையாட்டுக்களில் ஊக்கங்காட்டி வருகின்றனர்.

இந்நிலையத்தில் சரஸ்வதி பூசை, திருவள்ளுவர் திருநாள், மகாத்மா தினம் என்பன அதிசிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. கலைவளர்ச்சியில் காலத்துக்குக் காலம் கவனம் செலுத்தி வருகிறது. இலவச பால் நிலையம் ஒன்றை ஏற்படுத்துவதற்கும நிலையத்திற்குச் சொந்தமாக ஒரு வானொலிக் கருவியை வாங்குவதற்கும் முயற்சி எடுத்து வருகின்றார்கள்.

---





வலிகிழக்கு உபசமாச நிருவாகசபை 1960—61.



யாழ்ப்பாண நகர உபசமாச நிருவாகசபை 1960—61.

# இளந்தாரிகோவில் நிலையம் — இணுவில் கிழக்கு



திருவாகசபையினர்

இளந்தாரி கோவில் சனசமூக நிலையம் கிராமச்சங்கத் தலைவரும், உடுவிற் தொகுதிப் பாராளுமன்ற உறுப்பினருமாகிய திரு. வி. தருமலிங்கம் அவர்களால் 1954 இல் ஆரம்பிக்கப்பட்டது.

திருவள்ளுவர், விவேகானந்தர், காந்தி நினைவு விழாக்கள், வருடாந்த விழா என்பன வருடந்தோறும் கொண்டாடப்படுகின்றன. இளைஞர் கலாவிருத்திச்சங்கம் என்ற பெயருடன் ஆரம்பிக்கப்பட்ட சங்கம் இன்று வாலிபர் சங்கமென்னும் பெயருடன் இயங்கி வருகிறது. இதன் பொறுப்பிலேயே உதைபந்தாட்டமும், கைப்பந்தாட்டமும் நடைபெறுகின்றன. இக்கோஷ்டியினர் வேறு நிலையங்களுடன் போட்டியிட்டு வெற்றியுமடைந்திருக்கின்றனர்.

இந் நிலையத்தால் ஆரம்பிக்கப்பட்ட "கம்பன் நூல்நிலையம்" நூற்றுக்கணக்கான புத்தகங்களை யுடையதாய் மாணவர் கலாவிருத்திக்குச் சேவைசெய்து வருகின்றனர். சமய அடிப்படையில் இந்நிலையத்தினரால் "சைவத் திருநெறிக்கழகம்" ஆரம்பிக்கப்பட்டது. இக்கழகம வருடந்தோறும் சமயகுரவர் பூசை, காரைக்காலம்மையார் குருபூசை, நவராத்திரி, வருடப்பிறப்பு, பொங்கல்விழா என்பவற்றை நடத்தி வருகின்றது. உடுவில் கிராமச்சங்கத்தவரால் நடத்தப்படும் இலக்கியக் கலைவிழாவில் பேச்சு, தர்க்கம் என்பவற்றில் மாணவர் பங்குகொண்டு வெற்றியுமடைந்தனர்.

இந்நிலைய வளர்ச்சிக்கு எடுத்துக்காட்டாய் அமைவது நிலையத்தால் கொண்டாடப்பட்ட முத்தமிழ் விழாவாகும். முத்தமிழின் கூறுகளாகிய இயல், இசை, நாடகம் என்ற மூன்றினது பெருமைக்கும் இலக்காக மூன்று தினங்களில் ஒவ்வொரு பிரிவுகளும் நடைபெற்றன. ஒவ்வொரு தினமும் பல பெரியார்கள் வந்து அறிவுரை புகட்டினார்கள் மூன்றும் நாள் நாடகத் தமிழில் சொற்பொழிவுகளும் நாடகங்களும் இடம்பெற்றன.

